# அமுதசுரபி

பிப்ரவரி'94 விலை ரூ.6



பிப்ரவரி 94 மலர் : 46

# அமுதசுரபி

எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ் மொழி
என்றென்றும் வாழியவே - பாரதியார்

ஸ்ரீமுக - மாசி இதழ் : 10

## ஆன்மிகம்



## இலக்கியம்



## சிறுகதை



## தொடர்கதை



## கவிதை



## தொழில் வளம்



## இளைய அமுதம்

தயாரிப்பு: குண்டுமணி



## பாவை பக்கங்கள்

தயாரிப்பு : கிரிஜா ராகவன்



## கலை



## நாணயம்

தயாரிப்பு : பவானி



## ஜோதிடம்



● பதிப்பாளர் : ஏ.வி. எஸ். ராஜா ● கௌரவ இலக்கிய ஆலோசகர் : என். வி. சுப்பிரமணியன், ஐ. ஆர். டி. எஸ்., ● ஆசிரியர் : கலைமாமணி விக்கிரமன் ● இதழ் ஆப்செட் அமைப்பு : சிவகுமார் ● விலை : ரூ. 6/- ● அட்டையில் : ஸ்ரீ சத்ய சாய்பாபா - படம் : யோகா

# பகவான் ஸ்ரீ சத்யசாய்பாபா பாதபிரதிஷ்டா மகோத்சவம்

இலட்சக்கணக்கான பக்தர்கள் பகவான் ஸ்ரீ சத்யசாய் பாபாவைத் தரிசனம் செய்ய, பிரசாந்தி நிலையம் நோக்கி வருகின்றனர். அவருடைய தரிசனம் மட்டும் அல்லாமல் அவரது திருப்பாத கமலங்களைத் தொட்டு வணங்க விருப்பம் கொள்கின்றனர். வருவோர் அனைவரும் பகவானின் பாதங்களைத் தொட்டு நமஸ்காரம் செய்ய இயலாது. எனவே பகவானின் அருளாசியுடன் தங்கத்தால் பாதுகை செய்து அதற்குப் பூஜை, அபிஷேக ஆராதனைகள் செய்து பகவானின் பொற்பாத கமலங்களில் அணிவித்துப் பாத பூஜை செய்து பிரசாந்தி மந்திரில் பிரதிஷ்டை செய்வதன் மூலம் பக்தர்கள் அனைவரும் பாததரிசன நமஸ்காரம் செய்வதற்கு ஏதுவாக அமையும் என்று சாயி பக்தராகிய மதுரை திரு பி.எல்.ஏ. சுப்பிரமணியம் செட்டியார் ஒரு யோசனையைத் தெரிவித்தார். அதன்படி அவர் முயற்சியால் பல்வேறு ஊர்களிலிருந்து 108 சாயி பக்தர்களைக் கொண்டு 108 ஜோடி தங்க பாதுகைகளைச் செய்து சென்னையிலும் மற்ற நகரங்களிலும் பெரிய ஊர்வலம் நடத்தி உரிய பூஜை செய்வித்து புட்டபர்த்தியிலுள்ள பிரசாந்தி நிலையம் எடுத்துச் சென்றனர்.

108 திருப்பாதுகைகளுடன் அன்பர்கள் தம்பதி சமேதரராய் வரிசை வரிசையாக உட்கார்ந்து பூஜையும் அபிஷேகமும் செய்தனர். கணபதி ஹோமம், நவக்ரஹ ஹோமம் மிருத்யஞ்ச ருத்ர ஹோமம், பகவான் ஸ்ரீ சத்ய சாய்பாபா பாதுகா சகஸ்ர நாம ஹோமம் ஆகியவை முறைப்படி நிகழ்த்தினர். பின்னர் பால், தயிர், சந்தனம், தேன், பஞ்சாமிர்தம், பழச்சாறு, பன்னீர், இளநீர், விபூதி ஆகிய ஒன்பது திரவியங்களால் 108 பாதுகைகளுக்கு ஒவ்வொரு தம்பதியரும் மகாபிஷேகம் செய்தனர்.

புட்டபர்த்தியில் உள்ள பூர்ண சந்திரா ஆடிட்டோரியம் என்பது பாரத நாட்டிலேயே மிகப் பெரியதும் நவீன ஒலி, ஒளி சாதனங்கள் அமையப்பெற்றதும், தூண்களே இல்லாமல் நூதன கட்டடக் கலைக்கு ஓர் எடுத்துக் காட்டாக மிக அழகாக அமைந்த அரங்கம். இந்த அரங்கத்தில் பாதுகா பிரதிஷ்ட விழா ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அரங்கம் நிரம்பி வழிந்து பக்தர்கள் அனைவரும் தங்கள் முன்புள்ள அழகான இளஞ்சிவப்பு நிறத் திரை விலகும் நேரத்தை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர். அந்த நேரமும் வந்து, திரை விலகியவுடன் பூர்ண சந்திரனைப் போல புன்முறுவல் பூத்த வதனத்துடன் பகவான் மெல்ல நடந்து வந்த காட்சி எல்லோரையும் மெய்மறக்கச் செய்தது.

பகவான் ஸ்ரீ சத்ய சாய்பாபா அவர்கள் தமது உரையில் தெய்வத்தை இன்றைய நிலையில் எளிதாக அடைவதற்குச் சிறந்த மார்க்கங்கள் நாம லிகித ஜபமும் பகவானின் பாதுகை வழிபாடும்தான் என்பதை மிகத் தெளிவாக எடுத்துரைத்தார்கள். அதாவது பகவானின் பாதங்களை இறுகப் பற்றிக் கொள்வதன் மூலம் நாம் வாழ்வின் துன்பங்களிலிருந்து மீள முடியும் என்பதை மிக அருமையான உவமை நயத்துடன் எடுத்துரைத்தார்கள்.

ஒரு சமயம் தஞ்சை மன்னர் அனுப்பிய பெருஞ் செல்வத்தை தியாகராஜ சுவாமிகள் பெற்றுக் கொள்ள மறுத்தார். அரசர் காரணம் கேட்க, அரசே! "நான் இராமனின் இரு திருப்பாதங்களையும் என் இரு கரங்களால் இறுகப் பற்றிக் கொண்டுள்ளேன். அதை விடுத்து உன் பெருஞ் செல்வத்தைப் பெற வேண்டி என் இரு கரங்களையும் விலக்கிக் கொள்ள விருப்பம் இல்லை. எனக்கு இராம பாதங்களே பெரும் செல்வங்கள். ஆகவே உன் பெரும் பொருளை எடுத்துச் செல்லுங்கள்" என்று கூறிய உயர் கருத்துகள் பாதமகிமையை உணர்த்திக் காட்டின.

பின்பு நறுமணமிக்க மலர்களாலும் 1008 வெள்ளிக்காசுகளாலும், பொன்னாலும் வெள்ளியாலும் செய்த பூக்களாலும் மதுரை செட்டியாரும் அவரது மகன் திரு. சீனிவாச செட்டியாரும் பகவானின் திருப்பாதங்களுக்கு அபிஷேகம் செய்தார்கள். பகவானுக்குக் கற்பூர ஆரத்தி எடுத்தார்கள். அனைவரும் பாடிய ஆரத்திப்பாடல் நிறைவேறும் வரை பகவான் அரங்கத்திலேயே நின்று நாற்புறமும் நிறைந்திருந்த பக்தர்களுக்கு இருகரத்தாலும் ஆசி வழங்கினார். ●

— யோகா

# ஒரு தியான மையச் செய்திகள்



## 'கர்மயோகி'

சில ஆண்டுகட்கு முன் 'அமுதசுரபி'யில் தியானம் என்ற ஒரு கட்டுரையை எழுதி, அன்பர்கள் வீடுகள் தியானம் நடக்கும் இட மாகவும், தியான மையங்களாகவும் மாற வேண்டும் என்று கேட்டுக் கொண்டேன். அதன் பலனாகப் பல இடங்களிலும், ஏராளமான வீடுகளிலும் தியானம் தற்பொழுது நடக்கிறது. மையமாக ஓரிடம் அமைந்தால் அங்கு தினமும் பக்தர்கள் வருகிறார்கள். சுமார் 100க்கு மேற்பட்டவர் தினமும் ஒரு மையத்திற்கு வருகிறார்கள்.

அன்னை, ஸ்ரீ அரவிந்தர் படங்கள் வெறும் படங்களில்லை. நாங்கள் படத்தில் உயிர்ப்புட னிருக்கிறோம் என்கிறார் அன்னை. மையங் களுக்கு வரும் பக்தர்கள் மலர் அலங்காரங் களையும், அங்குள்ள சூழலையும் கண்டு, ஆசிரமத்தில் சமாதி தரிசனம் செய்ததைப் போலிருக்கிறது என்பதுண்டு. மனம் நிறைந்த பக்தியும், அறிவு பூரணமாகும் நம்பிக்கையு மிருந்தால், தூய்மை நிறைந்த சூழலில், திரு வுருவப் படங்கள் திவ்ய தரிசனம் தருவதைக் காணலாம். அன்னை, ஸ்ரீ அரவிந்தர் சூழல் எங்கும் ஒன்று போலிருக்கும் என்பது அன்பர் கள் அனுபவம். சூழலின் செறிவு பக்தியின் ஆழத்தை மட்டும் பொறுத்ததாகும்.

ஒரு தியான மையத்தில், ஆரம்பித்ததி லிருந்து பெரும்பாலும் பக்தர்கள் திருமணம் போன்ற பிரச்னை தீர வேண்டிக் கொள்வ துண்டு. இங்கு அதுபோல் 65 திருமணம் முடிந் துள்ளது என்று கேள்விப்பட்டு, அம்மையத்தில் நிகழ்ந்த வேறு பல நிகழ்ச்சிகளைச் சேர்த்து தரும்படி கேட்டுக் கொண்டேன். அவற்றைக் கீழே விவரிக்கின்றேன்.

ஓர் அன்பர் தன் வீட்டு பூஜை அறையில் சுமார் 200க்கு மேற்பட்டப் படங்களை வைத்து, தினமும் சமாதிக்கு ஆள் அனுப்பி புஷ்ப பிரசா தம் பெற்று வந்து, சிறப்பாக வைத்திருக்கிறார். அங்கு வருபவர்கள் அறையை விட்டுப் போக மனமில்லாமல் நெடுநேரம் நின்று வருகிறார் கள். தன் அன்றாடக் கடமைகளை அன்னைக்குக் கடிதமாக எழுதுவதாகவும், அப்படிச் சில நாள் தொடர்ந்து எழுதியபின் பிரச்னைகள் தீர்வதாக வும் கூறினார். ஒரு நாள் அவர் வீட்டில் அன் னைக்கு உடல் நலம் குன்றி ஆஸ்பத்திரிக்குப் போக வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு வீட்டை விட்டு இறங்கி வெளியில் வந்த சமயம், அவர் ஒரு யோசனை சொன்னார். நோய் என்பது வேறு. நம்பிக்கை என்பது வேறு. இந்த நோயை ஏன் நாம் நம்பிக்கையால் மட்டும் தீர்த்துக் கொள்ள முடிவு செய்யக் கூடாது என்றார். இதைக் கேட்ட அண்ணன், அண்ணி யைக் கலந்தார். அண்ணி சம்மதம் தெரிவித் தார். அவர் பூஜை அறைக்குப் போய் நம்பிக்கை யுடன் தியானம் செய்தார். தலை சுற்றல், வாந்தி, வயிற்றுப் போக்கு கட்டு மீறியதால் ஆஸ்பத்திரிக்குக் கிளம்பியவர் தலை சுற்ற வில்லை, வாந்தி எடுப்பது போலில்லை, வயிறு சற்றுத் தேவலாம் என்றார். சரி ஆசிரமம் செல் வோம் என்று முடிவு செய்து இங்கு வந்தனர். வந்தவரைப் பார்த்த எனக்கு அவர் முகத் திலோ, தொனியிலோ, நலிவு தோன்றவில்லை. ஒரு நாளிருந்துவிட்டு கலகலப்பாகத் திரும்பி னார்கள். இவர் வீட்டு பூஜை அறைக்கு வெளியி லிருந்து யாரும் வருவதில்லை. இவ்வூர் தியான மையத்திற்கு பக்தர்கள் வந்தபடியிருப்பார்கள். அதிகமான பேர் வருவதால் அவர்களுடைய பக்தியின் திறன் சூழலை உயர்த்திவிட்டது.

கீழ்வரும் செய்திகள் அம்மையத்தைப் பற்றி யதேயாகும்.

1. ஓய்வு பெற்ற உயர் சர்க்கார் அதிகாரியின் வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சி. ஆசாரம் மிக்கவர். ஸ்ரீவித்யா உபாசகர். அவருக்கு இரு பெண்கள், ஒரு பிள்ளை. 80 வயது தாண்டிய மாமியாருக்கு ஆபரேஷன் நடக்கும் சமயத்தில் அன்னையைப் பற்றிக் கேள்விப்பட்டு தியான மையம் வந்து புஷ்பப் பிரசாதம் பெற்று ஆபரேஷனுக்குப் போனார்கள். டாக்டர்கள் கைவிட்டபின் உபாசகருடைய பிரார்த்தனை யால் மாமியார் உடல் தேறி, வீடுவந்து மீண்டும் தன் வேலைகளைச் செய்தார். இதனால் அவர் குடும்பத்தினருக்கு அன்னைமீது நம்பிக்கை ஏற்பட்டது.

மகன் எதிர்வீட்டிலிருந்தபோதிலும், மனம் கசந்ததால் போக்குவரவில்லாததால், உபா சகர் அன்னைக்கு சுமுகம் என்ற மலரை சமர்ப் பித்து கசப்பு நீங்கி கனிவு ஏற்படும் என்ற நம்பிக்கையோடு பிரார்த்தனை செய்தார். தன் மனத்தின் கடுமையை விட்டுவிட்டு பிரார்த் தனையைத் தொடர்ந்தார். பத்தாம் நாள் மகன் தானே வந்து அம்மாவுடன் பிரியமாகப் பேசி எனக்கு உன் கையால் ஏதாவது சாப்பிடக் கொடுக்க வேண்டுமென்று கேட்டான். சுமுகம் வந்தது. பின்னர் அமெரிக்காவிற்கு வேலை வந்தது. பெற்றோரை அழைத்துப் போய் விட்டான். அமெரிக்காவிலிருந்து அவர் தன் மகன் வாழ்வைப் பற்றி மையத்திற்கு விவர மாகக் கடிதம் எழுதினார்.

2. தகப்பனாரில்லாத குடும்பத்தில் வீணை சொல்லிக் கொடுக்கும் வருமானத்தை நம்பிய குடும்பம் இனி அதை நம்ப முடியாது என்ற நிலையையும் தாண்டும் நேரத்தில் பஸ்ஸில் அன்னையைப் பற்றிக் கேள்விப்பட்டு தியான மையம் வந்து பக்தியுடன் பிரார்த்தித்து வீடு திரும்புமுன் ஒரு டியூஷன் கிடைத்து அளவிலா சந்தோஷப்பட்ட நிலையில் அவர்கள் 'மூலமாகச் சில நாள்களில் மற்றொன்றும் கிடைத்து, அவர்கள் மூலமாக ஓர் இசைப்பள்ளியில் வேலை கிடைத்தது. புதியதாக ஆரம்பிக்கும் பள்ளி என்பதால் வாய்ப்பு அதிகமாகக் கிடைத் தது. எல்லாம் சேர்ந்து ஒரு மாத காலத்தில் 3000/- ரூபாய் மாத வருமானம் பெற்றனர் அக் குடும்பத்தார். மேலும் மாதர் சங்கம் ஒன்றி லிருந்து அழைப்பு வந்தது. அருளின் செயல் தொடர்கிறது.

அவர்கள் அனுபவத்தை வர்ணித்து தியான மையம் நடத்துபவர் சொல்கிறார்:

"வாழ்வு கானல் நீராகி, மயக்கத்தைத் தந்தபோது ஸ்ரீ அன்னையை உறுதியுடன் நம்பிப் பிரார்த்தித்தது அக் குடும்பம். தாங்களே ஓர் இசைப் பள்ளியை ஆரம் பிக்கலாமா என்பது அவர்களுடைய சிந்தனை. மூன்று மாதங்களில் ஏற்பட்ட மாற்றம் இது".

3. அன்பான செல்வந்தர் குடும்பப் பிள்ளை கள் நான்கு பேர். ஒருவர் பிரம்மசாரி. மற்ற வர்களுடைய திருமணமும் குடும்பத்தின் அன்பை, போட்டியாகவும், வெறுப்பாகவும் மாற்ற உதவியது. தகப்பனுக்குப் பின் மோதல் கள், மனக்கசப்பு, குறை, ஏமாற்றம் நிறைந்து பாகப் பிரிவினை, பாகப் பிரிவினையாகி, கோர்ட்டுக்குப் போய்விட்டது.

இந்த நிலை சுமார் 10 வருஷங்களுக்கு மேல் நீடித்தது. பிரம்மச்சாரி அன்னை பக்தரானார். மலர்களை நாடினார். அவருக்கிருந்த இதயக் கோளாறால் நடக்கவும் அஞ்சியவர், தினமும் பல மைல் சைக்கிள் விட ஆரம்பித்தார். 30 மலர் கிடைத்ததைத் தொடர்ந்து சேகரம் செய்து ஒருநாள் 160-ம் பின்னர் 200 மலர்களும் கிடைத் தன. இத்துடன் ஆயிரம் கோடியை தாண்டிய திட்டம் அவரை நாடி வந்தது. அவர் மனம் இழந்த குடும்ப பாகத்தைப் பெறுவதெப்படி என்பதில் மட்டும் இருந்தது.

'சுமுகம்' பிரச்னையைத் தீர்க்கும் என்பது தியான மையத்தில் மந்திரம்போல் ஒலிப்பதைக் கண்டு, சுமுகம் என்ற மலரை அளவுகடந்து தேடி அன்னைக்கு அற்புதமான உணர்வுடன் சமர்ப்பித்தார்.

ஒருநாள் ரோடில் போய்க் கொண்டிருந்த பொழுது 'தம்பி' என்ற அண்ணன் குரல் கேட்டது. சில மாதங்களில் கோர்ட் கேஸ் வாபஸ் செய்யப்பட்டது. பாசம் மீண்டும் தன் ஆதிக்கத்தை ஏற்படுத்தியது.

4. வாழ்க்கையைப் புதியதாக ஆரம்பிக்க வேலை தேடுவதற்குப் பதிலாக, தொழிலை நாடுவது இன்று சகஜமாகி விட்டது. தொழில் நடத்த பாங்கின் உதவியை நாடிய இளைஞர், தன் அவசரம் வேறு, பாங்கின் சட்டதிட் டங்களின் போக்கு வேறு என்று சீக்கிரம் கண்டுபிடித்தார். ஏன், இங்கு வருகிறீர்கள் என்பது போன்ற வரவேற்பு, அதற்கே உரிய எண்ணங்களை மனத்தில் ஏற்படுத்தியபின் சமூகம் அறிந்த அத்தனை பரிகாரங்களையும் பின்பற்றி நம்பிக்கை இழந்த நிலையில், தியான மையத்தைத் தேடி வந்தார்.

மையத்தின் தலைவர் அவரிடம், "உங்கள் மனம் எரிச்சலாக இருக்கிறது. அதிகாரிகள் மீது கோபமாக இருக்கிறது. கோபம் காரி யத்தைக் கெடுக்கும். அன்னையின் ஆசி நிச்சய

மாக உண்டு. ஆனால் கோபம் உள்ளவரை ஆசி பலிக்காது. மனத்தை மாற்றிக்கொண்டு நடக்க வேண்டியதைப் பார்க்க வேண்டும். மனம் தெளிவாக, நிதானமாக இருந்தால், பிரார்த்தனைக்குப் பலனுண்டு" என்றார்.

ஒருவாறு மனத்லத தேற்றிக கொண்டு அன்பர் கோபத்தைக் கட்டுப்படுத்தினார். மனம் அடங்குவது தெரிந்தது. உடனே பாங்குக்குப் போகப்பிரியம். அவசரம் கூடாது என்று தெரிந்தும் போனார். இதுவரை எரிச்சல்பட்ட பாங்க் கிளர்க் முகமலர்ச்சியுடன் வரவேற்றார். ஏன் இவ்வளவு நாள் வரவில்லை. ஏஜென்டைப் பாருங்கள் என்றார். ஏஜென்டைப் பார்க்கப் போனால் அவரே எதிரில் வந்தார். "உங்கள் பணம் உத்தரவாகிவிட்டது. உங்களைத்தான் தேடிக்கொண்டிருந்தேன்" என்றார்.

5. செல்வந்தர் குடும்பத்தில் செல்லமாக வளர்ந்தவர், அரசியலில் சேர்ந்து, தலைவருக்கு அத்தியந்தமாகி, அவர் ஆர்ப்பாட்டங்களுக்கு உடந்தையாக இருந்தபொழுது, இவரது செல்வாக்கு எத்தனை பேருக்கு, என்ன ஊறு செய்தது என்பதை அறிய முடியவில்லை. தலைவர், பதவியிழந்தார். ஊழியருக்கு அத்துடன் எல்லாம் முடிந்துவிட்டது. இனி தன் குடும்ப ஆதரவில் வாழ வேண்டும் என்ற நிலைமை. உயரத்திலிருந்து, மட்டத்திற்கு வரும் பொழுது, இடைப்பட்ட காலத்தில் சேருவது அனுபவம், அத்துடன் கடன். கடன் கொடுத்தவர்கள் புதிய அனுபவங்களை இவருக்கும், இவர் மூலமாக இவர் உடன்பிறந்தவருக்குய கொடுத்தனர். நிலைமை விவரிப்பதாக இல்லை.

தங்கள் குடும்பத்தில் உள்ள அன்னை பக்தர் மூலம் மையம் வந்து சேர்ந்தார். மனம் எதையும் கேட்டுக் கொள்ளும் நிலைமையிலிருந்தது.

மையத்தின் தலைவர் அவரை ஆறுதல் சொல்லி, பல அனுபவங்களை விவரித்து, அன்னையின் அம்சங்களை விளக்கி, அவருக்குத் தெம்பும் உற்சாகமும் ஊட்டி, கடைசியாக,

> "உங்கள் வாழ்வு உயர்ந்தது. இன்று தாழ்ந்து விட்டது. அன்னையை நம்பினால் மீண்டும் உயரும். கடந்த கால கர்மங்களைக் கரைப்பவர் அன்னை. அப்படி என்றால் மனிதன் கர்மத்தை ஏற்படுத்துவான், அன்னையின் அருள் அதைக் கரைக்கும் என்று பொருளல்ல. கர்மத்தை ஏற்படுத்திய குணங்களை இன்று மாற்ற முன்வந்தால், அருள் கர்மத்தைக் கரைக்கும். நம்மால் பிறருக்குத் தீங்கு விளைந்திருந்தால், அதை இன்று மனதார உணர்ந்து மாற்றிக் கொள்வது அவசியம். இந்த மனமாற்றத்தின் பின், அருள் பலிக்கும். உடனேயும் பலிக்கும்" என்றார்.




வந்தவர் அத்தனையையும ஏற்றுக் கொண்டார். முயன்று நினைவையும், செயலையும் மாற்றினார். அத்துடன் மனம் மாறும் அளவுக்கு உலகம் மாறுவதைக் கண்டார். எரிச்சலாக பேசிய மனைவி ஆறுதலாகப் பேசுவதைக் கண்டார். காரமாக பாக்கியைப் கேட்டவர்கள், காரமில்லாமல் கேட்டனர். ஆத்மசமர்ப்பணத்தைத் தொடர்ந்தார். செய்யும் சிறு வியாபாரத்தில் சிறு முன்னேற்றமும் தெரிந்தது.

திடீரென ஒரு நல்ல உத்தியோகத்திற்கு இன்டர்வியூ வந்தது. வேலை கிடைத்தது. 40 பேர் வேலை செய்யும் இடத்திற்கு மானேஜரானார். நல்ல சம்பளம் என்பதால், கட்டுப்பாடோடிருந்து கொஞ்சம் கொஞ்சமாகக்கடன்களைத் தீர்க்க முடிந்தது. உதவிசெய்த உறவினருக்கும் உதவியைத் திருப்பிக் கொடுக்க முடிந்தது. வாழ்வு புதியதாயிற்று. அன்னை உதயமான பின், புது உணர்வு ஏற்பட்டது.

நாடோடிக் கதை

# மந்திரப் பறவை




நீண்ட காலத்துக்கு முன்பு மந்திரப் பறவை காஹ்கா, ஒரு முதிய செம்படவன் அன்றைக்கு முழுதும் ஒரே ஒரு மீனைப் பிடித்திருப்பதைப் பார்த்து வியந்தது. "இந்த ஒரே ஒரு மீனை வைத்துக் கொண்டு என்ன செய்வாய்?" என்று கேட்டது மந்திரப்பறவை.

"நான் கடைத் தெருவுக்குச் சென்று இந்த மீனை விற்று ரொட்டி வாங்குவேன்!" என்றான் செம்படவன்.

முதிய செம்படவனின் அவல நிலையைக் கண்டு மந்திரப்பறவை வருந்தியது. "நீ வீட்டுக்குப் போ. இனி உனக்கு பசியே இருக்காது!"

இரவு வந்ததும் மந்திரப் பறவை காஹ்கா முதிய மனிதனின் வீட்டில் ஒரு பெரிய மீனைப் போட்டு விட்டுச் சென்றது. ஒவ்வொரு நாள் இரவும் மந்திரப் பறவை ஒரு பெரிய மீனை அந்த வீட்டில் கொண்டு சேர்த்தது. அந்தச் செம்படவன் பெரும் பணக்காரன் ஆனான்.

ஒருநாள் முதிய செம்படவன் கடைத் தெருவில் நின்று கொண்டிருக்கும்போது நகர அறிவிப்பாளன் "யார் காஹ்கா என்ற மந்திரப்பறவையைப் பிடித்துத் தருகிறார்களோ, அவர்களுக்குப் பாதி ராஜ்யம் தரப்படும்!" என்று அறிவித்தான்.

முதிய செம்படவன் தான் உட்கார்ந்த இடத்திலிருந்து துள்ளிக் குதித்தான். 'உனக்கு வாழ்வு கொடுத்த, பட்டினியிலிருந்து விடுவித்த அந்தப் பறவைக்குத் துரோகம் நினைக்கலாமா?' என்று நினைத்துப் பேசாமல் அமர்ந்து விட்டான் செம்படவன். ஆனால் அந்த நகர அறிவிப்பாளன் அந்தச் செம்படவனை அடையாளம் கண்டு கொண்டு விட்டான். அவன் செம்படவனை அந்நாட்டு மன்னனிடம் அழைத்துச் சென்று, "இந்தச் செம்படவனுக்கு காஹ்கா மந்திரப்பறவை பற்றித் தெரியும்" என்று தெரிவித்து விட்டான்.

"நான் கண் குருடு ஆகிவிட்டேன். என் கண்களை அந்த மந்திரப்பறவையின் இரத்தத்தினால் கழுவினால் எனக்குப் பார்வை வந்துவிடும். நீ அந்தப் பறவையைப் பிடித்துக் கொடுத்தால் உனக்குப் பாதி ராஜ்யம் தந்து விடுவேன்!" என்று ஆசை காட்டினான். அரசனின் ஆசை வார்த்தைகளுக்கு அந்த முதிய மனிதன் இணங்கிவிட்டான். முதிய செம்படவன் மந்திரப்பறவை இறங்கும் மரத்தருகே அரசனின் வீரர்களை ஒளித்து வைத்தான். பிறகு பறவைக்காகப் பல பலகாரங்களைத் தயாரித்து வைத்தான். நடு இரவில் செம்படவன் அந்த மந்திரப்பறவையிடம் சொன்னான். "மந்திரப்பறவையே! கீழே இறங்கி வா! எனது சொந்தக் கைகளினாலேயே பல பண்டங்களைத் தயாரித்திருக்கிறேன். எனக்கு உதவி செய்ததற்காக இன்னும் பிரதிபலன் செய்யவில்லை!" என்றான். செம்படவன் விரித்திருந்த கம்பளத்தில் மந்திரப் பறவை காஹ்கா அமர்ந்தது! பறவை அமர்ந்ததும் முதியவன் பறவையின் கால்களைப் பிடித்தான். அந்தச் சமயத்தில் ஓர் அதிசயம் நிகழ்ந்தது! மந்திரப்பறவை காஹ்கா தன் சக்திவாய்ந்த இறகுகளை விரித்துப் பறக்கத் தொடங்கியது. முதிய மனிதனின் கால்களை ஒரு வீரன் பற்றிக் கொண்டான் இப்படிப் பல வீரர்களும் சங்கிலித் தொடர்போல் ஒருவரையொருவர் பிடித்துக் கொண்டனர். காற்றில் ஒரு பெரிய சங்கிலி மனிதர்கள் தொங்கினார்கள். ஆனால் மந்திரப்பறவை உயரே உயரே பறந்தது!

முதிய மனிதன் பயந்து நடுங்கிவிடவே நழுவி விழுந்தான். அவனைப் பிடித்துக் கொண்டிருந்த வீரர்களும் தரையில் உருண்டனர். செய்நன்றி மறந்த முதிய மனிதனுக்கு உரிய தண்டனை கிடைத்தது!

### இளைய அமுதம்

இளைஞர் பகுதிக்குப் பெயர் சூட்டும் போட்டியில் திரு. ஷாஹின்ஷா அவர்கள் எழுதிய 'இளைய அமுதம்' பெயர் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது. திருச்சி மாவட்டம், முசிறியைச் சேர்ந்த திரு. ஷாஹின்ஷா அவர்களுக்கு பரிசு (ரூ.100 பெறுமான நூல்கள்) அனுப்பி வைக்கப்படுகிறது.

போட்டியில் கலந்து கொண்டு விதவிதமான பெயர்களைச் சூட்ட ஆசைப்பட்ட அத்தனை வாசகர்களுக்கும் நன்றி!

## பிறவிக்குணம்!

ஒரு தேள் ஆற்றிலிருந்த ஆமையிடம் நதியைக் கடந்து தன்னை எடுத்துச் செல்லும்படி கெஞ்சியது! "நான் என்ன பைத்தியமா? நான் நீச்சல் அடித்துச் செல்லும்போது நீ என்னைக் கொட்டி விடுவாய்! அப்புறம் நான் நீரில் மூழ்கிவிடுவேனே!" என்று கூறியது ஆமை.

"என்னைத் தூக்கிச் செல்" என்று கூறிச் சிரித்த தேள் "உன்னை நான் கொட்டினால் நாமிருவருமே அல்லவா மூழ்கி விடுவோம்! வா, முன் யோசனையோடு நடந்து கொள்!" என்றது.



"சரி! நீ புத்திசாலித்தனமாகப் பேசுகிறாய்! சரி நாம் ஆற்றைக் கடக்கலாம்!" என்றது ஆமை. தேள் ஆமையின் முதுகில் ஏறிக் கொண்டது! நதியில் பாதி தூரம் சென்றதும் தேள் ஆமையை நன்றாகக் கொட்டிவிட்டது!

இரண்டும் நீரில் மூழ்கிக் கொண்டிருக்கும்போது ஆமை தேளிடம் கேட்டது : "நீ எதற்காக இந்தக் கொடுமையான காரியத்தைச் செய்தாய்? நீ என்னைக் கொட்டமாட்டாய் என்று வாதிட்டாயே பின் எதற்காக இப்படி நடந்து கொண்டாய்?"

"இதில் வாதத்துக்கு இடமில்லை. அது எனது பிறவிக்குணம்!" என்று கூறியது தேள்.

## விளையும் பயிர்!



விவேகானந்தருடைய இளம் வயதில் நடைபெற்ற நிகழ்ச்சி இது. ஒரு நாள் கடையிலிருந்து விவேகானந்தர் பரமசிவன் பொம்மையை வாங்கி கொண்டு, தலையில் வைத்தபடி வந்தார்.

வீதியில் வண்டிப் போக்குவரத்து அதிகம். சந்து ஒன்றிலிருந்து வேகமாக வந்தது ஒரு வண்டி. அப்போதுதான் தெருவைத் தாண்டிக் கொண்டிருந்த ஒரு சிறுவன்மீது வண்டி ஏறி விடும்போலிருந்தது. இதைக் கண்டவர்கள், "ஐயோ! போய் விட்டான்!" என்று அலறினர்.

விவேகானந்தருடைய காதில் இந்த இரைச்சல் விழுந்ததும் தலையில் தூக்கியிருந்த பொம்மையைத் தூக்கி எறிந்து விட்டு ஒரே பாய்ச்சலில் பாய்ந்து அந்தச் சிறுவனை விபத்திலிருந்து காப்பாற்றினார். வீதியில் சென்றவர்கள் விவேகானந்தரின் சாதுர்ய புத்தியை மெச்சினர்.

"சிறந்த மாபுருஷன் ஆவாய்!" என்று ஒரு பெரியவர் ஆசீர்வதித்தார். அப்போது விவேகானந்தருக்கு வயது ஏழு!

## நீங்களும் மாஜிக் செய்யலாம்!

### மந்திரவித்தை



உங்களுக்கு உங்கள் நண்பர்களைத் திணற அடிக்கவேண்டும் என்ற ஆசை உண்டா? அப்படியானால் ஒரு சிறு மாஜிக் மூலம் உங்கள் சிநேகிதர்களை அயர வைத்து விடலாம்.

மூன்று மண் அகல் விளக்குகளை எடுத்து வைத்துக் கொள்ளுங்கள். கடையிலிருந்து திரியை வாங்கி வாருங்கள். ஒரு திரியை ஓர் அகலில் சாதாரணமாகக் கொளுத்தி முதலில் உங்கள் நண்பனுக்குக் காட்டுங்கள்.

"நான் எண்ணெய்க்குப் பதிலாக நீரை விட்டு விளக்கை எரிய வைக்கிறேன்!" என்று நண்பனிடம் சவால் விடுங்கள். இரண்டாவது மண் அகல் விளக்கில் கள்ளிப் பாலை நிரப்பி, கர்ப்பூரத்தைப் பொடி செய்து கலந்து ஒரு திரியை நன்றாக நனைத்துப் பிறகு உலர்த்தி வைத்துக் கொள்ளுங்கள்.



காலி அகல் விளக்கில் கள்ளிப் பால், கர்பூரக்கரைசலில் உலர்ந்த திரியை வைத்து, பிறகு அதில் நீரை விடுங்கள். சிறிது கணம் அந்தத் திரி நீரில் இருந்தாலும் எரியும். உங்கள் நண்பன் இந்த அதிசயத்தைப் பார்த்துப் பிரமித்துப் போய்விடுவான். 'நீ மாஜிக் நிபுணன்' என்று உங்களைக் கொண்டாடி மகிழ்வான்.

தன் வீட்டு வாசலில் இருந்த பத்திரிகையைக் கொண்டு வந்த செல்ல பிராணியிடம் ...

காலையில் –

வெரிகுட்! இந்தா பிஸ்கட்!

!

மறுநாள் –

?

எங்க பேப்பர்!

இது நாயா.. பேய்

என் பேப்பர்!

எங்க வீட்டுப் பேப்பர்

குறும்பு ஜானி

## முல்லாவும் திருடர்களும்

ஒருநாள் முல்லாவின் வீட்டி
திருடர்கள் புகுந்து நகை, பொரு
களை வேட்டையாடினர். ஓ
பொட்டுத் தங்கம்கூடத் திரு
களுக்குக் கிடைக்கவில்லை
ஆனால் திருடர்கள் வியப்படைய
படியாக முல்லா ஒரு பீரே
வுக்குள் பூட்டிக்கொண்டு அம
திருந்தது வியப்பை அளித்தது.

திருடர்கள் அந்த பீரோவி
கதவைத் திறந்தபோது முல்
சொன்னார். "இத்தனை திரு
கள் என்னைப் பற்றிப் பெரிது
மதித்து, ஆவலுடன் என் வீட்டி
நிறையப் பொருள் நகை கொள்ள
யடிக்க முன்வந்தீர்கள். ஓ
பொட்டுத் தங்கம்கூட இல்லா
தால் எனக்கு வெட்கமாகப் போ
விட்டது! ஆகவே நான் பீரோவ
குள் ஒளிந்து கொண்டேன்!" எ
றார் முல்லா.

கடின மனம் கொண்ட தி
டர்கள் முல்லாவின் நகைச்சுவ
யைக் கேட்டு விழுந்து விழு
சிரித்தனர்!

## உங்களுக்குத் தெரியுமா?



### பிளேக் அவுட் (Black out)

1939ஆம் ஆண்டு செப்டம்பர் 3ஆம் தேதியிலிருந்து 1945 ஏப்ரல் 23ஆம் தேதிவரை பிரிட்டனில் எல்லா வீடுகளிலும் ஜன்னல்கள் மூடப்பட்டு, திரையிடப்பட்டு, வெளியில் வெளிச்சம் தெரியாமல் இருட்டுவதற்கு முன் செய்யப்பட வேண்டும். வெளியில் எங்கும் வெளிச்சம் தெரியக் கூடாது. ஓடும் கார்களும்கூடக் குறைந்த அளவு வெளிச்சத்துடன் ஓட்டப்படவேண்டும். இப்படி விமானப் படையெடுப்புக்கான எச்சரிக்கையையே 'பிளேக் அவுட்' என்று அந்தக் காலத்தில் அழைத்தனர்.

### சிரிப்பூட்டும் வாயு (Laughing gas)

இந்த வாயுக்கு உண்மையான பெயர் நைட்ரஸ் ஆக்சைட் என்பதாகும். 1772ஆம் ஆண்டு ஜோசப் பிரீஸ்ட் லீ என்பவர் இந்தச் சிரிப்பூட்டும் வாயுவைக் கண்டுபிடித்தார்! 1892ஆம் ஆண்டு இந்தச் சிரிப்பூட்டும் வாயுவை மயக்க மருந்தாகப் பயன்படுத்தலாம் என்று சிபாரிசு செய்தவர் ஸர் ஹம்ப்ரீ டேவி. இதற்கு முன் பல் வலி, சிறிய ஆபரேஷனுக்கு இந்த வாயு பயன்படுத்தப்பட்டது. இதனை முகர்ந்தால் ஒருவகை ஆச்சரிய உணர்ச்சி ஏற்பட்டுப் பின் மயக்கமடைவது வழக்கம். இதனாலேயே 'சிரிப்பூட்டும் வாயு' என்ற பெயர் வந்தது.

## சினிமா க்விஸ்

1. காலஞ்சென்ற பிரபல திரைப்படப் பாடலாசிரியரின் மகள் இன்று சினிமா நடிகையாக இருக்கிறார். யாரென்று உங்களால் கண்டுபிடிக்க முடிகிறதா?

2. நீர்ப் பிரச்னைதான் தமிழ் நாட்டைக் கலக்கிட்டிருந்தது. இப்போது சேதுபதி ஐ.பி.எஸ். சினிமாவைக் கலக்கிட்டிருக்கிற நடிகை யார்?

3. 'தந்தை மகனுக்கு ஆற்றும் உதவி' பற்றி வள்ளுவர் பெருமான் வியக்கிறார். சிவாஜி, நாகேஷ், ராஜேந்தர் பெருமைப்படக்கூடிய செல்வங்கள் யாரென்று சொல்ல முடியுமா?

4. ஆறு குழந்தைகளை முக்கிய கதாபாத்திரங்களாக வைத்து டைரக்டர் சுரேஷ் மேனன் தயாரிக்கும் படம் என்ன தெரியுமா?

5. ஓமக்குச்சி, தயிர்வடை, தவக்களை, பக்கோடா, நிழல்கள், லூஸ் என்று சில பேர்களுக்கு அடைமொழிகள் உள்ளன. அவர்களை உங்களால் இனம் கண்டு கொள்ள முடியுமா?

6. 'பாட்டி சொல்லைத் தட்டாதே' என்ற சினிமா பார்த்திருப்பீர்கள். ஆனால் இந்த நடிகை தன் பாட்டி சௌகாரின் சொல்லைத் தட்டமாட்டாள். அவ்வளை இனம் கண்டு சொல்லுங்கள்.

1. விசாலி கண்ணதாசன்
2. காவேரி
3. சிவாஜி – பிரபு
நாகேஷ் – ஆனந்த்பாபு
ராஜேந்தர் – சிலம்பரசன்
4. பாசமலர்கள்
5. ஓமக்குச்சி நரசிம்மன்
தயிர்வடை தேசிகன்
தவக்களை சிட்டிபாபு
பக்கோடா காதர்
நிழல்கள் ரவி
லூஸ் மோகன்
6. வைஷ்ணவி

## உடல் இளைக்க

உடல்பெருத்த பெரியார் ஒருவர்
ஒருநாள் கவலை கொண்டாராம்.
உடல் இளைக்க வேண்டும் என்றே
உடற் பயிற்சி செய்தாராம்.

வெல்லப் பாகைப் போல வயிறும்
விரைவில் கரைந்து போனதாம்.
மெல்ல மெல்ல உடல் இளைத்து
மிடுக்காய் நடக்க வந்ததாம்.

இளைத்த உடனே "உடற் பயிற்சி
ஏன்?" எனவே விட்டாராம்.
களித்துக் களித்துச் சோம்பலாகக்
காலம் போக்கி வந்தாராம்.

எந்த நிலைக்குத் தப்ப வேண்டி
எண்ண மிட்டு வந்தாரோ
அந்தப் பழைய பருமன் நிலைக்கே
அதிக விரைவில் சென்றாராம்!



# நடை

## ஜி. நாராயணன்

நெற்றிக்கருகில் கையை வைத்து ஆகாயத்தைப் பார்த்தான்...! இன்று வெயில் கடுமையாக இருந்தது! பத்துப் பதினொரு மணிக்கே இத்தனை சூடு...! புழுக்கம்...!

எதிரே தார் ரோடு நீண்டு கிடந்தது...! மாட்டின் குளம்புகள் உருகின தாரில் அச்சுப் போட்டாற்போல் பதிய... '...ஹை... ஹை...' என்று மாட்டு மந்தையை அதட்டினான். மாடுகள் நடக்க... இன்னும் நடக்க வேண்டும்... நிறைய வெயிலோ... மழையோ... நடை... நடை... நடந்தால்தான் அவன் பிழைப்பு நடக்கும்...

வியாழனன்று பொள்ளாச்சியில் தொடங்குகிற இந்த நடை, ஆலத்தூர் – கொல்லங்கோடு – திருச்சூர் வழியே கொச்சி வரும்போது அடுத்த செவ்வாய்க்கிழமை ஆகிவிடும்...! ஒரு மாடா... ரெண்டு மாடா...? அறுபது எழுபது மாடுகள்...! எல்லாம் அடிமாடுகள்...! இரண்டு இரண்டு மாடுகளாகச் சேர்த்துக் கழுத்தில் கட்டியிருப்பார்கள். அடுத்த மாட்டின் ஒத்துழைப்பு இல்லாமல் இதனால் குனிய முடியாது...! படுக்க முடியாது...! நடக்க முடியாது...! கொண்டு வருகிற அத்தனை மாடுகளையும் வெட்டுகிற இடத்தில் ஒப்படைத்து, திரும்பவும் பொள்ளாச்சி வரும்போது அடுத்த சந்தை கூடியிருக்கும்...! மீண்டும் மாட்டு மந்தைகளை ஓட்டியபடியே நடை... நடை...

இப்படி காலாற நடப்பது பிடித்திருந்தது... கட்டிப் போட்டாற்போல் ஓர் இடத்திலேயே உழன்று கொண்டிருக்காமல்... எத்தனை ஊர்கள்..! மனிதர்கள்! குணங்கள்! நிகழ்ச்சிகள்! சாவகாசமாக நின்று நிதானமாக இதையெல்லாம் கவனிக்க – அனுபவிக்க எத்தனை பேருக்குப் பொழுது இருக்கும்?

ஆலத்தூரில் இரவு தங்கினான் கோபாலன். காலையில் எழுந்து சுப்பாமணி ஹோட்டல் வாசலில் நின்றான்.

"இங்கே 'வராதே.. வராதே'ன்னு சொன்னா... கேட்காம வந்துட்டியா...? பாவி...! மகாபாவி! வெள்ளிக்கிழமையும் அதுவுமா காலம்பற இத்தனை பசுமாடுகளைக் கண்ணுக்கு நேரே கொண்டு வந்து காட்டிட்டுப் போறயேடா...! வேற இடமா கிடைக்கல்லே உனக்கு...? அத்தனையும் சாகப் போறதேடா...! கொல்லப் போறானேடா...! கோஹத்தி...! ஒரு பசுமாட்டைக் கொன்றால், பன்னிரண்டு வருஷம் மாடுகளோடேயே கொட்டில்லே படுத்துண்டு, கோமயத்தை மாத்திரம் குடிச்சு, அதோடயே வெயில்லே காய்ஞ்சு, மழையிலே நனைஞ்சால்தான் பாவம் போகும்'னு சாஸ்திரம் சொல்றது...! எத்தனை மாடுகள்...! கன்னுக்குட்டிகள். கொல்லப் போறான்...! கப்பல்லே அனுப்பப் போறான்...! தெரிஞ்சே செய்யறது இன்னும் பாவம்...! இருந்து இருந்து உனக்குக் 'கோபாலன்'னு யார்ரா பேர் வைச்சான்... வைச்சவனை...!"

கோபாலன் என்று யார் பெயர் வைத்தார்கள் என்று தெரியாது...! அம்மா அப்பா யார் என்பதே தெரியாது...! நாலைந்து வயதுக் குழந்தையாக அழுதபடி கடைவாசலில் நின்றிருந்ததாகக் கவுண்டர் சொல்லுவார். அவர்தான்

> அமரர் சின்னிகிருஷ்ணன் நினைவுச் சிறுகதைப்போட்டி
> முதல் பரிசு ரூ. 3000/– பெறும் சிறுகதை

வீட்டுக்கு அழைத்து வந்து கஞ்சி ஊற்றினார்...! மாட்டுக் கொட்டிலில் படுக்க இடம் கொடுத்தார்...! 'கோபாலா' என்று கூப்பிட ஆரம்பித்தார்.

நடை தடைப்பட்டது...! நல்ல வெயில்...! மாடுகளுக்கு இரைப்பு வாங்கியது...! கொல்லங்கோடு குளம் ரொம்பவும் பெரியது...! மாடுகளை அதில் இறக்கினான்! எது பற்றியும் கவலைப்படாமல் வாய் வைத்து நீர் உறிஞ்சுவதைப் பார்த்தபடி நின்றான்...! மெல்ல அவை கரையேறி... மரநிழலில் நிற்க...

"கோபாலன்...! எப்போ வந்து...?"

நிமிர்ந்தான்...! கல்யாணிக்குட்டி நின்றிருந்தாள்.

"இப்பதான்...!"

"ஏன் ஒரு மாதிரி இருக்கே...?"

"இல்லே...! வழியிலே ஆலத்தூர் அய்யிரு...! இப்படி அடிமாடுகளை ஓட்டி... கசாப்புக் கடைக்குக் கொண்டு போறது... நான் பாவி'ன்னு... அதான்... மனசை...!"

கல்யாணிக்குட்டி பதில் எதுவும் சொல்லவில்லை...! ஏதோ யோசித்தாள்...! எதிரே, மாடுகள் நின்றிருந்த் மரத்தைக் காட்டினாள்...

> "கடவுள் ஒவ்வொன்றையும் ஒரு காரணத்தோடு, அர்த்தத்தோடு தான் செய்கிறார்..."

"எல்லா மரங்களையும் கடவுள் சந்தனமரமாகவும், தேக்கு மரமாகவுமே படைச்சிருந்தா... என்ன ஆகியிருக்கும்?"

"மனுஷன் வெட்டித் தள்ளியிருப்பான்...! காசாக்கி இருப்பான்...! பூமியைப் பாலைவனமாக ஆக்கியிருப்



பான்...! இப்படி ஒரு மரத்தைக் கடவுள் எதற்காகப் படைச்சிருக்கார்? யோசனை பண்ணு...! ஒரு காயா... பூவா... பழமா... இலையா... எதுவும் உபயோகம் இல்லே...! பின்னே...? எதற்கு இவ்வளவு பெரிய பிரம்மாண்டத்தை இந்தக் குளத்தங்கரையில் கொண்டு வைச்சிருக்கார்...? காரணம் இல்லாமல் இல்லே...! இந்தப் பதைபதைக்கிற வெயிலிலே வர்ற மனுசனும் மாடும் தண்ணி குடிச்சுட்டு... இதன் நிழல்லே இளைப்பாற...! 'அப்பாடா'ன்னு சாஞ்சுக்க.... ம்... புரியறதா...? ஒவ்வொண்ணுக்கும் ஒரு காரணம் இல்லாம... அர்த்தம் இல்லாம... அவர் செய்யறது இல்லே...! காயை நகர்த்தறது இல்லே...! ஒரு இலை அசங்கிறதுலே, ஒரு காத்து அடிக்கிறதுலேகூட ஒரு காரணம் இருக்கு...! நம்பள்ளாம் வெறும் பொம்மைகள்...! நீ... இப்படி அடிமாட்டை ஓட்டிண்டு அலையறதும்... ம்... அவன் செயல்தான்..."

கொஞ்சம் புரிந்த மாதிரி இருந்தது...! கல்யாணி படித்திருக்கிறாள்...! இந்த ஊரில் எல்லாருக்குமே எழுதப்



படிக்கத் தெரிந்திருக்கிறது, எவ்வளவு ஏழையாக இருந்தாலும்...! கல்யாணியும் ஏழைதான்...! ரொம் பவும்...! அதுவும் அவள் அப்பா வேறொரு பெண்ணோடு ஓடிப்போன பிறகு...! இன்னமும் நிலைமை மோசமாகி....

"இந்த மாடு...! வெள்ளையா... அழகா இருக்கே...! ஏன் இப்படி நொண்டி நொண்டி நடக்குது?"

"கசப்பு...! இது ஒரு வியாதி..." என்றான் இவன். "இந்த வேகாத வெயில்லே நடக்குது இல்லியா? சூடு...! இதெற்கெல்லாம் நிறைய மொந்தம்பழம் கொடுக்கணும்...! விளக்கெண்ணெய் தடவணும்...! ஆனால் இந்தக் கன்னுக் குட்டிக்கு இனிமேல் இதெல்லாம் தேவையில்லையே...!

"கன்னுக்குட்டியா...? மாடு மாதிரி இருக்கு...!"

"மாடு ஆகணும்...! அதற்குள்ளே... ச்சு..."

"நொண்டி நொண்டி இது எப்படி நடக்கும்...? பாவம் இல்லியா...? வலிக்காதா...? ரொம்ப தூரம் போகணுமே...?

## ஏன் படைத்தாய்?

எம். ஆர். ராஜன்

*எதனாலே நீ என்னைப் படைத்தாய் கண்ணா*
*எதற்குமே உனக்கு நான் பயனில்லையே*
*குழலாக இருந்தாலும் மகிழ்வேன் – கண்ணா உன்*
*இதழோடு உறவாடிக் களிப்பேன்*

*அழகான மயிலான போதும் – உன்*
*மலரான பாதத்தில் கிடப்பேன்.*

*பசுவாகக் கன்றாகப் பிறந்தாலும் – பரமா*
*பொழுதெல்லாம் உன்கூட வந்திருப்பேன்*
*சுவையான வெண்ணெய்க்குச் சுந்தரனே*
*சுரந்தே பால் நிறையப் பொழிந்திருப்பேன்.*

*அரவாகப் பிறந்தாலும் ஆழியிலே*
*அரங்கா உன்மேனி அணைந்திருப்பேன்*
*எதுவாகப் பிறந்தாலும் பயனுண்டு – ஒன்றுக்கும்*
*உதவாத பிறவியிது மானுடமே!*

"உலகத்தில் பிறக்கிறதே பாவம்தான்..."

"இதை எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு...! இங்கேயே விட்டுடேன்...! எனக்குக் கொடுத்துடு...! நான் பார்த்துக்கிறேன்".

"எப்படிப் பார்த்துப்பே...?"

"நீ சொன்ன மாதிரி... மருந்தெல்லாம் கொடுக்கிறேன்...! எப்படியும் காப்பாத்திடுவேன்..."

இவன் யோசனையில் இருந்தான்...! அந்தக் கிடேரிக் கன்று, முன்காலை ஊன்ற முடியாமல் திண்டாடியது...! குளம்பில்... வாயில்... புண்கள்...! இந்த வியாதி மற்ற மாடுகளுக்கும் பரவலாம்...! இங்கேயே விட்டுவிட்டால்...? இவனுக்குச் சந்தோஷமாக இருக்கும்...! பொள்ளாச்சி மாட்டுத் தரகனிடம் இதற்கான பணத்தைப் பிடித்துக் கொள்ளச் சொல்லி விடவேண்டியதுதான்...!

"இதை... நான்... 'நந்தினி'ன்னு கூப்பிடப்போறேன்".

திருச்சூர் தாண்டியதும் பணிக்கர் வீட்டில் நிறுத்தினான்...!

"ஏய்...! பாண்டிப்பயலே...! மாட்டை வழியிலே நிறுத்தாதே...! ரோடை அடைச்சிட்டு...! நிறுத்தறது நான் நிறுத்தறே... அப்படியே கீழே இறக்கி என் வயல்லே நிறுத்து. ராத்திரி முழுக்க உன் மாடெல்லாம் அங்கேயே கிடக்கட்டும்...! எனக்கு ஆட்சேபனை இல்லே...! உனக்கும் நல்ல பாதுகாப்பு...! திருட்டு புரட்டு நடக்காது...! தெரியுமா? என் வயலுக்குச் சாணி... எரு கிடைக்குமேன்னு சொல்லல்லே... அப்படி மிச்சம் பிடிச்சு நான் மாடி வீடா கட்டப்போறேன். உனக்காகத்தான்...! எத்தனை நாழி வேணா நிறுத்திக்க...! எனக்கு வாடகை எதுவும் வேண்டாம்".

இவனுக்கு ஏதோ உபகாரம் செய்வது போல் சொன்னார்... அதோடு நிற்கவில்லை...

"அந்தச் செவலை... கறவை மாடு மாதிரி தெரியுது... 'மடி இருக்கு...' ஒரு பாத்திரம் தரேன்... கறந்து பாரு...! எப்படியும் சாகப் போற மாடுதானே? மடியிலே பாலை வைச்சுக்கிட்டுச் சாவானேன்?"

மறுக்க முடியாது... இதுவும் பாவம்தானோ...? தெரியாது... இரண்டு இரண்டாகக் கட்டியிருந்த மாட்டைப் பிடித்தான்... தீனியும் வைக்கோலும் இல்லாமல் நாலு நாள்களாக நடந்து கொண்டிருக்கிற மாடு எத்தனை பால் கொடுக்கும்...? இதைப் போட்டு வதைக்கிறோமே என்று மனம் வலித்தது...

மாடுகளைக் கொண்டு வந்து சேர்த்தான்... அந்த இடம் எப்பொழுதுமே இவனுக்குப் பிடிப்பதில்லை. மாடுகளை ஒன்றன் பின் ஒன்றாக நிறுத்தி... நகர்த்தி... அலை... ச்சு... ஒரே நசநசப்பு...! நாற்றம்...! வெறுப்பாக இருந்தது...! கோபமாக இருந்தது...! நாலைந்து நாள்கள் பழக்கம்தான் என்றாலும் அந்த மாடுகளுடன் ஒரு சிநேகம் வந்துவிடும்...! அவைகளைப் பார்ப்பதைத் தவிர்ப்பான்...! குற்றம் செய்துவிட்ட உணர்வுடன் 'விறுவிறு'வென்று முதுகைக் காட்டியபடி பிரிவான்...

மாட்டு வைத்தியர் வந்தார்...! ஒவ்வொன்றாக நோட்டமிட்டார்...!

"குளம்பு ரோகம் இருக்கு... இந்த மாட்டுக்கு...!"

"சாமி..."

"இந்த மூணு மாட்டையும் திருப்பிக் கொண்டு போ...! வியாதி இருக்கு...! சர்டிபிகேட் கொடுக்க முடியாது..."

இவனுக்குப் புரிந்தது...! எது கொடுத்தால் அவர் கையெழுத்துப் போடுவார்..? மாட்டின் உடல் ஆரோக்கியத்துக்கு சர்டிபிகேட் கொடுப்பார்...? சட்டைப் பையில் கையை விட்டான்...! எடுத்தான்...! கொடுத்தான்...!

அவர் சிரித்தார்...! இனி காரியம் நடந்துவிடும் என்றது அந்தச் சிரிப்பு...!

அடி மாடுகளைக் கசாப்புக் கடைக்கு ஒட்டிக் கொண்டு போவதே மகா பாவம் என்று கத்துகிற சுப்பாமணி, அந்த மாடுகளை வைத்தே சம்பாதிக்க நினைக்கிற மனிதர்களைப் பார்த்தால் என்ன சொல்லுவார்...! அடுத்த முறை அவரிடம் சொல்ல வேண்டும்...! கேட்க வேண்டும்...!

நடை தொடர்ந்தது...! இப்பொழுது சுப்பாமணி ஹோட்டலை மூடிவிட்டார்கள்...! அந்த இடத்தில் 'பாங்கு' வந்துவிட்டது.

அடிமாட்டைக் கறந்து பால் சாப்பிட்ட பணிக்கர் எம்.எல்.ஏ. ஆகிவிட்டார்...!

கல்யாணிக்குக் கல்யாணம் ஆகி கணவன் வீட்டுக்குப் போய்விட்டாள். பக்கத்து ஊரில்தான் இருக்கிறாள்...! அடிக்கடி வருவாள்...! அந்தப் பசுங்கன்று எப்படிப் பிழைத்தது - ஆளானது என்பது இப்பொழுதும் இவனை ஆச்சரியப்பட வைக்கிறது...! பார்த்துக் கொண்டிருக்கிற போதே வளர்ந்து, வாயும் வயிறுமாக நின்று கொண் டிருக்கிறது...!

வெட்டுகிற இடத்தில் நிறைய வைத்தியர்கள் வந்து போய் விட்டார்கள்...! பணம் கொடுப்பது மட்டும் போகவில்லை...!

"கல்யாணி...!" குடிசை வாசலில் நின்று இவன் குரல் கொடுத்தான்.

"ஆரனு...!"

"கல்யாணி வந்திருக்காளா...? குழந்தை அழுகிற சத்தம் கேட்டுது...! அதான்...! அவளைப் பார்த்து நாளாச்சே...! பார்த்துட்டுப் போகலாம்'னு...!"

"பார்க்க வந்தியா அவளை...!" கல்யாணியின் அம்மா வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டாள்... "எப்படிப் பார்ப்பே...? அந்தப் பாவி மகளை..." நிறுத்தினாள்...! அழுதாள்...! "புருஷன்கிட்டே கோவிச்சுக்கிட்டு... தூக்குப் போட்டு.. செத்துப் போயிட்டா...!"

"என்னது...?"

"புருஷன்காரன் கிட்டே சண்டை...! அவன் குடிகாரன்...! ஒழிஞ்சு போறது'ன்னு விடாம... பெரிய சண்டையாகி, அவன் இவளை அடிச்சு.. இவ... இவ..."




அப்படியே நின்றான்...! கல்யாணி தற்கொலை செய்து கொண்டாள்...! சிரிக்கச் சிரிக்கப் பேசுகிற கல்யாணி! பெரிய தத்துவங்களைச் சொல்கிற கல்யாணி, அவளுக்கு உதவாமல்...! கடைசியில்... கடைசியில்...

"இந்த ரெண்டு மாசக் குழந்தையை 'நீயே கொண்டு போ'ன்னு புருஷன்காரன் என் மடியிலே தூக்கி எறிஞ்சுட்டான்...! பச்சைப்புள்ளே...! இதை வைச்சு நான் எப்படிக் காப்பாத்தப் போ்றேன்...? நானே சோத்துக்குப் பறக்கிறேன்...! இதற்குப் பால் வாங்கணும்னா... கொடுக்கணும்னா...? என்கிட்டே காசா... பணமா...? நான் எங்கே போவேன்...? எப்படி வளர்ப்பேன்...?"

"அம்மா..." கொட்டிலில் நந்தினியின் கதறல் கேட்டது...! கட்டுத்தறியில் நிற்காமல் சுற்றியது...! படுத்தது...! எழுந்தது...! பெருமூச்சுவிட்டது...! வேதனைப்பட்டது...

"கன்னு போடப் போற மாதிரி இருக்கு..." இவன் சந்தேகத்துடன் அதன் அருகில் சென்றான்...

"சட்டுனு கொஞ்சம் வெந்நீர் வையுங்க...! மூங்கில் இலை ஒரு கூடை பறிச்சுண்டு வாங்க...!"

அரை மணி ஆயிற்று...! கன்றின் முன்காலும் தலையும் வெளியே தெரிய...! கீழே விழுந்த கன்று தட்டுத் தடுமாறி எழ.... நந்தினி எழுந்து நின்று அதை நாவால் சுத்தம் செய்ய ஆரம்பித்தது... நஞ்சு விழும் வரை இருந்தான்...! அதை வைக்கோலில் சுற்றி எடுத்துக் கொண்டான்...!

குடிசையில் குழந்தையின் அழுகுரல் இன்னும் கேட்டது.

"பாலுக்கு என்ன பண்ணுவேன்... என்ன பண்ணுவேன்'னு கேட்டீங்களே...! இன்னும் ரெண்டு மூணு நாள்லே பேரனுக்கு இஷ்டம்போல் பால் கிடைக்கும்...! நந்தினி கொடுக்கும்..."

குளத்தங்கரை தூங்குமூஞ்சி மரத்தில் நஞ்சுக் கூட்டைக் கட்டினான்...! கல்யாணி அங்கே நிற்பது போலிருந்தது...! பேசுவது போலிருந்தது...!

"கடவுள் ஒவ்வொன்றையும் ஒரு காரணத்தோட, அர்த்தத்தோடதான் செய்கிறார்...! ஓர் இலை அசங்கிறதுலே, ஒரு காத்து அடிக்கிறதுலேகூடக் காரணம் இருக்கு...! நாம் எல்லாம் வெறும் பொம்மைகள்...!"

வாஸ்தவம்தான்...! இத்தனை மாடுகள் இருக்கிறபோது நந்தினிக்கு மட்டும் கசப்பு வருவானேன்...? அதன் மேல் பரிதாபப்பட்டுக் கல்யாணி அதைக் கேட்பானேன்...? கசாப்புக் கடைக்குப் போகாமல் அதைத் தப்புவித்தது யார்...? இங்கே அது வளர்ந்தது...! கன்று போட்டது...! எல்லாம் ஒரு தாயில்லாக் குழந்தைக்குப் பால் கொடுக்க அவன் செய்த முன்னேற்பாடா...?

புரியவில்லை...! சற்று நேரம் அந்த மரத்தடியிலேயே உட்கார்ந்திருந்தான்...! மேலே நிமிர்ந்து ஆகாயத்தைப் பார்த்தான்...! ஒரு பெருமூச்சு விட்டான்...!

மீண்டும்...

நடையை ஆரம்பித்தான்...



# ஊர்வலம்

பானுமதி ராஜகோபாலன்

**அமரர் சின்னிகிருஷ்ணன் நினைவுச் சிறுதைப்போட்டி இரண்டாம் பரிசு ரூ.2000/– பெறும் சிறுகதை**

சம்சுதீனுக்கு ஒரு வாரமாகவே மனம் ஒரு நிலையில் இல்லை. சரியாகச் சாப்பிடாமல், தூங்காமல் அவதிப் படுவதை அவர் மனைவி நசீமா கவனித்துக் கொண்டுதான் இருந்தாள். அவரின் நிம்மதியின்மையின் காரணத்தையும் ஓரளவு யூகித்திருந்தாள்.

அடுத்த மாதம் ஊரில் கந்தூரித் திருவிழா வருகிறது. தர்க்காவின் தர்மகர்த்தா கமிட்டி அங்கத்தினரான சம்சு தீனுக்கு விழா நல்லவிதமாக நடைபெற வேண்டுமே என்று கவலை இருப்பது இயற்கைதான்.

அமாவாசை கழித்த மூன்றாம் நாள் பிறையின் போது கொடி ஊர்வலம் வந்து தர்க்காவில் கொடியேறும். அதற்குப் பத்தாவது நாள் சந்தனக்கூடு ஊர்வலம் வந்து மசூதியில் சந்தனம் பூசுவதோடு விழா நிறைவடையும். அந்தப் பத்து நாள்களும், வண்ண விளக்கு அலங்காரமும், புதிதாக ஏற்படும் கடைகளுமாக தர்க்காவைச் சுற்றி ஜகஜ்ஜோதியாகப் பிரகாசிக்கும். கலகலப்புக்கும், ஜனங்களின் உற்சாகத் துக்கும் குறைவிருக்காது.

அது சிறிய நகரம்தான். ஊருக்குப் பிரதானமாக ஒரு சிவன் கோயில். அருகிலேயே பெருமாள் கோயில், அதை யொட்டி மேற்குப் பக்கமாக தர்க்கா, தெற்கே கொஞ்சம் தள்ளினாற்போல் உயரமான மாதாகோயில் என்று ஒன்றோ டொன்று பிணைந்துகொண்டு உறவாடிக் கொண்டிருக்கும், அந்த ஊர் ஜனங்களைப் போலவே.

பெருமாள் கோயிலில் மார்கழி மாதம் பகல் பத்து, ராப்பத்து, வைகுண்ட ஏகாதசி என்று இருபது நாள்கள் தொடர்ந்து சுவாமி புறப்பாடு இருக்கும்.

சிவன் கோயிலில், திருவாதிரையன்று நடராஜர் புறப்பாடு தவிர, ஆனிமாதம் பௌர்ணமியை ஒட்டிப் பெரிய திருவிழா நடக்கும். ஊரே திரண்டு வந்து உற்சாகமாகக் கலந்து கொள்ளும் பிரபலமான உற்சவம் அது.

மாதா கோயிலைப் பொறுத்தவரை கவலையில்லை. ஆகஸ்ட் பதினைந்தாம் தேதி வரும் மாதா ஊர்வலம் தவிர மற்ற விசேஷங்களை, கிறிஸ்துமஸ் உட்பட, மாதா கோயி லுக்குள்ளேயே கொண்டாடி விடுவார்கள்.

இதில் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால் முஸ்லிம், கிறிஸ்தவர், ஹிந்து – யார் ஊர்வலம் விட்டாலும் பெரிய சாலை வழியேதான் செல்லும். சென்னை போன்ற முக்கிய நகரங்களுக்குச் செல்லும் பிரதான சாலை அது.

இத்தனை வருஷங்களாக எல்லா விசேஷங்களும் ஊர்வலங்களும் நடந்து கொண்டுதான் இருக்கின்றன. தர்க்காவில் கொடியேறும் போது நடக்கும் வாணவேடிக்கை யைக் காண அனைவரும் மதவேறுபாடின்றிக் கூடிவரு வார்கள்.

சிவன் கோயில் திருவிழாவுக்குக் குழுமிய மக்களில் முஸ்லிம்களையும் பார்க்கலாம். தெருவை அடைத்து இரு புறமும் வரிசை கட்டிய கடைகளில் இனம் காண முடியாமல் பிசறி நிற்பார்கள்.

அமைதியே உருவான ஊருக்கும் திருஷ்டி பட்டு விட்டது. அய்யப்ப பூஜை ஊர்வலத்தில் யாரோ என்னவோ சொல்லப் போக, சீறிக் கொண்டு புறப்பட்ட பூசலை, அந்தந்த மதப் பெரியவர்கள் தலையிட்டுத் தடுத்து நிறுத்திவிட்டார்கள். பெரியவர்கள் சொல்லுக்குக் கட்டுப்பட்டு ஊர் அமைதி காத்தது. உண்மையில் அது அமைதிதானா, நீறு பூத்த நெருப்பா என்பதைக் கண்டுபிடிக்க முடியவில்லை. இந்தச் சூழ்நிலையில்தான் கந்தூரி வேறு தொடங்கப் போகிறது.

மதங்களைக் கடந்த அந்த மூன்று மனிதர்களும் ஊர்வலம் நடக்க வழி செய்தார்கள்...

"வழக்கமா வர்ற கந்தூரிதானே. தன்னாலே நடந்துட்டுப் போறது. அதுக்கா இப்படி தவித்து போறீங்க?" என்று கணவன் முன்னால் ஆப்பம் நிறைந்த பீங்கான் தட்டை நகர்த்தியபடி கேட்டாள் நசீமா.

"அல்லா அருள்லே நல்லபடியா நடந்து முடிஞ்சா நல்லதுதான் நசீமா. ஆனா.. ஊர் இப்போ முன்னே மாதிரி இல்லையே. அய்யப்ப பூஜை ஊர்வலத்திலே நடந்த மாதிரி எதுனா நடந்துடுமோன்னுதான் பயமா இருக்கு..."

நசீமா இடைமறித்தாள். "இதப்பாருங்க. ஊர் சனங் களைப் பத்தி நமக்குத் தெரியாதா? இதுவரையிலே வித்யாசம் பார்க்காமே தாயாபுள்ளையா பழகலையா நாம்ப? யாரோ புறம்போக்குப் பசங்க வேணுமின்னே சண்டையை உசுப்பி விட்டிருக்கானுங்க. நடக்க விட்டோமா நாம்ப? நம்ம பஞ்சாமி அய்யாவே ஓடிவந்து கண்ணீர் விட்டுக் கெஞ்சிக் கேட்டுச் சமாதானம் பண்ணலையா? நீங்களும் அய்யாகூட நின்னு மன்றாடலையா? அதான் அப்பவே சமாதானம் ஆகிப் பிரிஞ்சு போயிட்டாங்களே. புதுசா இப்ப மறுபடி எதுனா கலாட்டா வரும்னு நினைக்கறிங்களா?"

"நான் பயப்படறதுக்கு இன்னொரு காரணமுமிருக்கு நசீமா. இந்த வருஷம் கந்தூரி திருவிழா எப்ப வருதுன்னு பார்த்தியா? மத்தவங்களுக்கு வருஷத்துக்குப் பன்னிரண்டு மாசம்னா, நமக்குப் பத்து மாசம் இல்லையா? அந்தக் கணக்குப்படி இந்த வருஷம் கந்தூரி, தமிழ் மாசப் பிரகாரம் பார்த்தால் ஆனி மாசம் வருது".

நசீமா திடுக்கிட்டாள். "ஆமாங்க. ஆனி மாசம்தானே சிவன் கோயில்லே பெரிய திருவிழா வரும்? பௌர்ணமி சமயம்தான் விழா கொண்டாடுவாங்க. அப்பதானே நம்ம கந்தூரி சந்தனக் கூடு வருது? அல்லாவே!... இதென்ன சோதனை?..."

"நல்ல வேளையா சிவன் கோயில் திருவிழா முடிஞ்ச மறுநாள்தான் சந்தனக் கூடு விடுவோம். ஆனாலும்கூட என்னமோ திக்கு திக்குன்னு இருக்குது நசீமா!"

"எதுக்கும் ஒரு நடை பஞ்சாமி அய்யாவைப் போய்ப் பார்த்துட்டு வந்திருங்களேன். அவங்ககூடக் கலந்து பேசினா கொஞ்சம் தைரியம் வரும்".

சம்சுதீனின் மனத்திலும் அதே எண்ணம்தான் ஓடிக் கொண்டிருந்தது. சிவன் கோயில் தர்மகர்த்தா கமிட்டித் தலைவரான பஞ்சாமி அய்யரை, சம்சுதீன், உடன்பிறவாச் சகோதரனாகவே வரித்திருந்தார். பொது விஷயம் தவிர குடும்பப் பிரச்னைகளைக் கூட அவரிடம் கலந்து பேசி ஆலோசனை பெற்றால்தான் சம்சுதீனுக்கு மனம் சமா தானமடையும்.

பஞ்சாமி அய்யரோடு கலந்து பேசலாம் என்று தீர்மா னிக்கும்போதே மனம் லேசான மாதிரி இருந்தது சம்சு தீனுக்கு. உடனேயே கிளம்பிவிட்டார்.

பஞ்சாமி அய்யரின் வீட்டு வாசல்படியில் ஏறும்போதே உள்ளே பேச்சுக்குரல் கேட்டது. யாருடனோ பேசிக் கொண் டிருந்தார் அய்யர்.

மெல்ல கதவைத் தட்டி "அய்யா!" என்று குரல் கொடுத்தார் சம்சுதீன்.

குரலை இனம் கண்டு கொண்ட பஞ்சாமி அய்யர், "யாரு, மரைக்காயரா? உள்ளே வாங்க. நல்ல சமயம்தான் நீங்க வந்தது" என்று உற்சாகமாக வரவேற்றார்.

சம்சுதீன் உள்ளே வந்தார். ஊஞ்சலில் பஞ்சாமி அய்யர். எதிரே சோபாவில் பந்தல் காண்ட்ராக்ட்காரர்.

"கோயில் விழா வேலை தொடங்கியாச்சுங்களா?" என்று சோபாவில் உட்கார்ந்தபடி கேட்டார் சம்சுதீன்.

"பின்னே? ஒரு மாசம்தானே இருக்கு. ஒண் ணொண்ணா ஏற்பாடு பண்ண வேண்டாமா? மரைக்காயரே! சொன்னா நம்பமாட்டேள். காலம்பறதான் சொன்னா மீனாட்சி. 'மரைக்காயருக்குப் போளின்னா உசிராச்சே. நம்ம வீட்டிலே போளி பண்ணியிருக்கேன். கொண்டு போய்க் கொடுத்துட்டு வாங்கோ'ன்னு சொன்னா. நீங்களே வந்துட்டேள். இதுதான் தெய்வ சங்கல்பம்னு சொல்றது."

பஞ்சாமி அய்யர் பேசிக் கொண்டிருக்கும்போதே மீனாட்சி இரண்டு எவர்சில்வர் தட்டுகளில் போளியையும் ஆமை வடைகளையும் நிரப்பி எடுத்து வந்து பந்தல்காரரிடமும் சம்சுதீனிடமும் கொடுத்து விட்டுப் புன்னகையுடன் புடைவைத் தலைப்பைத் தோளில் போர்த்தியபடி தூண் ஓரமாகப் போய் நின்றாள்.

சம்சுதீனுக்கு மீனாட்சியைப் பார்க்கும்போது 'மௌத்'தான தன் தாயைப் பார்ப்பது போல் இருந்தது. போளி என்று இல்லை. வரலட்சுமி நோன்பு கொழுக்கட்டை, பிள்ளையார் சதுர்த்தி அப்பம், வடை, திருவாதிரைக் களி, கூட்டு, காரடையான் நோன்பு அடை, கார்த்திகைப் பொரி, தீபாவளி பக்ஷணங்கள் என்று எந்த ஒரு பண்டமானாலும் டாண் என்று எவர்சில்வர் தூக்கில் சம்சுதீன் வீட்டுக்கு வந்து இறங்கிவிடும்.

நசீமாதான் தவித்துப் போவாள். "இப்படி தவறாம ருசி ருசியா கொடுத்தனுப்றாங்களே அந்தம்மா... பதிலுக்கு நாம எதுவும் கொடுக்க முடியலையே..." என்று நெகிழ்ந்து போவாள்.

"மன்னிச்சுக்குங்க அம்மா. இப்பதான் வீட்டிலே பலகாரம் உண்டுட்டு வந்தேன். பிளாஸ்டிக் கவர்லே போட்டு வீட்டுக்கு எடுத்திட்டுப் போய் மதியம் உண்டுக்கறேங்க" என்றார் சம்சுதீன்.

"அப்புறம் ஒரு விசேஷம் கவனிச்சீங்களா மரைக்காயரே! இந்த வருஷம் சிவன் கோயில் திருவிழாவும் தர்க்கா சந்தனக்கூடும் ஒரே வாரத்திலே வருது பாருங்க" என்றார் பஞ்சாமி அய்யர்.

"அது பத்திப் பேசத்தாங்க இப்ப உங்களைத் தேடி வந்ததே". சம்சுதீனின் குரலில் இழையோடிய கவலையைக் கவனித்தார் பஞ்சாமி.

"ஏன்? எதுனா கலாட்டா உருவாகிடுமோன்னு பயப்பட றீங்களா?"

"எந்த வருஷம் வந்தது? இப்ப வரதுக்கு," போளியைச் சுவைத்தபடிக் கேட்டார் பந்தல் காண்ட்ராக்டர்.

"ஊர் நிலைமை முன்னே மாதிரி இல்லைங்க. நம்ம பெரியவங்களும் நாமளும் மதத்தை வீட்டிலே வெச்சுகிட்டு

வெளியிலே மனுஷங்களைப் பழிச்சிக்கிட்டிருந்தோம். இப்ப மதமே வெளியே வீதிக்கு வந்து அல்லாட ஆரம்பிச்சிட்டதே" என்று சம்சுதீன் நொந்து கொண்டார்.

பஞ்சாமி அய்யர் ஊஞ்சலை விட்டு இறங்கி சோபாவில் சம்சுதீன் பக்கத்தில் வந்து உட்கார்ந்தார்.



"இதோ பாருங்கோ. சிவன் கோயில் திருவிழா தொடங்கறதுக்கு முன்னாலேயே தர்க்காவிலே கொடி ஊர்வலம் நடந்திடும். கோயில் திருவிழா ஊர்வலங்களும் முடிஞ்சப்புறம்தான் பெரிய வீதியிலே சந்தனக் கூடு ஊர்வலம் வரும். ஆகையினாலே பெரிய தெருவிலே இரண்டு ஊர்வலங்களும் எதிர் எதிரே சந்திச்சுக்கச் சந்தர்ப்பமே கிடையாது. அப்புறம் என்ன?"

சம்சுதீனுக்குக் கொஞ்சம் நிம்மதி வந்தது.

"அப்ப எதுவும் கலாட்டா வராதுன்னு உறுதியாச் சொல்றீங்களா?"

பஞ்சாமி அய்யர் பதில் சொல்லாமல் சற்று நேரம் மௌனம் சாதித்தார். சம்சுதீன் அவர் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தார்.

"மரைக்காயரே! சிவன் கோயில் உற்சவத்திலே ரெண்டு நாள் பல்லக்கு விடுவோம் இல்லையா?"

"ஆமாங்க. வருஷம் தவறாமே பார்த்திட்டுத்தானே வரேன். முதல்நாள் முத்துப் பல்லக்கு. ரெண்டாம் நாள் புஷ்பப் பல்லக்கு".

"சுமாரா என்ன உயரம் இருக்கும் தெரியுமா?"

சம்சுதீன் தயங்க, பந்தல்காரர் முன் வந்தார்.

"ரெண்டுமே முப்பதடி உயரம். அதுக்காகப் பெரிய தெருவிலே கோயில் எதிரே போடற பந்தலைக் கூட முப்பத்தஞ்சு அடி உயரம் இருக்கிற மாதிரி போடுவோம். ரொம்ப வருஷமாக நான்தானே பந்தல் போடறது?"

"அப்படிப் போடற பந்தலைப் பத்து பதினைந்து நாள்கள் வரை, அதாவது விடையாத்தி ஆகற வரையிலே பிரிக்க மாட்டோம்" என்றார் பஞ்சாமி.

சம்சுதீன் விழித்தார். இதெல்லாம் தெரிந்த விஷயங்கள்தானே. எதற்குக் குறிப்பிட்டுச் சொல்கிறார் அய்யர்?

"மரைக்காயரே! நம்ம ஊர் தர்க்கா சந்தனக் கூடு தான் அக்கம் பக்கத்து ஊர் தர்க்கா கூட்டைவிட உயரம்னு நாம பெருமைப்படுவோம் இல்லையா?" என்று பூடகமாகக் கேட்டார் பஞ்சாமி அய்யர்.

சம்சுதீனுக்குச் சொரேர் என்றது. அந்த ஊர் சந்தனக் கூடு உயரம் முப்பத்தைந்து அடி. சிவன் கோயில் திருவிழா முடிந்த மறுநாள் சந்தனக்கூடு. பெரிய தெரு வழியேதான் சந்தனக்கூடு ஊர்வலம் போவது வழக்கம். கோயில் வாசலில் போட்டப் பந்தலையும் பிரித்திருக்க மாட்டார்கள். கூடு எப்படிப் பந்தலைக் கடந்து போகும்? நினைக்கும்போதே சம்சுதீனுக்குத் தலை சுற்றியது.

பஞ்சாமி அய்யர் ஆதரவுடன் சம்சுதீனின் தோளில் கை வைத்தார்.

"இதோ பாருங்கோ 'திருவிழா முடிஞ்சு போச்சு. நாளைக்கு சந்தனக்கூடு ஊர்வலம் வறதுக்குப் பந்தல் உயரம் போறாது. பிரிச்சுடணும்'னு சொன்னா கோயில் கமிட்டி அங்கத்தினர்கள் ஏத்துப்பாளா? கேள்விப்பட்டா, எதுடா சாக்குன்னு அலையற நரிப்பசங்களும் சும்மா இருப்பாள்களா? வேணும்னே விஷயத்தைப் பெரிசுபடுத்திக் கலாட்டாவை ஆரம்பிச்சுடுவான்களே."

சம்சுதீனுக்குக் குரல் கம்மியது, "உண்மைதாங்க. எங்க நிலைமையும் இதேதான். இப்பதான் திருவிழா முடிஞ்சிருக்கு. உடனே பந்தலைப் பிரிக்கச் சொல்ல வேண்டாம். வேறெ தெருவழியா கூடு ஊர்வலம் விடலாம்னு சொன்னா கேட்பாங்களா? இதுக்குன்னே இருக்கிற முரட்டுப்பசங்க ஆச்சா போச்சான்னு சண்டைக்கில்லே வருவானுங்க. கமிட்டி ஒத்துக்கிட்டாலும் இவனுக ஒத்துக்க மாட்டானுங்களே".

"மரைக்காயரே! இந்த விஷயம் தர்க்கா கமிட்டிக்கோ கோயில் கமிட்டிக்கோ போக வேண்டாம். பந்தல் உயரம், பல்லக்கு உயரம், கூடு உயரம் இப்படிப்பட்ட விவரங்களை வெளியே விடவே வேண்டாம். ரெண்டு நாள் தீவிரமா யோசனை பண்ணி ஒரு முடிவு கண்டு பிடிச்சிருக்கேன்" என்றார் பஞ்சாமி.

"சொல்லுங்க அய்யா. நீங்கள் எது சொன்னாலும் செய்யத் தயாராக இருக்கேன்." என்று சம்சுதீன் தழுதழுத்த குரலில் கூறினார்.

"நீங்க செய்யறதுக்கு எதுவும் இல்லை. இப்ப பந்தல் காண்ட்ராக்டரைக் கூப்பிட்டனுப்பினதே என் தீர்மானத்தைத் தெரிவிக்கத்தான். சாயங்காலம் நானே வந்து உம்மகிட்டே சொல்லலாம்னு இருந்தேன். நீங்களே வந்துட்டேள்" என்றார் பஞ்சாமி.

பந்தல்காரர் சம்சுதீனைப் பார்த்துக் கூறினார். "ஆமாம் மரைக்காயரே! எப்பவும் போல பந்தல் போடறதுக்குக் கோயில் கமிட்டிக் காரங்க அட்வான்ஸ் கொடுத்துட்டாங்க. இப்பதான் அய்யா கூப்பிட்டனுப்பிச்சு, இந்த மாதிரி ஒரு சிக்கல் வருதுன்னு சொல்லி, பந்தல் உயரத்தை நாற்பது அடியா உசத்திப் போடச் சொன்னாங்க. இப்ப உங்க சந்தனக்கூடு தாராளமா பந்தல் வழியா வரலாம் பாருங்க".

சம்சுதீனுக்குக் கண் கலங்கியது.

"அய்யா. பெரியவங்கன்னா அது நீங்கதான். ஆனாலும் ஒரு சந்தேகங்க. இதுக்குக் கோயில் கமிட்டியிலே சம்மதிப்பாங்களா? பந்தல் உயரம் கூடினா அதிக செலவாகும்னு மறுத்துட மாட்டாங்களா?"

"நிச்சயமா ஒத்துக்க மாட்டாங்க. அவங்க அனுமதி வழங்கியது வழக்கமா போடற முப்பத்தஞ்சு அடி உயரப் பந்தலுக்குத்தான். அவங்ககிட்டே கூடுதலா ஆகிற செலவைக் கேட்கறதிலே நியாயமுமில்லையே. அதனாலே அந்த அதிகப்படிச் செலவை நானே ஏத்துக்கறதா தீர்மானம் பண்ணிட்டேன் என்றார் பஞ்சாமி அய்யர் நிதானமாக.

சம்சுதீன் நடுங்கும் கரங்களால் பஞ்சாமி அய்யரின் கைகளைப் பற்றிக் கொண்டார். "வேணாங்க. நானே என் சொந்தப் பணத்திலேயிருந்து கொடுத்திடறேன். எங்க சந்தனக்கூடு போகிறதுக்குத்தானே பந்தலை உசத்தப் போறீங்க? அந்தப் பெருந்தன்மையே கோடி பெறுங்க.

"நல்லா இருக்கே நீங்க பேசிக்கிறது பந்தல்காரர் கோபத்துடன் எழுந்தார் "நான் அதிகமாகக் கேட்டாதானே நீங்க கொடுக்கிறதுக்கு? பந்தல் நான் போட்டுத்தரேன். அது என் பொறுப்பு. நீங்க யாரும் அதிகமாக எனக்கு ஒரு பைசா கொடுக்க வேண்டாம்".

## கத்தரித்து ஒட்டியது!

— நாடோடி

ஒரு காலத்தில் தொடர்ந்து புகை பிடிக்கும் வழக்கமுடைய ஸ்ரீலிண்டன் ஜான்சனை, அவருடைய வைத்தியர்கள், ஒரு சமயம், அவர் நோய்வாய்ப்பட்டதும், இனி புகைபிடிக்கக் கூடாது என்று தடுத்தனர். உடனேயே அவர் புகை பிடிப்பதை நிறுத்தினார். தாம் மனோதிடம் உள்ளவர் என்று காட்டுவதற்காக எதிர்மேஜையில் ஒரு சிகரெட்டு பெட்டியை எப்பொழுதும் வைத்திருப்பார்.

இந்த மனோதிடம் வாய்ந்தவர்தான் பின்னர் அமெரிக்க ஜனாதிபதி ஆனார்.

-------

தன் எதிரி ஒருவனை நையப் புடைக்க வேண்டும் என்பதற்காக, ஒருவன் குத்துச் சண்டை பழகிக்கொள்ள விரும்பினான்.

முதல்நாள், பாடம் கற்றுக் கொள்ளுவதற்குள் அவனுக்குப் போதும், போதும் என்றாகி விட்டது. அத்தனை குத்துகள் அவன் உடம்பில் விழுந்து விட்டன!

அடுத்தநாள், அவன், குத்துச்சண்டை பழக்கிக் கொடுத்தவரைப் பார்த்து, "என் எதிரியை நையப்புடைக்க வேண்டும் என்பதற்காகத்தான் நான் குத்துச்சண்டை பழகிக் கொள்ள விரும்பினேன். இப்பொழுது அந்த யோசனையைக் கைவிட்டுவிட்டேன். அந்த ஆளை இங்கு அனுப்புகிறேன். எனக்குச் சொல்லிக்கொடுக்க வேண்டிய பாடத்தை அவனுக்குச் சொல்லிக் கொடுங்கள்" என்று சொன்னான்.

-------

உலகப் பிரசித்திபெற்ற பியானோ வித்வான் பாத்ரூஸ்க்கி ஒரு சமயம், பாரிஸ் நகரில் நடந்த ஒரு சர்க்கஸில் பியானோ வாசித்துக் கொண்டிருந்தார்.

ஒரு நாள், அவருடைய சிறு பையன் சர்க்கசுக்குப் போக வேண்டும் என்று சொன்னான்.

"ஏன்? என் வாசிப்பைக் கேட்பதற்காகவா" என்று கேட்டார் பாத்ரூஸ்க்கி.

அதற்கு, பையன், "போ அப்பா, நான் ஏமாந்தே போய் விட்டேன். பாத்ரூஸ்க்கி சர்க்கஸில் தோன்றுவார் என்று நோட்டீசில் பார்த்ததும், நீங்கள் சர்க்கஸ் வித்தை காண்பிக்கப் போகிறீர்களாக்கும் என்று நினைத்தேன். நீங்கள் என்னடாவென்றால், வீட்டில் பியானோ வாசிப்பது, போலத்தான் அங்கும் வாசித்துக் காண்பித்தீர்கள்" என்றான்!

-------

ஒரு புகழ்பெற்ற வைத்தியருக்கு, வியாதியஸ்தர்கள் தங்கள் வியாதியைப்பற்றி வழ, வழவென்று பேசிக்கொண்டு போவது பிடிக்காது.

இதைத் தெரிந்து வைத்துக் கொண்டிருந்த ஒரு ஸ்திரீ, தன் கையில் காயம் பட்டதும், ஒன்றும் பேசாமல் கையை மாத்திரம் நீட்டினார்.

உடனே வைத்தியர் ஒரு மருந்தை எழுதிக்கொடுத்து, "இதைப்போடு" என்றார்.

அடுத்தநாள் அவள் வந்து, "தேவலை" என்றாள்.

"மருந்தைத் தொடர்ந்து போடு" என்றார் வைத்தியர்.

ஒரு வாரம் கழித்து, அவள் திரும்பி வந்து, "குணமாகி விட்டது. என்ன கொடுக்க வேண்டும்?" என்று கேட்டாள்.

அதற்கு வைத்தியர், "நீ ஒன்றும் கொடுக்க வேண்டாம். உன்னைப் போல நல்ல பெண்ணை நான் பார்த்ததில்லை" என்றார்.

"ஜேக்கப்! என்னங்க சொல்றீங்க!" என்று பஞ்சாமி அய்யர் திகைத்தார்.

"அய்யா! நான் கிறிஸ்தவன்தாங்க. இருபது வருஷங்களுக்கு மேலா சிவன் கோயில் திருவிழாப் பந்தலை நான்தாங்க காண்ட்ராக்ட் எடுத்துப் போடறேன். மதத்தைப் பார்த்தா காண்ட்ராக்ட் கொடுக்கறீங்க? மனுஷனைப் பார்த்துத்தானே? அப்படியே பார்த்தாலும் எங்க மாதா ஊர்வலமும் இதே பெரிய வீதி வழியாதானே வருது? நம்ம எல்லாருக்குமே பொதுத் தெரு தாங்க இது. ஏதோ என்னாலான தொண்டு. இது மாதிரி சந்தர்ப்பம் கிடைச்சதே பெரிசு. தயவு பண்ணி இந்தப் புண்ணியத்தையாவது எனக்கு விட்டுக் கொடுங்க" என்று கைகூப்பி நின்றார் ஜேக்கப்.

பஞ்சாமி அய்யரும், சம்சுதீனும் வாயடைத்துப் போய் உட்கார்ந்து விட்டார்கள்.

அந்த வருடம் சிவன் கோயில் உற்சவம் வழக்கம்போல் கோலாகலமாக நடந்தது. மூன்று நாள்களும் ஈசுவரன் பவனி வந்தார். முதல் நாள் இரவு முத்துப் பல்லக்கும், மறுநாள் இரவு புஷ்பப் பல்லக்கும் புதுப் பெண்ணாக ஜொலித்துக் கொண்டு ஊர்வலம் வந்தன.

மறுநாள் சந்தனக் கூடு உடம்பெல்லாம் வண்ண வண்ணமாகக் கண்ணாடி பளபளக்க, உச்சியில் மலர் குஞ்சலம் தலையசைக்க அசைந்து அசைந்து பந்தலைக் கடந்தது.

ஊர்மக்கள் வேறுபாடின்றிக் கூடி நின்று எல்லா ஊர்வலங்களையும் வேடிக்கை பார்த்து மகிழ்ந்தனர். பல்லக்கு என்ன உயரம், சந்தனக்கூடு என்ன உயரம், பந்தல் வழக்கத்தை விட ஐந்தடி உயரம் கூடுதலா என்பன போன்ற சந்தேகங்களே அங்கே யாருக்கும் எழவில்லை.

மதங்களைக் கடந்த அந்த மூன்று மனிதர்களும் நிம்மதிப் பெருமூச்சு விட்டனர்!

# மனத்தில் சுமந்த கர்ப்பம்

**அமரர் சின்னிகிருஷ்ணன் நினைவுச் சிறுகதைப்போட்டி மூன்றாம் பரிசு ரூ.1000/- பெறும் சிறுகதை**

பெரிய மகன் மாணிக்கத்துடன் பேசிவிட்டுத் திரும்பிய பொன்னம்மாளின் உடல் நடுங்க ஆரம்பித்திருந்தது - மனத்தைப் போலவே.

சித்திரை மாதத்தின் ஏறு வெயில் வாலிப முறுக்குடன் வெப்பத்தை வாரியிறைக்கத் தொடங்கியிருந்தது. வெயிலுக்கு அஞ்சியோ என்னவோ காற்றுகூட எங்கோ ஒளிந்து கொண்டுவிட்டது. அதனால் வெயிலுக்குக் கொண்டாட்டம். இரட்டிப்பாகித் தகிக்கத் தொடங்கியிருந்தது.

மனம் முழுக்க நமநமவென்று அரித்தெடுக்கின்ற கவலை - கடைசியாய் மூத்த மகன் நெருப்பாய்க் கொட்டிய வார்த்தைகள், இரண்டு நாள்களாகப் பச்சைத் தண்ணீரைக் கூடக் காணாத வெறும் வயிறு - முதுமை- வெப்பத்தின் மூர்க்கம் - இவற்றில் எது காரணமோ அல்லது இவை எல்லாவற்றின் ஒட்டுமொத்த தாக்குதல் காரணமோ... கருங்கல் ஜல்லிகள் பெயர்ந்து கிடந்த தார் ஊற்றப்படாத கப்பிச் சாலையில் சரேலெனச் சுருண்டு விழுந்துவிட்டாள் பொன்னம்மா.

அப்படி விழுந்தவளை முதலில் பார்த்தது கோடி வீட்டு ஆறுமுகத்தின் கடைக்குட்டி சித்ரவேலுதான். அவன்தான் ஒட்டமாய் ஓடிப்போய் வயலில் உளுந்துச் செடி பிடுங்கிக் கொண்டிருந்த பொன்னம்மாவின் சின்ன மருமகள் ஏலம்பூவிடம் தகவல் சொன்னான்.

"அத்தே... அத்தே... நம்ப ஆத்தா மயக்கம் போட்டு ரோட்டுலே விழுந்துடிச்சு..."

சொன்ன கையோடு அய்யனார் கோயில் களத்துமேட்டில் வைக்கோல் அடித்துக் கொண்டிருந்த பேரன் சிவசாமியிடமும் சொன்னான்.

"அண்ணே... உங்க ஆத்தா ரோட்டுலே மயக்கம் போட்டு விழுந்திடிச்சு..."

உத்தமசோழன்

ஓட்டிக் கொண்டிருந்த மாட்டுப் பிணையலை அப்படியே விட்டுவிட்டுத் தலைதெறிக்க ஓடிவந்தான் சிவசாமி. அதற்கு முன்னதாகவே அவன் அம்மா ஏலம்பூவும், மாரியம்மன் கோயில் பூசாரி மாரிமுத்துவும் இன்னும் சிலரும் விழுந்து கிடந்த பொன்னம்மாக் கிழவியைத் தூக்க முற்பட்டனர்.

ஓடிவந்த பேரன் முகம் முழுக்கப் பதற்றத்துடன் "ஆத்தா... ஆத்தா..." என்று கூப்பிட்டுப் பார்த்துப் பதில் கிடைக்காமல், எல்லோரையும் ஒதுக்கிவிட்டு தான் மட்டுமே அவளைத் தோளில் தூக்கிப் போட்டுக் கொண்டு வடக்குத் தெருவில் இருக்கும் வைத்தியர் வீட்டிற்கு ஓடினான்.

மற்றவர்கள் பயக் கலவரத்துடன் அவன் பின்னால் ஓடிக் கொண்டிருந்தனர்.

★★★

"பலஹீனம்தான்... பயப்படறதுக்கு ஒண்ணுமில்லே" என்று ஏதோ இன்ஜெக்ஷன் போட்ட வைத்தியர் இரண்டு மூன்று கலர் மாத்திரைகளைக் கொடுத்து வீட்டிற்கு அழைத்துக் கொண்டு போகும்படி சொல்லிவிட்டார்.

---

**"உலகத்திலே காசு பணம் இல்லாம இருந்துடலாம்... ஆனா, தன்னைப் பிரியமா நினைக்கிற மனுசங்க இல்லாம மட்டும் இருக்க முடியாது..."**

---

வீட்டிற்குக் கொண்டு சென்றதும் நடுக்கூடத்தில் தேங்காய் நார் கட்டிலை எடுத்துப் போட்டு, இனி எதற்குமே பயன்படுத்த முடியாது என்றிருந்த பழந்துணிகளை அள்ளிப் போட்டு மெத்தைப் போலாக்கி அதில் பொன்னம்மாவைப் படுக்கவைத்தனர்.

ஏலம்பூவிக்கு நன்றாகத் தெரியும். மாமியாருக்கு உடல் தளர்ச்சி பாதி என்றால் மனத்தளர்ச்சி பாதி என்று. எனவே முதலில் அவளுக்கு ஏதாவது குடிக்கக் கொடுக்க வேண்டுமென்று நினைத்தாள். ஒரு கை நொய்யை (நொறுங்கிப் போன அரிசி) அலுமினியக் குண்டானில் அள்ளிப் போட்டுக் கொதிக்க வைத்தாள். அடுப்பில் ஒடித்து வைத்த வேலிக் கருவைச் சுள்ளிகள் படபடவென எரியத் தொடங்கின.

அதையேப் பார்த்துக் கொண்டிருந்தவளுக்கு என்ன தோன்றியதோ என்னமோ... மகனைக் கூப்பிட்டாள்.

"சிவா... ஆத்தாவுக்கு உடம்புக்கு ஒண்ணுமில்லே... மனசிலேதான் கோளாறு. இன்னைக்குப் போரடி வேலை

முடிஞ்சதும்... அந்த மனுசன் எங்கே தொலைஞ்சிருப்பாருன்னு கொஞ்சம் தேடிப் பாரு... இதும் மனசலே அதுதான் பெரிய தவிப்பு. சாகப்போற காலத்திலே மனச் சங்கடத்தோட போவக்கூடாது பாரு...

ஏலம்பூ குறிப்பிட்ட 'அந்த மனுசன்' என்பது வேறு யாருமல்ல; அவளது கணவன்தான். அதாவது சிவாவின் தகப்பன், பொன்னம்மாவின் இரண்டாவது மகன் முத்து.

"சரிம்மா...!" என்ற தலையாட்டலில் 'சரி... தேடித் தொலைக்கிறேன்...' என்ற எரிச்சல் பளிச்சிட்டது.

மகனைச் சட்டென்று ஏறிட்டுப் பார்த்துவிட்டு நொய்க் கஞ்சியுடன் மாமியாரிடம் சென்றாள் ஏலம்பூ.

★★★

மாலையில் போரடி முடிந்து வீடு திரும்பிய சிவா நேரே பொன்னம்மா படுத்துக்கிடந்த கட்டிலுக்கருகில் சென்றான். அவள் சுருட்டிப் போட்ட பழந்துணி போலக் கிடந்தாள். வற்றிப்போன கண்கள் மோட்டு வளையை வெறித்திருக்க அதன் ஓரமெங்கும் நீர்த்திரையிட்டிருந்தது.

பாட்டி கிடந்த கோலத்தைப் பார்த்ததும் பேரன் கலங்கிப் போய்விட்டான்.

"ஆத்தா...நேத்து அப்படி உங்கிட்ட நான் பேசியிருக்கக் கூடாது ஆத்தா... தப்புதான் ஆத்தா... என்னை மன்னிச்சுடு ஆத்தா..."

அவன் குழந்தையைப்போல் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்துவிட்டான்.

கிழவிக்கு நினைவு திரும்பிச் சற்று நேரமாகியிருந்தது. அழுகின்ற அவனை "அழாதே... அழாதே...!" என்று ஜாடை காட்டினாள். யார் மனசும் கஷ்டப்படக் கிழவிக்குப் பொறுக்காது. தன் வறண்டுபோன குச்சு விரல்களால் சிவாவின் கண்களைத் துடைக்க முயன்றாள்.

★★★

பொன்னம்மா ஊரிலுள்ள ஒருவர் பாக்கியில்லாமல் கேட்டுவிட்டாள் "நம்ம முத்துப்பய எங்கியாவது கண்ணிலே பட்டானா...?"

"இல்லையே...!"

"ஒரு வாரமாச்சு வீட்டை விட்டுப் போயி... எங்கே போனான்னே தெரியலே..."

"எங்கே போப்போறான்... கழுதை கெட்டா குட்டிச் சுவரு. எங்காவது குடிச்சுட்டு விழுந்து கிடப்பான்..."

இப்படிச் சொன்ன யார் மீதும் அவளுக்குக் கோபம் வரவில்லை. இப்படி ஓர் உதவாக்கரை மீது யாருக்குத்தான் பிரியம் இருக்கும்?

முத்து வீட்டைவிட்டுப் போய் ஒரு வாரம் ஆகிப் போயிருந்தாலும் அந்தக் குடும்பத்தின் செயல்பாடுகள் ஏதும் நின்று போய்விடவில்லை. முத்துவின் மனைவி உளுந்து பிடுங்கப் போகிறாள். மதியத்திற்கு மேல் வெயிலில் உலர வைத்துத் தூற்றி அளந்து சாக்கில் கட்டி வைக்கிறாள்...

பேரன் சிவா விடிவதற்கு முன்பே கோட்டகத்திற்கு வைக்கோல் போரடிக்கப் போய்விடுகிறான். மாலையில் தலையில் ஒரு சிறு நெல் முட்டையோடு திரும்பி வருகிறான். முட்டையைப் போட்டுவிட்டு மாரியம்மன் கோயில் குளத்திற்குப் போய்க் குளித்துவிட்டு வருகிறான்.

சுடச்சுடச் சாப்பிடுகிறான். பிறகு சட்டையை எடுத்துப் போட்டுக் கொண்டு மாரியம்மன் கோயிலடிக்குப் போகிறான். அவன் வயதுப்பிள்ளைகளுடன் அரட்டை அடிக்க... அல்லது பக்கத்து டூரிங் டாக்கிஸுக்குச் சினிமாப் பார்க்க....

அம்மாவிற்கும் பிள்ளைக்கும் அந்த வீட்டில் முத்து என்று ஒருவன் இருந்தானே... ஒரு வாரமாக அவனைக் காணவில்லையே என்ற எண்ணம் வந்ததாகவே தெரியவில்லை...

ஆனால் பொன்னம்மாவால் அப்படி இருக்க முடியவில்லை.

பொறுத்துப் பொறுத்துப் பார்த்த பொன்னம்மா கடைசியாக நேற்று சாயங்காலம் களத்துமேட்டிலிருந்து வந்த பேரன், குளித்துவிட்டு சாப்பிடும் வரைக் காத்திருந்து, மெதுவாகக் கேட்டாள்...

"ஏண்டா... சிவா... அப்பாவை ஒரு வாரமாகக் காணலையே... எங்கேன்னு தேடிப் பார்க்கக்கூடாதா...?"

இத்தனைக்கும் அவள் குரல் தேய்ந்து சன்னமாகத்தான் ஒலித்தது. ஆனாலும் பேரன் அவளை வெடுக்கென்று திரும்பிப் பார்த்தான்.

"என்ன சொன்னே... அப்பாவா...? எனக்கு எங்கேயிருக்கான் அப்பன்? அப்படி ஒருத்தன் இருந்திருந்தா எதுத்த வீட்டு ராமு மாதிரி... பாண்ட் ஷீண்ட் போட்டுக்கிட்டு காலேஜிலே போயிப் படிச்சுட்டு வருவேனே... அட... ஒண்ணுமில்லாட்டி பத்தாவது வரையாவது படிச்சுட்டு ஆபீஸ் கீபிஸ்லே நம்ப கணேசன் மாதிரி, லட்சுமி மாதிரி ஏதாவது வேலை பார்ப்பேனே... நான் அப்படியா இருக்கேன்...? மாடு மேய்ச்சுக்கிட்டிருக்கேன்... மண்ணைக் கொத்திக் கிட்டிருக்கேன்".

பொன்னம்மாவுக்குச் 'சுருக்' கென்றது.

"ஏண்டா... ஊரு உலகத்திலே இருக்கிற எல்லா அப்பன்களும் தங்களோட பிள்ளைங்களை காலேஜிக்குத்தான் அனுப்பிச்சுக்கிட்டிருக்கானா... வயல் வேலை செய்ற பிள்ளைங்கலெல்லாம் உன்னை மாதிரி எங்களுக்கு யாரும் அப்பன் இல்லேன்னுதான் சொல்றாங்களா...?" குரல் முழுவதும் ஆற்றாமை.

"இல்லைதான்... ஆனா நீ சொல்ற அந்த அப்பாமார் எல்லாம் ஒழுங்கா மரியாதையா பாடுபட்டுச் சம்பாதிச்சுப் பொண்டாட்டி புள்ளங்களைக் காப்பாத்துறாங்க... ஆனா உன் பிள்ளை என்ன பண்றான்? ஒரு வேலையும் செய்றதில்லே... ஊரு சுத்த வேண்டியது... நானும் அம்மாவும் இரத்த வேர்வை சிந்திக் கஷ்டப்பட்டுச் சம்பாதிச்சு வீட்டுலே கொண்டாந்து வச்சிருக்கிறதைத் திருடிக்கிட்டுப்போய், வித்துட்டுக் குடிக்க வேண்டியது... குடிச்சுட்டுக் கண்ட கண்ட இடத்திலே விழுந்து கிடக்க வேண்டியது...அந்த

மாதிரி ஒன்னுக்குமே உதவாத ஆளுக்குப் பொறந் துட்டேங்கிறதாலே நான் அப்பனுங்கனுமா...? அவனைக் காணுமேன்னு தேடிக்கிட்டு அலையனுமா...? அதுக்கு அவசியமே இல்லே... இந்த ஒரு வாரமாத்தான் நான் நிம்மதியாச் சாப்பிட்டு நிம்மதியாத் தூங்கறேன்... அது உனக்குப் பொறுக்கலையா? இப்ப எனக்கு என்ன கவலை தெரியுமா? போன சனியன் ஒரு வழியா போய்த் தொலையாம மறுபடி வந்து தொலைச்சிடப் போவுதோ என்னமோங்கிறதுதான்..."

பொன்னம்மா வாயை மூடிக் கொண்டாள். கண்களை யும்தான். ஆனால் மூடிய கண்களிலிருந்து தாரை தாரையாக வடிந்த கண்ணீரை அவளால் நிறுத்தமுடியவில்லை.

பேரன் மீது அவளுக்குக் கோபம் வரவில்லை. 'அவனது ஆத்திரம் நியாயமானதுதானே..'

☆☆☆

நேற்று ஆத்திரத்தில் பேசிய வார்த்தைகளின் கடுமை, நிதானமாய் இருந்தபோதுதான் தெரிந்தது.

"ஆத்தா... கவலைப்படாதே...! அப்பா எங்கே போயி ருந்தாலும் தேடிப் பிடிச்சு அழைச்சுக்கிட்டு வந்துடறேன்.."

பாட்டியின் கையை ஆறுதலாக அழுத்திப் பிடித்து விட்டுச் சட்டையை எடுத்துப் போட்டுக் கொண்டு சைக் கிளில் ஏறிப் போய்விட்டான் சிவா.

பொன்னம்மா சலனமேயின்றிப் படுத்திருந்தாள். கட்டி லுக்கு அருகில் அவளையே பார்த்துக் கொண்டு நெடுநேரம் உட்கார்ந்திருந்த ஏலம்பூவிற்குத் துக்கத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

"அத்தே... அத்தே..." என்று மாமியாரை எழுப்பினாள். லேசாகக் கண் திறந்தாள் பொன்னம்மா... "என்ன..?" என்பதுபோல் பார்த்தாள்.

"கொஞ்சம் போலக் கஞ்சியாவது குடிங்க அத்தே... வயசான உடம்பு. நேத்திலேருந்து பல்லிலே ஈரம்படாம இருக்கீங்க... தாங்காது..."

பொன்னம்மா ஒன்றும் வேண்டாம் என்பதுபோல் சைகை செய்தாள்.

சற்றுநேரம் பொன்னம்மாவையே மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்த ஏலம்பூ கட்டிலுக்கருகில் நெருங்கி அமர்ந்து கொண்டு தொண்டை கரகரக்கக் கண்களில் நீர் பனிக்கத் தலை கவிழ்ந்தவாறு சொன்னாள்.

"... நான் அப்படிச் சொல்லியிருக்கக்கூடாதுதான்... என்னமோ எம் மனசுக்குள்ளேயிருந்த ஆத்திரம்... அப்படிக் கொட்டிப்புட்டேன்..." மேற்கொண்டு சொல்ல முடியாமல் விசும்ப ஆரம்பித்துவிட்டாள்.

பொன்னம்மா தன் கையால் அவள் தலையை வருடிக் கொடுத்தாள். அந்த வருடலுக்கு, 'பைத்தியம்...! எதுக்காக இப்பக் கலங்குறே' என்று அர்த்தம்.

☆☆☆

நேற்று இரவு பேரனிடம் மகனைக் குறித்துக் கேட்ட தையும் அவன் கோபத்தில் பொறிந்துத் தள்ளிவிட்டுப் போனதையும் நினைத்து நீண்ட நேரம் நிச்சலனமாய்க் கிடந்தாள் பொன்னம்மா.



நடுநிசி தாண்டி ஊர் அடங்கிப் போய்விட்டிருந்தது. வாசல் கதவோரம் லேசான காலடியோசை கேட்டாலும், காற்றில் கூரைக் கீற்று லேசாக சலசலத்தாலும் 'மகன்தான் வந்துவிட்டானோ' என்று திடுக்திடுக்கென்று வாசலையே திரும்பித் திரும்பிப் பார்த்து ஏமாந்தபடியே கிடந்தாள் பொன்னம்மா...

அவளது கட்டிலுக்குக் கீழே மருமகள் ஏலம்பூ பலகையைத் தலைக்கு வைத்துக் கொண்டு தரையில் படுத்திருந்தாள்.

அவளைத் திரும்பிப் பார்த்தப் பொன்னம்மா சில நிமிஷ தயக்கத்திற்குப் பிறகு "ஏலம்பூ... ஏலம்பூ..." என்று கூப்பிட்டாள்... ஏலம்பூ சடக்கென்று எழுந்து உட்கார்ந்தாள்.

"என்ன அத்தே.." என்று சற்றுப் பதற்றத்துடன் கேட்டாள்.

"ஒண்ணுமில்லேம்மா... சிவாதான் சின்னப்புள்ளே... அப்பன் மேலே உள்ள ஆத்திரத்திலே அவனைப்பத்திக் கவலைப்படலே.. நீகூட புருஷனைப் பத்திக் கவலைப்படாம இருக்கியே...எப்படிம்மா..?"

ஏலம்பூ அத்தைக்காரியைச் சற்று நேரம் நிச்சலனமாய்ப் பார்த்தாள்.

"அத்தே... இப்படி நீங்க என்னைக் கேட்டுடக் கூடாதேன்னு ஊர்லே உள்ள சாமியையெல்லாம் வேண்டிக்கிட்டிருந்தேன். அப்படிக் கேட்டுட்டா என்ன சொல்றதுன்னு தவிச்சுக்கிட்டிருந்தேன்.."

'ஏன்..?' என்பதுபோல் பொன்னம்மா மருமகளையே பார்த்துக்கிட்டிருந்தாள்.

"என்னைப் பொறுத்தவரைக்கும் இனிமே நமக்கு புருசன்னு யாரும் இல்லேன்னு முடிவு பண்ணி ரொம்ப நாளாச்சும்மா... நான் தவறாம குடிச்சுட்டு வர்றதும், வீட்லே இருக்கிற பொண்டாட்டியையும், புள்ளையையும் இழுத்துப் போட்டு அடிக்கிறதும் தெரு கூடி வேடிக்கை பார்க்கிற மாதிரி அவமானப்படுத்தறதுமா இருந்தா எந்தப் பொண்டாட்டிதான்... எவ்வளவு நாளைக்குத்தான் பொறுத்துக்குவா..? என்னாலும் பொறுத்துக்க முடியலே... சரி... நம்ப கையும் காலும் இருக்கு...பாடுபடுவோம்... சாப்பிடுவோம்னு இருந்துட்டேன். புருசன் கையை எதிர்பார்க்கிறவதானே பொறுத்துக்கணும்..?"

'உண்மைதான்!' என்று ஆமோதிப்பவளைப் போல் பொன்னம்மா மௌனமாக ஏலம்பூவையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

வாசலில் காலடிச் சத்தம் கேட்டதும் சடக்கென்று எழுந்தாள் ஏலம்பூ.

அவளது கொழுந்தன் பொன்னம்மாவின் பெரிய மகன் மாணிக்கம் உள்ளே நுழைந்து கொண்டிருந்தான்.

"அம்மா... அம்மா..! கீழே விழுந்துட்டியாமே.." பதற்றத்துடன் அம்மாவின் கையைப் பிடித்தான்... அம்மா அவனைத் திரும்பிப் பார்த்தாள்.

அம்மா கிடந்த கிடையைக் கண்டதும் அவனுக்குக் கண்ணீர் முட்டிக் கொண்டு வந்தது.

"அம்மா.. அமமா..." என்று மறுபடியும் கரகரத்தான். உதடுகள் கோணிக்கொண்டன.

'என்னப்பா.. ஏன் இப்படிக் கலங்கறே..?' என்பதுபோல் பெரிய மகனைப் பார்த்தாள் பொன்னம்மா..

"நான் ஒரு மடையன்.. உன் மனசைப் புரிஞ்சுக்காம காலையிலே ஆத்திரத்திலே கண்ணு மண்ணு தெரியாம பேசிட்டேன்.." இப்படிச் சொல்லிவிட்டு அந்த நாற்பத்தைந்து வயது ஆண்பிள்ளை ஐந்து வயதுக் குழந்தையைப் போல் அம்மாவின் முன் கலங்கத் தொடங்கினான்.

"டேய்.. என்னப்பா நீ.. சின்னப் பிள்ளை மாதிரி.." அவன் கன்னத்தைத் தன் வற்றிப் போன விரல்களால் வருடிக் கொடுத்தாள்.

காலையில் அந்தப் பெரிய மகனைத் தேடிக் கொண்டு போன பொன்னம்மா "பெரியதம்பி.. சின்னவனை ஒரு வாரமாகக் காணலேடா.." என்று சொல்லத் தொடங்கியது தான் தாமதம்...

"அப்படியா..! ரொம்ப நல்லதாப் போச்சு... போனவன் எங்காவது கண் காணாம செத்துத் தொலையணும்னு

## அமுதசுரபி 1993 இலக்கிய விழாவில்...

'அமுதசுரபி' வெளியீட் டாளர்கள் ஸ்ரீராம் டிரஸ்ட் நடத்திய புதினப் போட்டியில் 'பத்தினிப் பெண்' நூலுக்கு ரூ.5,000/- பரிசு பெற்ற திருமதி ஜி.திலகவதி ஐ.பி.எஸ்.



கோ. திலகவதி



உத்தமசோழன்

'தொலைதூர வெளிச்சம்' நூலுக்கு ரூ.5,000/- பரிசு பெற்ற திரு. உத்தம சோழன்.



ஜி. நாராயணன்



பானுமதி ராஜகோபாலன்



...ஜந்திரகுமார்

'அமுதசுரபி' - வெல்வெட் ஷாம்பு நிறுவனம் இணைந்து நடத்திய அமரர் சின்னி கிருஷ்ணன் நினைவுச் சிறு கதைப் போட்டியில் முதல் பரிசு ரூ.3,000/- பெற்ற திரு. ஜி. நாராயணன். இரண்டாம் பரிசு ரூ.2,000/- பெற்ற திருமதி பானுமதி ராஜகோபாலன்.

'அமுதசுரபி' - பார்க்டவுன் பெனிபிட் பண்டு லிட் இணைந்து நடத்திய சிறந்த நாவல் (கையெழுத்துப் பிரதி) போட்டியில் ரூ.10,000/- பரிசு பெற்ற திரு. ராஜேந்திரகுமார்.

அம்மனுக்கு வேண்டிக்கிட்டுப் பால் காவடி எடுத்திடறேன்.."

பெரிய மகன் சொன்ன வார்த்தைகளின் உஷ்ணம் தாங்க முடியாமல் சுவரைப் பிடித்துக் கொண்டு விழுந்துவிடாமல் கீழே உட்கார்ந்து கொண்டாள்.

"எனக்குத் தம்பியா அவன்..? என் மானத்தையே வாங்குறான்... எம் பேரைச் சொல்லிக் கண்ட கண்ட இடத்திலே கடன் வாங்க வேண்டியது... குடிக்க வேண்டியது... சாக்கடையோரம் குப்பைக் குழியோரம் விழுந்துகிடக்க வேண்டியது. ச்சே.. இப்படி ஒரு தம்பி பொறக்காமலே இருந்திருக்கலாம்.."

பொன்னம்மா கண்களை மூடிக் கொண்டாள்.

"எம்மா... உனக்கு எத்தனை தடவை சொல்லியிருக்கேன்.. இனிமே அந்த ஊதாரிப்பய வீட்டுக்குப் போகாதே... இங்கேயே கால்நீட்டிப் படுத்துக்க... உன்னை ராஜாத்தி மாதிரி கவனிச்சுக்கிறேன்னு. கேக்குறியா? ஏதோ அவனை மட்டும்தான் தவம் இருந்து பெத்தது மாதிரி, அவன் வீட்டுக்கே போயி முடங்கிக்கிறே.. சரி.. அங்கேயாவது உன்னை நிம்மதியா இருக்க விட்டானா... அதுவும் இல்லே... ஆனா உனக்கு மட்டும் சதா சர்வ காலமும் அவனோட நினைப்புதான். அதான் தேடிக்கிட்டு வந்திட்டே... புள்ளையைக் காணோம்னு. ஒண்ணு செய்யி. கொல்லைப்பக்கம் போயி 'சனி ஒழிஞ்சதுன்னு' தலை முழுகிட்டுப் பேசாமப் போயி படு".

இப்படி ஆத்திரத்தின் உச்சத்தில் நின்று கொட்டிவிட்டுப் போனவன்தான் இப்போது வந்து கண் கலங்கி நிற்கிறான்.

அம்மாவின் கைகளை எடுத்துக் கொண்டு மகன் கலங்கியபோது தாயார்க்காரி சொன்னாள்.

"பெரியதம்பி... எனக்கு உம் பேரிலோ ஏலம்பூ பேரிலோ பேரன் பேரிலோ கொஞ்சம்கூட வருத்தமில்லேப்பா... உங்க ஆத்திரமெல்லாம் சரிதான். எனக்கும் முத்துவோட தப்பும் தெரியுது... ஊதாரித்தனமும் தெரியுது. கோபமும் வருது... ஆனா வெறுத்துட முடியலே...ஒரு சமயம் இந்தப் பாழும் வயிறு அவனைச் சுமந்ததுதான் காரணமோ என்னமோ.."

அவளால் தொடர்ந்து பேச முடியவில்லை. மூச்சு மேலும் கீழும் இழுத்தது. பேசியதன் விவரம் இதுவாகத்தான் இருக்க வேண்டும் என ஊகிக்க முடிந்ததே தவிர தெளிவாகப் புரியவில்லை.

ஆனாலும் அவள் சொன்னதைக் கேட்டதும் மாணிக்கமும் ஏலம்பூவும் கலங்கிப் போனார்கள்.

"தம்பி... உலகத்திலே காசு பணம் இல்லாம இருந்துடலாம்... ஆனா தன்னைப் பிரியமா நினைக்கிற மனுசங்க இல்லாம மட்டும் இருக்க முடியாதுப்பா... அது ரொம்பக் கொடுமை... முத்து ஒருத்தருக்கும் உதவாதவன்தான்... என்ன பண்றது... ஆனாலும் அவனைப் பிரியமா நினைக்கிறதுக்கு ஒரு மனுஷாள்கூட இல்லாம பொண்டாட்டி புள்ளைகூட 'செத்தால் தேவலாம்னு' நினைக்கிற மாதிரி இப்படி அநாதையாப் போயிட்டானேன்னு நினைக்கிறப்ப என்னால் தாங்கிக்க முடியலேப்பா... கடைசியா அந்தப் பயலை ஒரு தடவை பார்த்து, நல்ல புத்தியா நடத்துக்கடான்னு சொல்லிட்டுக் கண்ணை மூடலாம்னு பாத்தா முடியாது போலிருக்கே.."

பொன்னம்மா குமுறிக் குமுறி அழுதாள். அதற்கு மேல் யாராலும் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

★★★

மூத்த மகன் மாணிக்கம், பேரன் சிவா இருவரும் ஆட்களோடு இரவு முழுதும் முத்துவைத் தேடினார்கள். 'அவனை எப்படியாவது பொன்னம்மாவின் கண்முன்னால் கொண்டுவந்து நிறுத்திவிட வேண்டும்' என்று. பொழுது புலரும் தருணத்தில் ஊருக்குக் கிழக்கே வறண்டு கிடந்த பாமணியாற்றுப் பாலத்தின் கீழே, போதையில் விழுந்து மண்டை உடைபட்டு இறந்துகிடந்த முத்துவைப் பார்த்ததும் 'அடக்கடவுளே... இதை அம்மாவிடம் எப்படிடா சொல்வது என்று அவர்கள் திகைத்து நின்றபோது பாலத்தின் மேலிருந்து ஒருவன் பலமாகக் கத்தினான்.

"மாணிக்கத்தண்ணே... உங்க அம்மா போய்ச் சேர்ந்துட்டாங்க.." ●

# சங்கப் பலகை

## ஆன்மிகம்

### இஸ்லாம்பற்றி திராவிடத் தலைவர்கள்

(தொகுப்பாசிரியர் - அடியார். அச்சிட்டோர் - அண்ணன் அச்சகம், 27, பாளையக்காரன் குறுக்குத்தெரு, கோடம்பாக்கம் - சென்னை - 24. பக்கங்கள் - 44. விலை - ரூ. 5.00).

நாற்பதாண்டு காலத்திற்கு முன்பே சீலையம்பட்டியில் நிகழ்ந்த இஸ்லாம் மதமாற்ற நிகழ்ச்சி பற்றி பெரியார் ஈ.வெ.ரா. தெரிவித்த கருத்துகளும், இந்துமதத்தை எதிர்க்கும் தங்கள் இயக்கம் இஸ்லாமை வரவேற்பதன் காரணங்களைக் குறித்து அண்ணாவும், கலைஞரும் நிகழ்த்திய உரைகளும் இடம் பெற்றுள்ளன. கே.ஏ.

### பக்தியும் சக்தியும்

(ஆசிரியர் - பி.சி. கணேசன். வெளியீடு - பாமா பதிப்பகம், 5, சிவஞானம் சாலை, சென்னை - 600 017. விலை - ரூ. 12).

இந்து மதத்தின் பெருமை, ஆன்மிக இயல்பு, பக்தி முதலியவை பற்றிய பல நூல்கள் எழுதியுள்ள ஆசிரியர் பக்தியின் பெருமைகளை விளக்கும்போது தமது அணுகுமுறையை, பல தலைப்புகளில் 11 அத்தியாயங்களில் அழகுற எழுதியுள்ளார். "இந்து மதம் என்பது விஞ்ஞான பூர்வமான மதம். அதில் தோன்றிய அனைத்துக்குமே விஞ்ஞானக் கண்ணோட்டம்தான் அடிப்படை. பக்தி என்பது மனம் பற்றிய ஒரு விஞ்ஞானம்தான்" என்று கூறும் ஆசிரியர் தமது இந்த நூலில் இதே அடிப்படைக்குச் சான்றுகளையும் மேற்கோள்களையும் காட்டியுள்ளார்.

—க.ப.

### இந்து தர்மசாஸ்திரம்

(எழுதியவர் - பி.எஸ். ஆச்சார்யா. வெளியீடு - நர்மதா பதிப்பகம், 16/7, ராஜா பாதர் தெரு, பாண்டிபஜார், சென்னை - 17. விலை - ரூபாய் 20.00).

பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பு நம் நாட்டில் வாழ்ந்த முனிவர்களும், யோகிகளும், ரிஷிகளும் மனிதகுலத்துக்குச் சொல்லிச் சென்ற அறிவுரைகளும் அறவுரைகளும் அறவழியில் ஆனவை. அவற்றின் சாரத்தைச் சிறுசிறு கருத்துப் பெட்டகமாக இந்நூல் வழங்குகிறது.

'அகங்காரம் கொள்ளாமலும் அசூயைப் படாமலும் நல்ல புத்தியுடன் ஒருவன் நல்ல காரியங்களைச் செய்தால் அவனைத் துயரம் ஆட்கொள்வதில்லை. இப்படிப்பட்டவன் எங்கும் பிரகாசிப்பான். (பக்கம் - 72) 'விரோதத்தை விரோதத்தினால் வெல்ல முடியாது. கோபத்தைக் கோபத்தால் அழிக்க முடியாது!' (115) இவ்வாறு நூற்றுக்கணக்கான அரிய கருத்துகள் நூல் முழுவதும் நிறைந்துள்ளன.

### ஸ்ரீமத் பாகவதம்

(எழுதியவர் - எஸ்.பி. ராமச்சந்திரன். வெளியீடு - தாமரை நூலகம், 7, என்.ஜி.ஓ. காலனி, வடபழனி, சென்னை - 26. விலை - ரூ. 55.00).

சூதபுராணிகர், நைமியசாரண்ய வனத்து மகரிஷிகளுக்குப் பகவானுடைய பெருமைகளை உரைத்ததே, மகா பாகவதம். 866 பக்கங்களில் இரண்டு பாகமாக இந்நூல் வெளிவந்துள்ளது. பகவானின் திருவிளையாடல்களும், பகவானைப் பற்றிய கதைகளும் மனித வாழ்க்கையைப் பண்படுத்த வல்லவை. மனதையும், ஆன்மாவையும் பக்குவப்படுத்திப் பரம்பொருள் எது என்பதை நமக்கு இனம் காட்டுபவை. எல்லாம் இருக்கின்ற இடம் எதுவோ, எதுவுமே இல்லாத இடம் எதுவோ அந்த இடத்திற்கு நம் உணர்வையும் உயிரையும் கொண்டு சேர்க்கும் மகா 'சக்தியே, பகவான் கதைகள். அக்கதைகளை மிகவும் அற்புதமான வகையில் நல்ல நடையில் எழுதியுள்ள ஆசிரியர் பாராட்டுக்குரியவர்.

### தில்லைத் திருநடனம்

(எழுதியவர் - பி.ஸ்ரீ., வெளியீடு - முல்லை நிலையம், 43, புதுத் தெரு, மண்ணடி, சென்னை - 1. விலை - ரூ. 10.00).

தில்லையில் ஆனந்தத் தாண்டவம் ஆடும் நடராசர் தத்துவத்தையும் பொருளையும் எல்லார்க்கும் விளங்கும் வகையில் எளிய தமிழில் ஆசிரியர் தந்துள்ளார். ஞான சூரியோதயம், துயிலும் கருணையும், ஆடும் அற்புதமும், எது திருச்சிற்றம்பலம், சிற்றம்பலவனின் பரம நாடகம், திருநடனம், பூந்தாமரை தொழுத பொன் ஆகிய தலைப்புகள் சித்தாந்தக் கருத்துகளை விளக்குகின்றன. சைவர்களுக்கு மட்டும் அன்று அனைத்துச் சமயத்தினர்களுக்கும் ஏற்ற நூல்.

தாமரைக்கண்ணன்

### தெய்வத்தை நம்புங்கள் நிம்மதி கொள்ளுங்கள்

(ஆசிரியர் - ஸ்வாமி. வெளியீடு - அருணோதயம், 3 கௌடியா மடம் சாலை, இராயப்பேட்டை, சென்னை - 600 014. விலை - ரூ. 18)

வாழ்க்கை வாழ்வதற்கே, அல்லல்களுக்கு நடுவிலும் வாழ்வதற்கே. மகிழ்ச்சி மட்டும் வாழ்க்கையாகாது, துன்பம், நேர்கையிலும் வாழ வேண்டும் என்று விளக்கி நம்பிக்கையும் அமைதியும் முன்னேற்றமும் பெற, தெய்வத்தை நம்பித் துணைக் கொள்ள 'ஸ்வாமி', அவர்கள் பல நிரந்தர அனுபவங்களையும் மேற்கோள்களையும் காட்டி எழுதியுள்ள பயனுள்ள நூல், தெய்வத்தைப் பற்றி வாதம் புரிந்து, வம்புக்குப் போகாமல், மனதார நம்பி நிம்மதியாக வணங்கி உய்ய வேண்டியதை எளிமையுடனும் அழுத்தத்துடனும் விளக்கியிருக்கிறார் ஆசிரியர். ஆத்திக வாதம் மட்டுமின்றி, வாழ்க்கையைச் சுவையாக்கிக் கொள்ளும் வாய்ப்பை மனிதனே உண்டாக்கி மகிழ வேண்டும் என்று அறிவுறுத்தும் நூல். எல்லோர்க்கும் பயன்படும்.

- க.ப.

# சங்கப் பலகை

## கவிதை

### தியாகராஜ சுவாமிகள் – திருவொற்றியூர் பஞ்சரத்னக் கீர்த்தனைகள்

(தமிழ் மொழிபெயர்ப்பு – மா.கி. இரமணன். பக்கங்கள் – 14. விலை – ரூ . 2.00)

திருவொற்றியூர் பாரதி பாசறைச் செயலாளர் மா.கி. இரமணன் திருவொற்றியூர் வடிவுடையன்னை மீது தியாகராஜ சுவாமிகள் பாடிய 5 தெலுங்குக் கீர்த்தனங் களைத் தமிழ்ப்பாடல்களாக மொழிபெயர்த்துத் தந்திருக் கிறார். பொருளுணர்ந்து பாடுவ தற்கு உதவும் சின்னஞ்சிறு நூல். கிடைக்குமிடம் – பாரதி பதிப் பாலயம், 39/8, கிராமத் தெரு, திருவொற்றியூர் – சென்னை – 19.

இரா.சு

### 'மாணாக்கர் ஆற்றுப்படை'

(ஆக்கியோன் – முனைவர் கடவூர் மணிமாறன். விடியல் வெளியீட்டகம், 109, மேலைத்தெரு, கிருட்டிணராயபுரம் – 639 102. திருச்சி மாவட்டம். விலை – ரூ. 4.00).

ஆற்றுப்படை இலக்கியம் 'பழ சாகி நமுத்துப் போயிற்று' என்று புதுக்கவிதைவாதிகள் புலம்புகின்ற இந்நாளில் ஓர் ஆசிரியர் மாணாக்க ருக்கு ஆற்றுப் (வழிப்)படுத்துவதாக கவிஞர் அமைத்துள்ள ஒரு சிறிய நூல் இது. நடை மிக எளிமை. செய்தித் தொகுப்பு நிறையவே உள்ளதால் கற் பனைக்கு இடமில்லை. எனவே சற்று நகைச்சுவையையும் சேர்த் தளித்திருந்தால் நயமாயிருந் திருக்கும்.

—கவிஞர் வேதம்

### மறுபடியும் பூக்கும்

(ஆசிரியர் – சு. தணிகை. வெளி யீடு – தெய்வா பதிப்பகம், 11/105 புதுச்சாம்பள்ளி, மேட்டூர் அணை – 636 403. விலை – ரூ. 14.00)

சில நல்ல சிந்தனைகள் ஒரு நல்ல தலைப்பில் கவிதைகளாய் மலர்ந்திருக்கின்றன. மனிதன், காதல், சமூகம் போன்றவற்றைச் சுற்றிச்சுற்றி வட்டமிடுகின்ற படிக வரிகளில் சில –

சாதி மதக் கோடுகளை
கடப்பதுதான்
மனிதப் பரிணாம நிரூபணமே!
அன்பிருந்தால்
யுத்தமில்லாமலே
ஜெயிக்கமுடியும்
இவை
என் காதலி
கற்றுத்தந்த பாடம்!

நீலவன்

### காளமேகம் – தனிப்பாடல்கள்

(விளக்கம் – புலியூர்க்கேசிகன். வெளியீடு – முல்லை நிலையம், 43, புதுத்தெரு, மண்ணடி, சென்னை – 600 001. விலை – ரூபாய் 25.00).

நாவலர் சரிதை கூறும் காள மேகக் கவிஞரின் வரலாறு, நூலின் முதலில் விரிவாக இடம் பெற் றுள்ளது. காளமேகம், திருமலை ராயன் பட்டினத்திலும் பல்வேறு ஊர்களிலும் கோயில்களிலும் பாடிய தனிப்பாடல்கள் அனைத் தும் இடம் பெற்றுள்ளன. ஒவ் வொரு பாடலுக்கும் தெளிவான உரை தரப்பட்டுள்ளது. 'கண் டீரோ பெண்காள்...' போன்ற நிந்தா ஸ்துதிப் பாடல்களுக்கு (பக்கம் – 107) அளிக்கப்பட்டுள்ள விளக்கங்கள் அருமையானவை.

—தாமரைக்கண்ணன்

### "சிறகுகளின் சுவடுகள்"

(ஆசிரியர் – 'துறவி'. கௌதமன் பதிப்பகம், 14, நந்தனார் தெரு, விவேகானந்தர் நகர், சென்னை – 600 051. விலை – ரூ. 10.00).

கவிதை இலக்கியத்தில் பொடி நட்சத்திரங்கள் எனப் பூடகமாய் மின்னும் 'ஹைகூ' வரிகள் கண் சிமிட்டும் 'நூல்' இது. ஒவ்வொரு 'ஹைகூ'வும் கவிஞர் துறவிக்கு அவரது திறமைக்கு – முதுகில் 'ஷொட்டு' கொடுக்கிறது. ஆம் மென்மையும், சரளமும், கருத்தழ கும் கைகோத்து நடக்கும் மிடுக்கு புதிய தகவல்கள் ஒவ்வொரு வா யிலும் கொடுக்கும் கவிச் சொடுக்கு – இவையே இந்நூல் மூலம் ஆசிரியருக்குப் புகழ் கொடுக்கும்.

—கவிஞர் வேதம்

## ஜோதிடம்

### 1994ஆம் ஆண்டு ராசி பலன்

(ஆக்கியோர் – மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு. வெளியீடு மணிமேகலைப் பிரசுரம், தபால் பெட்டி எண் – 1447, 4, தணிகா சலம் சாலை, தி. நகர், சென்னை – 17. விலை – ரூ. 9 /–. பக்கங்கள் – 64).

12 ராசிகளுக்கும் ஒரே புத்தக மாக வீட்டில் உள்ளோர் அனை வருக்கும் பயன்படும்படி வெளி யிடப்பட்டுள்ளது. ஒவ்வொரு ராசியினருடைய நட்சத்திரம், பெய ரின் முதல் எழுத்துடன் உள்ள தெளிவான நூல். தனித்தனியாக ஜனவரி முதல் டிசம்பர் முடிய தொகுத்துக் கணித்துள்ளது நூலின் தனிச் சிறப்பு.

### குருப் பெயர்ச்சிப் பலன்கள்

(பதிப்பாசிரியர் – லேனா தமிழ் வாணன். வெளியீடு – மணி மேகலைப் பிரசுரம், தபால் பெட்டி எண் – 1447, 4, தணிகா சலம் சாலை, தி. நகர், சென்னை – 17. விலை – ரூ. 9 /–. பக்கங்கள் – 60)

12.10.93 முதல் 11.11.94 வரை குரு பெயர்ச்சியால் விளையும் பலன்களைத் தொகுத்து வெளி யாகியுள்ள நூல். ஒவ்வொரு ராசி யினருக்கும் தனித்தனிப் பலன் கள். 12 ராசியினருக்கும் சேர்த்து ஒரே புத்தகம். பலன்களுடன் பரிகாரங்களும் சொல்லப்பட் டுள்ளன. நாள்பட்டு உழைக்கக் கூடிய கடின அட்டை.

—நா...

## மருத்துவம்

### வண்ண மருத்துவம்

(ஆசிரியர் - டாக்டர் எம்.ஜி. அண்ணாதுரை. வெளியீடு - ஹெல்த் லிங்க் வெளியீடு, 78, கத்திவாக்கம் மெயின்ரோடு, சென்னை - 600 057. பக்கங்கள் - 96. விலை - ரூ. 12.00)

சூரியனில் மறைந்துள்ள ஏழு வண்ணங்களை உடல்மீது நோய்க் குறிகளுக்குத் தக்கபடி தனித்தனி வண்ணங்களாகச் செலுத்தி நோய் தீர்க்கும் மருத்துவம் வண்ண மருத்துவம். எந்தெந்த நோய்க்கு எந்தெந்த வண்ணங்களை எப்படியெப்படிப் பயன்படுத்த வேண்டுமென்பதைத் தக்க புரியக் கூடிய படங்களுடன் விளக்கும் சிறப்பு இந் நூலுக்குப் பெருமை கூட்டும் ஒன்றாகும். அதிகச் செலவில்லாத எளிய முறைகளில் நோய்களை விரட்டுவதை எடுத்துக் கூறும் விதம் பெரிதும் பாராட்டு தற்குரியது.

### காந்த சிகிச்சை

(ஆசிரியர் - டாக்டர் எம்.ஜி. அண்ணாதுரை. வெளியீடு - ஹெல்த் லிங்க்ஸ், 78, கத்திவாக்கம் மெயின் ரோடு, எண்ணூர், சென்னை - 57. பக்கங்கள் - 112. விலை - ரூ. 12.00)

காந்தக் கோளமான பூமியில் நாளும் மனிதர்கள் நோய்களின் தாக்குதல்களால் சொல்லொணாத் துயரங்களை அனுபவிக்கின்றனர். மனித உடலில் காந்த சக்தியைச் செலுத்துவதால் உடலுக்குத் தொல்லைகளைத் தருகின்ற அதிகப்படியான கசடுகள் நீங்கு கின்றன. அதிக இரத்த அழுத்தம் உள்ளவர்கள் இயல்பான நிலையை அடைகின்றனர். தலைமுடி நிறம்கூடக் கருமையுறுகிறது. 65 வய துள்ளவர்கள் 45 வயதினராகத் தோன்றுகின்றனர்.

பல்வேறு நோய்களுக்கும் காந்த சிகிச்சை எவ்வாறு அளிக்க வேண்டுமென்பதைப் படங்களுடன் விளக்கும் இந்நூல் ஒரு பயனுள்ள நூல்.

### டெலிதெரபி

(ஆசிரியர் - டாக்டர் எம்.ஜி. அண்ணாதுரை. வெளியீடு - ஹெல்த் லிங்க்ஸ், 78, கத்திவாக்கம் மெயின் ரோடு, எண்ணூர், சென்னை - 600 057. பக்கங்கள்- 80. விலை - ரூ. 12.00)

மருந்தில்லாத மாற்று மருத் துவ முறை, மருந்துகள் உண் டாக்கும் மற்ற விளைவுகளிலிருந்து விடுதலையை, நீடித்த நலனை வழங்குகிறது. தொலைதூரத் திலிருக்கும் ஒரு நோயாளியின் அலைவரிசையுடன் தொடர்பு கொண்டு அந்நோயாளிக்குக் குணம் வழங்கும் அபூர்வ முறை யான 'தொலை அலைத் தொடர் சிகிச்சை'யைப் பற்றிய செய்திகள் எளிய நடையில் படித்துப் பயன் அடையும் பாங்கில் அமைந்த சிறு நூலான இது ஒரு சீரிய நூல்.

நீலவன்

### ஆரோக்கியமும் பழங்களும்...

(ஆசிரியர் - வீ. சேரந்தையா பிள்ளை. வெளியீடு - தமிழ்நாடு இயற்கை மருத்துவச் சங்கம், மதுரை - 625 020. பக்கங்கள் - 72. விலை - ரூ. 9.00).

தமிழ்நாடு இயற்கை மருத் துவச் சங்கம், தமிழ்நாட்டில் இயற்கை மருத்துவ முறைகளை யும் இயற்கை வாழ்வியல் தத்து வங்களையும் பரவச் செய்து ஒவ் வொருவரையும் தங்களுக்குத் தாங்களே வைத்தியராக வளம் பெறச் செய்ய முயன்று வருகிறது. அந்த அடிப்படையில் இந்த நூலில் 29 படி வகைகள் பற்றி எழுதியுள்ளார் வீ. சேரந்தையா பிள்ளை. பழ வகைகளில் வியாதி யஸ்தர் எவைகளையெல்லாம் மருந்தாக - உணவாக உண்ண லாம்; எவைகளையெல்லாம் மருந் தாக உண்ணலாமென்பதை தனித் தனியே விளக்கியுள்ளார். நூலின் கடைசிப் பக்கங்களில் 65 வியாதி களைத் தொகுத்து அவைகள் தீர எந்தெந்தப் பழங்களைச் சாப்பிட வேண்டும் என்பதையும் தொகுத் துள்ளார். நல்ல நூல்.

### கிராம மூலிகைகள்

(ஆசிரியர் - புலவர் நா. பசும் பொற் கிழார். வெளியீடு - காந்திய இலக்கியச் சங்கம், மதுரை - 625 020. பக்கங்கள் - 24. விலை - ரூ. 4.00).

24 பக்கங்களில் நமக்கு மிக மிக எளிதாகக் கிடைக்கக்கூடிய 31 வகையான மூலிகைகளின் மருத் துவக் குணங்களையும், அதை எப்படி பக்குவப்படுத்தி உபயோ கிப்பது என்ற முறைகளையும் எளிதாக விளக்கியுள்ளார் இந் நூலின் ஆசிரியர். ஒரு மூலிகை, (மூலிகை என்றதும் கிடைக்காத பொருள் என்று மலைக்க வேண் டாம். வேப்ப மரமும் ஒரு மூலிகை தான்) பல நோய்களைக் குண மாக்குகிற சக்தியைப் பெற்றது என்பதை இந்நூல் விளக்கும்போது வியப்பாக உள்ளது. பயனுள்ள நூல் - குறைந்த விலையில்!

— நாகு

### மருந்தில்லாத மனநல மருத்துவம்

(எழுதியவர் - டாக்டர் ஆர்.எம். சோமசுந்தர். வெளியீடு - குமரன் பதிப்பகம், 2, முத்துகிருஷ்ணன் தெரு, தி.நகர், சென்னை - 17. விலை - ரூ. 25.00).

மனிதன், தன் உடல்நலத்தைக் கெடுத்துக் கொள்வதற்குக் கார ணமே மனநலக் கோளாறுதான். அவன் தன்னைத்தானே அறிந்து கொள்ளவும், பயம், கவலை, டென்ஷன் ஆகியவற்றால் மனமும் உடலும் கெடாமல் பாதுகாத்துக் கொள்ளவும் 22 தலைப்புகளில் இந்நூல் வழிமுறைகளைக் கூறு கின்றது. தூக்கமின்மை, தாழ்வு மனப்பான்மை, பழக்கத்துக்கு அடிமை, மெஸ்மர் முறை, பிரார்த் தனையும் ஒரு சிகிச்சை என்ற தலைப்புகளில் உள்ள செய்திகள் மிகவும் பயன்தருபவை.

மனக் குழப்பம் உள்ள பெரிய வர்களுக்கும், மாணவர்களுக்கும் இந்நூல் புதிய உற்சாகமுள்ள வாழ்க்கையை நல்கும்.

தாமரைக்கண்ணன்

# தமிழில் தவறுகளை அறிவோம்

## டாக்டர். தி. முத்து-கண்ணப்பர்

**மானிலம் – மாநிலம்** : '**மாநிலம்**' என்னும் சொல்தான் 'இடத்தை', உலகத்தை' – பூமியைக் குறிப்பது. மா+நிலம் = மாநிலம் – பெரிய உலகம், பெரிய பூமி ஆகும். சிலர் '**மானிலம்**' என்று எழுதுகிறார்கள். இது தவறு. மா+னிலம் இப்படி வருமொழி முதலில் 'ன'கரம் வராது. மான்+நிலம் என்று பிரிக்கப்படும். அப்படியானால் அச் சொல் உணர்த்தும் பொருளைச் சிந்தியுங்கள். மான் வாழும் நிலம் – காடு என்றல்லவா பொருளாகும். ஆதலால் '**மாநிலம்**' என்று எழுதுவதுதானே சரியானது!

**மணதில் – மனத்தில்** : மனம்+இல் = மனத்தில் தானே? அது எப்படி 'மனதில்' ஆகும்?

மரம்+இல் = மரத்தில்; பணம் + இல் = பணத்தில்; வனம்+இல் = வனத்தில்; பழம்+இல் = பழத்தில் – இப்படித்தானே சொல்கிறோம்; எழுதுகிறோம். 'மனதில், பணதில், வனதில், பழதில் என்று வலி (த்) மிகாமல் பேசுகிறோமா? எழுதுகிறோமா? இல்லையே.

'மனஸ்' என்னும் சம்ஸ்கிருதச் சொல் 'மனசு' ஆகி, பின் 'இல்' சேர்த்துத் 'தமிழில் மனதில்' என்று பேசுகிறார்கள். எழுதுகிறார்கள். இப்படி எழுத்தாளர்கள், ஏன், அறிஞர்கள் சிலர் கூடத் தமிழ் எழுதுவது மனத்தில் வேதனையைத் தருகிறது.

இனி 'மனத்தில்' என்பதை மனத்தில் பதிய வைத்து அப்படியே சொல்லிலும், எழுத்திலும் பயன்படுத்தித் தமிழின் தூய்மையைக் காப்போமாக.

**மானாவாரி** : பயிராகும் நிலங்களைப் பற்றி (வயல்கள்) கூறும் போது, **மானாவாரி** என்னும் சொல் குறிப்பிடப்படுகிறதல்லவா? அதன் பொருள் என்ன? குழப்பமாய் இருக்கிறதல்லவா? எந்த நிலத்தை இப்படிக் குறிப்பிடுகிறார்கள்? நன்செய் நிலம், புன்செய் நிலம் என்று இரண்டு வகை வயல்கள் உள்ளன. 'மானாவாரி' என்பது எந்த வயல்? பயிர் விளைவதற்குப் பெரிதும் இன்றியமையாதது '**மழை**' – (மாரி) அல்லவா? 'மானாவாரி' என்று குறிப்பிடப்படுவது, வேறு நீர்ப்பாசனம் இல்லாமல் மழையால் மட்டும் நீர் பெற்று விளைவிக்கப்படுகிற நிலம். அப்படியானால் இச்சொல் அந்தப் பொருளை உணர்த்தவில்லையே. இச்சொல் (மானாவாரி) அந்தப் பொருளைத்தான் குறிக்கிறது.

அச்சொற்றொடர், (மானாவாரி) முன்பின்னாக மாறி, எழுத்துகளும் மாறி அப்படியே வழக்கில் வந்து விட்டது. அதன் உண்மையான வடிவம் '**வானமாரி**' என்பதுதான். **வானம்** = ஆகாயம்; **மாரி** = மழை. வானத்தில் இருந்து நிலத்தில் பெய்யும் (மாரி) மழையை எதிர்பார்த்து விளைவிக்கப்படும் நிலம்தான் **வானமாரி**. அதாவது வானத்திலிருந்து **மழை பெய்து விளையும் விளைச்சல் பூமி**தான் இந்த **வானமாரி**. இதுதான் முன்பின்னாக, எழுத்துகளும் வெவ்வேறாக மாறி அதாவது **வானம்** மானமாகவும் **மாரி** வாரியாகவும் மாறி, நம்மைக் குழப்பத்தில் வைத்துள்ளது. எனவே, சரியான சொற்றொடர் **வானமாரி**. இப்போது பொருள் பொருத்தமாகவும், விளக்கமாகவும் உள்ளதல்லவா?

**முயற்சிக்கிறேன்** : இப்படியொரு சொல்லைச் சிலர் பரவலாகப் பேச்சிலும், எழுத்திலும் பயன்படுத்தத் தொடங்கியுள்ளனர். இது மாபெரும் பிழை.

**முயல்** – என்பது வினைச் சொல்.

**முயற்சி** – என்பது (முயல்+சி) பெயர்ச்சொல்.

முயன்றேன், முயல்கிறேன், முயல்வேன் என்று முக்காலங்களிலும் கூறப்படும்.

வினைச் சொல்லாகிய 'முயல்' என்பதிருக்க, பெயர்ச் சொல்லாகிய '**முயற்சி**'யை வினைச் சொல்லாக்கி 'முயற்சிக்கிறேன்' என்று சொல்வது பெருந்தவறல்லவா? ஆற்றல் வாய்ந்த சாதனங்களாகிய தொலைக்காட்சி, வானொலிகளில் இப்படிப் பலர் கூறும்போது வேதனையாக உள்ளது. இது மக்களிடையே விரைவில்

பரவி வருகிறது. இந்நிலை உடனே களையப் படல் வேண்டும்.

வேண்டுமானால் 'முயற்சி செய்தேன்' முயற்சி செய்கிறேன்' முயற்சி செய்வேன்' என்று சொல்லட்டும். அவ்வாறன்றி, 'முயற்சி மேற்கொண்டேன்' 'முயற்சி மேற்கொள்கிறேன்', 'முயற்சி மேற்கொள்வேன்' என்று கூறினாலும் சரியே.

'பயில்' என்னும் சொல் உள்ளது. இதைப் பொதுவாக பயின்றேன், பயில்கிறேன், பயில் வேன்' என்றுதானே சொல்கிறோம். பயிற் சித்தேன், பயிற்சிக்கிறேன், பயிற்சிப்பேன் என்று தன் வினையில் சொல்லுகிறோமா? 'முயல்' என்னும் சொல் இதனைப் போன்ற வினைச் சொல் தானே. இந்த வீண் முயற்சியில் சிக்கி நல்ல தமிழின் உயர்வைச் சிதைக்காமல் அதன் பொருளையும், நளினத்தையும், சிறப்பை யும் காப்போமாக. இனியேனும், உண்மை நிலையை உணர்ந்துகொண்டு, பொருளற்ற சொற்களைப் படைக்கும் அழிவு முயற்சியில் ஈடுபடாமல் இருக்க அன்பர்கள் முயல வேண்டு கிறோம்.

**முந்தாணி - முந்தாணை** : சேலை, வேட்டி, முதலியவற்றின் வெளிமுனைப் பகுதியைக் குறிக்கும் சொல். முன்+தானை = இவ்விரு சொற்களும் சேர்ந்தால் முன்றானை என வரும். அதாவது முனைப்பகுதி ஆடை-உடை என்பது பொருள். இதனை புணர்ச்சி விதிப்படி 'முன் றானை என்று சொல்லாமல், சாதாரணமாகப் பிரித்து 'முன்தானை' என்று சொல்லலாம். இதனைத்தான் பேச்சு வழக்கில் 'முந்தாணி 'முந்தாணை' என்று சொல்கிறார்கள். இது எழுத்து வழக்கிலும் எட்டிப் பார்க்கிறது. இப்படிப் பேச்சு வழக்குச் சொற்களையே எழுத்து வாக்கியத்திலும், இலக்கிய நடையிலும் நுழைத்து விட்டால் பின்னர் பேச்சுச் சொற்க ளுக்கும், எழுத்துச் சொற்களுக்கும் வேறுபாடு இல்லாமல் போய்விடும். அப்படி அறிஞர் பெரு மக்களுள் சிலரும் முன்தானையை வரிந்து (வலிந்து) கட்டிக் கொண்டு முனைகிறார்கள். சிலர் 'முந்தானை' என்று எழுதுகிறார்கள் இது சரியன்று. மும்+தானை என்று பிரித்தால்தான், 'முந்தானை'யாகும். இது தவறான பொருளை யல்லவா உணர்த்தும்? எனவே 'முன்தானை' என்றே சொல்லுவோம், எழுதுவோம்.

**மெண்மேலும் - மேன்மேலும்** : 'மேன்மேலும்' இச்சொற்றொடரையே 'மேண்மேலும்' என்று சிலர் பேசுகிறார்கள்; எழுதுகிறார்கள். மேல்+ மேல் என்னும் சொற்கள் 'மேன்மேல்' என்று தானே வர வேண்டும்? நிலை மொழி இறுதி எழுத்து 'ல்' வந்து வருமொழி முதல் எழுத்து 'ம' கரமோ, அதன் இன எழுத்துகளோ (ம,மா, மி,மீ,மே,மே,மை,மோ,மோ,மௌ) வந்தால் அந்த நிலை மொழியின் இறுதி எழுத்தான 'ல்' 'ன்' ஆக மாறும் என்பது இலக்கணம்.

(எ-டு)மேல்+மாடி = மேன்மாடி

மேல்+மருவும் = மேன்மருவும்

மேல்+மினுக்கு = மேன்மினுக்கு இப்படிப் பிறவும்

ஆதலால் முன் சொல்லான 'மேல்' என்பதன் முதல் எழுத்தான நெடிலைக் (மே) குறிலாக் காமல் (மெ) நெடிலாகவே (மே) எழுதி அருமைத் தமிழின் பெருமையை **மேன்மேலும்** வளர்க்க முயல்வார்களாக.

**வலியுறுத்தல் - வற்புறுத்தல்** : இவ்விரண்டு சொற்களுக்கும் பொருளில் வேறுபாடு உள்ளது. **'வலியுறுத்தல்'** என்றால் ஒரு செயலைக் கண்டிப் பாக (புறக்கணிக்காமல்) செய்து முடிக்குமாறு வேண்டுதல்.

**'வற்புறுத்தல்'** என்பது ஆங்கிலத்தில் force என்னும் பொருளை உணர்த்துவது. 'பலாத் காரப்படுத்துதல்' என்று சொல்வதும் பொருந் தும்.

சுருக்கமாகச் சொல்வதானால் ஒரு செயலை அவசியம் செய்து முடிக்குமாறு அன்பாக வேண்டிக் கொள்ளுதல் 'வலியுறுத்தல்' என்பது என்றும், மேல் நிலையில் உள்ளவர்கள், (அதி காரத்தில் உள்ளவர்கள்) தமக்குக் கீழ்நிலையில் உள்ளவர்களை ஒன்றைச் செய்யுமாறு கண்டிப் புடன் கூறுதல் 'வற்புறுத்தல்' என்பது என்றும் கொள்ளலாம்.

ஒரு செயலை உறுதியாகச் செய்யுமாறு ஒரு வரைக் கேட்டுக் கொள்வதற்கும் (வலியுறுத்தல்) கண்டிப்பாக செய்து முடிக்குமாறு ஆணை இடுவதற்கும் (வற்புறுத்தல்) இப்போது வேறுபாடு விளங்குகிறதல்லவா?

இதுகாறும், தமிழ் வழக்கில் தவறாகப் பயன்படுத்தப்பட்டுவரும் சொற்கள் சில வற்றையும் அவற்றின் திருத்தங்களையும் உண்மைப்பொருள்களையும் மட்டுமே அறிந் தோம். இப்படி எண்ணற்ற சொற்கள் தவறாக வழங்கப்படுகின்றன. உயர்தனிச் செம்மொழி யாகிய அன்னைத் தமிழின் கன்னித்தன்மையை இனிது காக்க முயலும் அன்பர்கள், நன்கு சிந்தித்துப் பொருளுணர்ந்து பேசுவார்களாக! எழுதுவார்களாக!

ஃ

# "குணம் நாடிக் குற்றமும் நாடி"

பேராசிரியர் பர்ன்ஹாம் "நல்லவர் அல்லவரைப் பற்றியே சிந்தித்து வாழ்நாளில் முன்னேற்றத்தைக் காண மறுக்கும்" நிர்வாகிகளைப் பற்றிக் கூறிய அறிவுரைகள் பற்றிப் பலரும் எனக்குக் கடிதம் எழுதியுள்ளார்கள்.

ஆம், நமது பொன்னான நேரம் நல்லவர் மீது படிவதில்லை அல்லவர் மீதுதான் நாம் நமது காலத்தைச் செலவிடுகிறோம். ஆயிரம் பேர் வேலை செய்யும் இடத்தில் 998 பேர் நல்லவர். ஆயினும் அல்லவராகிய இருவர் "பெருங்குடி மகன்களாக" இருக்கக்கூடும். இவ்விருவர் அந்த நிர்வாகத்தையே தம்பிக்கச் செய்து விடலாம். கல்லூரி விடுதிகளில் விடுதிக்கு ஓர் "அல்லவன்", இருந்தால் போதும் அத்துணை நல்லவரும் இவருக்குப் பயந்து கொண்டு பாரதி வாக்கினிலே 'அஞ்சி அஞ்சிச் சாவார்கள்'. எனவே, இக் கயவர் இனத்தை நாம் ஒதுக்க வேண்டும். இவர்களை ஒதுக்க நாம் முதலில் இவர் யார் என்று கண்டுகொள்ள வேண்டும். திருவள்ளுவர் ஏற்கனவே நமக்குக் கூறி இருக்கிறார், "மக்களே போல்வர் கயவர்" என்று. அதாவது நல்லவர் அல்லவரை, அயோக்கிய சிகாமணிகளை இனம் கண்டு கொள்வது அவ்வளவு சுலபம் அல்ல. ஏனெனில் அவர்களுக்கும் இவர்களுக்கும் உருவத்தில் வேறுபாடே இல்லை. இருவருக்கும் இரு கண்கள், இரு கால்கள், இரு கரங்கள்தான். இருவரும் பட்டுச்சட்டை வேட்டி, இருவரும் கோட்தான். இருவரும் மாருதியில் வரலாம். எப்படி அப்பா? இவர்களை அடையாளம் பிரிப்பது? எப்படி இனம் காண்பது? இப் போட்டியில் தோற்றவர் வாழ்க்கையில் தோற்கிறார்கள். வென்றவர் வெல்கிறார்கள். இதுதான் சூட்சுமம். ஐந்து கலியாணம் செய்த ஒரு படு அயோக்கியனுக்கு, விஷயம் புரியாதவர் தன் மகளை மணம் செய்ய முன்வருகிறார். ஆறாவது தர மாப்பிள்ளை, முதன் மாப்பிள்ளையாக அறிவிக்கப்படுவது ஆறாவது தாரத்தை முதன் மனைவியாக அம்மி மிதித்து அருந்ததி பார்த்து ஏற்றுக் கொள்ளுகிறார். இது எப்படி நடக்கிறது? பெண்ணைப் பெற்றோர் இவர் யார் என்று இனங்கொள்ளாததே காரணம், "மக்களே போல்வர் கயவர்" என்னும் திருக்குறள் மந்திரம் எவ்வளவு அரிதான சக்தி படைத்தது. பாருங்கள். நிற்க.

நாம் மறுபடியும் நம் 'மானேஜ்மெண்ட்' துறைக்கு வருவோம். கயவனை எப்படி அடையாளம் காணுவது.

"நன்றாற்ற லுள்ளுந் தவறுண்டவரவர்
பண்பறிந்தாற்றாக்கடை"
என்கிறார் வள்ளுவர் (9-469)

அவரவர் குணங்களை அறிந்து செயல்படாவிட்டால், நன்மை செய்தாலும் தவறே உண்டாகும்.

நன்றாகக் கவனியுங்கள். நன்மை செய்த போதிலும் பிறர் குணங்களை அறியாது செய்தாலும் தீமைதான் ஏற்படும். புலிக்கு பிஸ்கெட் கொடுப்பதற்காகப் புலிக் கூண்டிற்குள் சிறுவன் நுழைந்த கதைதான். புலிக்கு பிஸ்கெட் பிடிக்கவில்லை. ஆனால் சிறுவனைப் பிடித்தது. நல்ல எண்ணமுடைய சிறுவனே "பிஸ்கெட்" ஆகிவிட்டான்.

எனவே, செய்யும் காரியங்களை ஆராய்ந்த பின்னரே செய்ய வேண்டும். கருமங்களை எண்ணிய பிறகே செய்ய வேண்டும். வள்ளுவர் மூன்று உத்திகளைக் கூறுகிறார் காரியங்களைச் செய்ய :



ஒன்று வலியறிதல் – அதாவ மானேஜ்மெண்ட் பாணியி சொல்ல வேண்டுமானால் – Prod Competitors பற்றி அதாவது ந முடன் போட்டியிடுபவர்க திறனை அறிய வேண்டும். வள் வர் கூறியதெல்லாம் அரசருக் இவை தொழிலரசர்கட்கு பொருந்தும்.

இரண்டாவது காலமறிதல் "எ தற்கரிய தியைந்தக் கால் அ நிலையிலே செய்தற்கரிய செயல் காலம் கூடி விட்டதா, உடனே செயல்படு என்கிறார்.

மூன்றாவது இடனறிதல் தக் சூழ்நிலையின்றி காரியத்தை செய்தால் என்ன ஆகும்? நில தில் ஓடும் தேர் கடலில் ஓடாது கடலில் ஓடும் கப்பல் நிலத்தி ஓடாது என்கிறார் வள்ளுவர்.

இந்த மூன்று உத்திகளையு பயன்படுத்தி தெரிந்து தெளிந் ஒரு காரியத்தைச் செய்தல் வேண் டும்

"குணம் நாடிகுற் றமும் நாடி அவற்றுள்
மிகை நாடி மிக்க கொளல்"

ஒருவனின் நற்செயல்களையும் தீச்செயல்களையும் ஆராய்ந்த அதில் எது மிகுதியோ அதன் மூலம் அவன் எப்படிப்பட்டவ என்றறிந்து கொள்க என்கிறா பொய்யாமொழியார்.

நல்லவர், கெட்டவரை எ படிக் கண்டறிவது என்று இ போது புரிகிறதா? ஒருவனுடை செயலே அவன் யார் என குறிக்கும். இதைத் தெரிந் செயல்படுவதே அறிவாகும்.

# நாவல்.. பலப் பல!










மர்மக் கதை







ஹாஸ்ய எழுத்தாளர்





# உங்கள் ராசி பலன்

**(ஸ்ரீமுக வருஷம், மாசி மாதம் 1 ஆம் தேதி முதல் 30 ஆம் தேதி வரை)**

## 13.2.1994 முதல் 14.3.1994 வரை

### கிரக மாறுதல்

27.2.1994 முதல் கும்ப - செவ்வாய், 28.2.1994 முதல் மகர - புதன் (வ), 28.2.1994 முதல் குரு - வக்கிர ஆரம்பம், 3.3.1994 முதல் மீன - சுக்கிரன், 5.3.1994 முதல் புதன் - வக்கிர நிவர்த்தி, 10.3.1994 முதல் கும்ப - புதன்.

### கிரக பாதசாரம்

சூரியன் - அவிட்டம் 3, சந்திரன் - பூரட்டாதி 3, செவ்வாய் - திருவோணம் 3, புதன் - சதயம் 3 (வக்ரீ), குரு - விசாகம் 1, சுக்கிரன் - சதயம் 1, சனி - சதயம் 1, ராகு - அனுஷம் 1, கேது - கிருத்திகை 3.

| | | | |
|---|---|---|---|
| | | கேது | |
| சூரி, புத (வ) சுக், சனி | கிரகநிலை | | |
| செவ் | | | |
| | ராகு | குரு | |

**மேஷம்** : (அசுவினி, பரணி, கிருத்திகை 1 ஆம் பாதம் முடிய)

ராசிநாதன் 10 இல் அமர்ந்து உங்கள் ராசியை நோக்குவதாலும் குருபலம் கூடியிருப்பதாலும் லாபஸ்தானத்தில் கிரகங்கள் கூடியிருப்பதாலும் உங்கள் அபிலாஷைகள் எளிதில் நிறைவேறும். தடைகள் என்பவை விலகும். எதிர்ப்புகளை முறியடித்து வாழ்வில் வெற்றிநடை போடுவீர்கள். புத்திசாலித்தனம் பிரகாசிக்கும். பொருள் நடமாட்டம் கூடும். ஒன்றுக்கு மேற்பட்ட இனங்களில் ஈடுபட்டு ஆதாயம் பெறச் சந்தர்ப்பம் சாதகமாக அமையும். மனத்தில் மகிழ்ச்சி நிறைந்திருக்கும். அரசு விவகாரங்கள் ஆக்கம் தரும். பொறியியல், சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் செழிப்புப் பெறுவார்கள். நூதன பொருட் சேர்க்கை நிகழும். நிறுவன, நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். கலைத் துறை ஊக்கம் தரும். தொழிலாளர்களுக்கும், விவசாயிகளுக்கும் செழிப்பான பாதை தெரியவரும்.

வேலையில்லாதவர்கள் வேலை வாய்ப்பு கிடைக்கப் பெறுவார்கள். ஏற்கெனவே வேலையில் இருப்பவர்களாயின் பதவி உயர்வு, இடமாற்றம், ஊதிய உயர்வு ஆகியவற்றைப் பெறச் சந்தர்ப்பம் கூடிவரும். தெய்வப்பணிகளிலும், தருமப்பணிகளிலும் ஈடுபாடு கூடும். மக்களால் நலம் உண்டாகும். பயணத்தினால் ஓர் எண்ணம் நிறைவேறும் என்றாலும் சிறு இடையூறும் உண்டாகும். வெளிநாட்டுத் தொடர்பால் அனுகூலத்திற்கு இடமுண்டு. வியாபாரிகள் வெளிச்சம் காண்பார்கள். போட்டிப் பந்தயங்களிலும், வழக்கு, வியாஜ்ஜியங்களிலும் வெற்றி காண வாய்ப்புண்டாகும். மற்றையோர் புகழத்தக்க வகையில் ஓரிரு சாதனைகளை ஆற்றுவீர்கள். நிலபுலங்கள் லாபம் தரும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல் - வாங்கல் இனங்கள் ஆதாயம் கொண்டுவரும். கடன் உபத்திரவம் குறையும். கணவன் மனைவியிடையே களிப்புறவு கூடும். பிப்ரவரி 13,14,15,17,21,23, 24,27,28 மார்ச் 2,6,9,11,14 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, தெற்குத் திசைகள் நலம் தரும். துலா, மகர, கும்ப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,3,6,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

**ரிஷபம்** : (கிருத்திகை 2 ஆம் பாதம் முதல், ரோகிணி, மிருகசீரிஷம் 2 ஆம் பாதம் முடிய)

10 ஆமிடத்தில் உள்ள கிரகங்கள் உங்கள் ஆற்றலை வெளிப்படுத்துவார்கள். எடுத்த காரியங்களில் திறம்பட ஈடுபட்டு வெற்றி காண்பீர்கள். நிர்வாகத் திறமை கூடும். எலக்ட்ரானிக், கம்ப்யூட்டர் இனங்கள் ஆக்கம் தரும். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். வியாபாரம் அளவோடு வளர்ச்சி பெறும். தொழிலாளர்களும், விவசாயிகளும் தங்கள் திறமைக்குரிய வளர்ச்சியைக் காண்பார்கள். குடும்பநலம், மக்கள்நலம் யாவும் சீராகவே இருந்துவரும். நண்பர்கள், உற்றார், உறவினர்களால் ஓரிரு நன்மைகளை எதிர்பார்க்கலாம். 27 ஆம் தேதி முதல் பொறியியல் துறைகளைச் சேர்ந்தவர்கள் மந்தநிலை விலகப் பெறுவார்கள். சங்கடங்கள் என்பவை ஓரளவு குறையும். நிலபுலங்களால் அனுகூலம் உண்டாகும். சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் வெற்றிநடை போடுவார்கள்.

உழைப்பும், அலைச்சலும் சற்று அதிகரிக்கவே செய்யும். சோர்வுக்கு இடம் தரலாகாது. கடுமையாகப் பாடுபட்டால்தான் பயன்பெற முடியும் என்பதை மறக்கவேண்டாம். திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளை எண்ணிக் கைப்பொருளை வீணாக்க

**வித்வான். வே. லட்சுமணன்**

வேண்டாம். நல்லவர்களின் நட்புறவை நாடிப் பெறுவது நல்லது. மார்ச் மாதம் ஆரம்பத்திலிருந்து ஓரிரு எண்ணங்கள் ஈடேற வழி பிறக்கும். திரவப்பொருட்கள் லாபம் தரும். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்களுக்கும், மாதர்களுக்கும், சமுதாயநலப் பணியாளர்களுக்கும் வரவேற்பு கூடும். மாதர்களால் ஆடவர்கள் அனுகூலம் பெறுவார்கள். புதிய ஆடை, அணிமணிகளின் சேர்க்கைக்கு இடம் உண்டு. எதிர்பாராத ஓரிரு அதிர்ஷ்ட வாய்ப்புகளும் உண்டாகும். குருப் பிரீதியாகவும், ராகு, கேதுக்களுக்குப் பிரீதியாகவும் முறையே தட்சிணாமூர்த்தியையும், துர்க்கையையும், விநாயகரையும் வழிபடுவது நல்லது. பிப்ரவரி 13,14,15,17,21,23,24,27,28 மார்ச் 2,3,4,9,11,14 தேதிகள் ஓரளவு சிறப்பானவை. கீழ்த்திசை நலம் தரும். கும்ப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,5, எண்கள் அதிர்ஷ்டமானவை.

**மிதுனம்** : (மிருகசீரிஷம் 3 ஆம் பாதம் முதல், திருவாதிரை, புனர்பூசம் 3 ஆம் பாதம் முடிய)

குரு, சுக்கிர பலம் காரணமாக உங்கள் எண்ணங்கள் ஒன்றிரண்டு இப்போது நிறைவேறும். மனத்தில் மகிழ்ச்சி நிறைந்திருக்கும். பணவரவு கூடும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல் - வாங்கல் இனங்களில் ஈடுபட்டிருப்பவர்கள் ஆதாயம் கிடைக்கப் பெறுவார்கள். சினிமா, நாடகம், நாட்டியம், சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு வெற்றி வாய்ப்புகள் கூடும். தெய்விகப்பணிகளில் நாட்டம் கூடப்பெறுவீர்கள். தரும காரியங்களில் பங்கு கொள்ளச் சந்தர்ப்பம் கனிந்து வரும். எழுத்தாளர்களது நிலை உயரும். அலுவலகங்களில் பணிபுரிபவர்கள் பதவி உயர்வு, இடமாற்றம், ஊதிய உயர்வு ஆகியவை பெறுவதற்கான சந்தர்ப்பத்தைக் காண்பார்கள். அரசியல்வாதிகளது எண்ணம் நிறைவேறும். சமுதாயநலப் பணியாளர்கள் பாராட்டுகளுக்கு உரியவர்களாவார்கள்.

தொலைதூரப் பயணம் நலம் தரும். வெளிநாட்டுத் தொடர்பால் ஆக்கம் உண்டாகும். பிறமொழி, மதங்களைச் சேர்ந்தவர்களால் உதவி பெற வாய்ப்புண்டு. 27 ஆம் தேதி முதல் இயந்திரப் பணியாளர்களுக்குச் சங்கடங்கள் என்பவை குறைவடையும். வியாபாரிகள் அளவோடு வளர்ச்சி பெறுவார்கள். ஏற்றுமதி, இறக்குமதி இனங்களால் ஆதாயம் கிடைத்து வரும். மக்களால் ஓரிரு எண்ணங்களை ஈடேற்றிக் கொள்வீர்கள். மகப்பேறு பாக்கியம் பெறவும் வாய்ப்புண்டாகும். கணவன், மனைவியரிடையே களிப்புறவு கூடும். கூட்டுத் தொழிலில் அபிவிருத்திக்கு இடமுண்டு. மாதர்களது நலம் கூடும். புதிய பொருட்களின் சேர்க்கையைப் பெறுவீர்கள். தந்தைநலனில் அக்கறை செலுத்துவது நல்லது. பிப்ரவரி 13,14,15,17, 21,23,24,27,28 மார்ச் 2,3,4,6,11,14 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, தென்கிழக்குத் திசைகள் நலம் தரும். துலா, கும்ப, மீன ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,6 எண்கள் அதிர்ஷ்டமானவை.

**கடகம்** : (புனர்பூசம் 4 ஆம் பாதம் முதல், பூசம், ஆயில்யம் முடிய)

விசேடமான நன்மைகளை நீங்கள் பெறக்கூடிய வகையில் கிரகங்கள் உலவவில்லை என்பதால் எதிலும் எச்சரிக்கையுடன் ஈடுபடுவது நல்லது. நூதன முயற்சிகளை ஒத்திப்போடுவது அவசியமாகும். வீண் அலைச்சல் கூடாது. உடல்நலனில் அக்கறை செலுத்தவேண்டிவரும். மனத்தில் சிறுசிறு கவலைகள் சூழும். குடும்பத்தில் அமைதி காண அரும்பாடுபடவேண்டிவரும். பொருளாதார நிலையில் விசேடமான அபிவிருத்தியைக் காண இயலாது. கடுமையாகப் பாடுபட்டேப் பயன்பெற வேண்டிவரும். அதிர்ஷ்ட வாய்ப்புகளை எண்ணிக் கைப்பொருளை வீணாக்கவேண்டாம். நூதனமான துறைகளில் முதலீடு செய்ய இந்த காலம் சிறப்புடையதாகாது. பயணத்தை ஒத்திப்போடுவது நல்லது. அரசியல்வாதிகள், மருத்துவர்கள், இயந்திரப் பணியாளர்கள், நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவர்கள், உத்தியோகஸ்தர்கள், தொழிலாளர்கள் ஆகிய அனைவருக்குமே ஓரிரு சோதனைகள் ஏற்படும். பக்குவத்துடன் சமாளிப்பது நல்லது.

தந்தை நலனில் கவனம் தேவைப்படும். உடன்பிறந்தவர்களுக்கும் உங்களுக்குமிடையே கருத்து வேறுபாடுகள் ஏற்படும். போட்டிப் பந்தயங்களில் ஈடுபடவேண்டாம். எதிலும் பதட்டம் கூடாது. பொறுமையுடனும், பக்குவத்துடனும் எக்காரியத்திலும் ஈடுபடுவதன் மூலம் விபத்துக்கு ஆட்படாமல் தப்பலாம். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் தங்கள் திறமையைப் பயன்படுத்தி முன்னேற்றம் காண்பார்கள். மாதர்களது நலம் சீராக இருந்துவரும். வியாபாரிகள் அளவோடு வளர்ச்சி காண்பார்கள். உங்கள் ஜனன கால ஜாதகப்படி தற்சமயம் யோக பலம் உள்ள தசை, புக்தி, அந்தரங்கள் நடைபெறுமானால் சங்கடங்கள் என்பவை குறைய வழிபிறக்கும். ஜாதகப்படியும் அனுகூலமான நிலையில் தசை, புக்தி இல்லாதிருக்கும் பட்சத்தில் தெய்வ வழிபாட்டின் மூலம் பிரச்னைகளைக் குறைத்துக் கொள்ளவும், மன அமைதி பெறவும் முயலலாம். பிப்ரவரி 14,15,17,21,23,24,27,28 மார்ச் 2,3,4,6,9,14, தேதிகள் சிறப்பானவை. வடமேற்கு, தென்கிழக்குத் திசைகள் அனுகூலமானவை. மீன, ரிஷப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 6,7 எண்கள் அதிர்ஷ்டமானவை.

**சிம்மம்** : (மகம், பூரம், உத்திரம் 1 ஆம் பாதம் முடிய)

6 இல் உள்ள செவ்வாயும், 10 இல் உள்ள கேதுவும் உங்கள் பராக்கிரமத்தை வெளிப்படுத்துவார்கள். எதிர்ப்புகள் என்பவை ஓரிரு கோணங்களில் தென்படுமென்றாலும் அவற்றைச் சமாளிக்கக் கூடிய வல்லமையைப் பெறுவீர்கள். போட்டிப் பந்தயங்களில் அளவோடு வெற்றி கிட்டும். பொறியியல் துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னேற்றமான சூழ்நிலையைக் காண்பார்கள். ரியல் எஸ்டேட் இனங்கள் லாபம் தரும். வெந்நிறப் பொருட்கள் ஆதாயம் கொண்டுவரும். சட்டம், காவல்,

இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். உடன் பிறந்தவர்களால் ஓரளவு நலம் உண்டாகும். பக்தி மார்க்கத்திலும், ஞானமார்க்கத்திலும் ஈடுபாடு உள்ளவர்கள் மனத்தெளிவு பெறுவார்கள். நிறுவன, நிர்வாகத் துறையினருக்கு வெளிச்சமான பாதை புலப்படும்.

எலக்ட்ரானிக், கம்ப்யூட்டர் இனங்கள் ஆக்கம் தரும். வாழ்க்கைத் துணைநலம் ஒருநாள் போல் மறு நாள் இராது; கவனம் தேவை. கூட்டாகத் தொழில் செய்பவர்கள் பங்குதாரர்களிடம் பக்குவமாகப் பழகி வருவது நல்லது. 27 ஆம் தேதி முதல் செவ்வாய் 7 ஆமிடம் மாறுவதால் ஓரிரு இடையூறுகள் ஏற்படும். உடல் நலம் கவனிக்கப்படவேண்டிவரும். அலைச்சல் கூடும். பயணத்தைக் குறைத்துக் கொள்வது நல்லது; பாதுகாப்பும் தேவைப்படும். மார்ச் மாதம் 3 ஆம் தேதி முதல் கலைத்துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு வெளிச்சமான சூழ்நிலை உதயமாகும். மாதர்களுக்கும், சமுதாயநலப் பணியாளர்களுக்கும் வரவேற்பு கூடும். செய்துவரும் தொழிலில் சீரான வளர்ச்சியைக் காணச் சந்தர்ப்பம் கூடிவரும். பொருளாதாரநிலை சாதாரணமாகவே இருந்து வரும். தீயவர்களின் தொடர்பு கூடாது. பிப்ரவரி 17,21,23,24,27,28 மார்ச் 2,3,4,6,9,11 தேதிகள் சிறப்பானவை. தெற்கும், வடமேற்கும் அனுகூலமான திசைகளாகும். மகர, ரிஷப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 7,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

---

## கன்னி :(உத்திரம் 2 ஆம் பாதம் முதல், ஹஸ்தம், சித்திரை 2 ஆம் பாதம் முடிய)

---

குரு, சனி ஆகியோரது அனுகூலமான சஞ்சாரம் காரணமாக உங்கள் எண்ணங்கள் இனிது நிறைவேறும். முகவசீகரம் கூடும். வாக்கு வன்மையாலும் செயல் திறமையாலும் வாழ்வில் வெற்றி காண்பீர்கள். நண்பர்கள், உற்றார், உறவினர்களது தொடர்பால் நலம் பெறச் சந்தர்ப்பம் கூடிவரும். வியாபாரிகள், தொழிலாளர்கள் ஆகியோர் தங்கள் நிலைமையில் அபிவிருத்தி காண்பார்கள். இரும்பு சம்பந்தப்பட்ட இனங்களால் லாபம் கிடைக்கப் பெறுவீர்கள். குடும்பத்தில் திருமணம் போன்ற சுபகாரியங்கள் நிகழும். மக்களாலும், வாழ்க்கைத் துணைவராலும் அனுகூலம் பெற வாய்ப்புண்டாகும். ஆசிரியர்கள், பேராசிரியர்கள், மதபோதகர்கள், மேடைப்பிரசங்கிகள் ஆகியோருக்கெல்லாம் செழிப்பான சூழ்நிலை நிலவிவரும்.

அரசியல்வாதிகளும், அரசுப்பணியாளர்களும் தங்கள் இலட்சியம் ஈடேறப் பெறுவார்கள். நிறுவன, நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். மார்ச் மாத ஆரம்பத்திலிருந்து பொறியியல், சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் வெளிச்சமான பாதையைக் காண்பார்கள். சுக்கிர பலம் குறைந்திருப்பதால் கலைத்துறைகளைச் சேர்ந்தவர்களும், மாதர்களும் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. கணவன், மனைவி உறவுநிலை சாதாரணமாக இருந்துவரும். நிலம், மனை, வீடு, வாகனம் போன்ற ஸ்திரச்சொத்துகளின் சேர்க்கையோ, அவற்றால் ஆதாயமோ பெற வாய்ப்புண்டாகும். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் நற்பெயரும், புகழும், பொருளும் பெறுவார்கள். பொருள்வரவு திருப்திகரமாக இருந்துவரும். பிப்ரவரி 13,14,15,20,21,23, 24,27,28 மார்ச் 2,4,6,9,10,14 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, மேற்குத் திசைகள் அனுகூலமானவை. 3,8 எண்கள் அதிர்ஷ்டமானவை. துலா, கும்ப ராசிக்காரர்கள் உதவுவார்கள்.

---

## துலாம் :(சித்திரை 3 ஆம் பாதம் முதல், சுவாதி, விசாகம் 3 ஆம் பாதம் முடிய)

---

ராசிநாதன் சுக்கிரன் அனுகூலமான நிலையில் சஞ்சரிப்பதால் மனத்தில் உற்சாகம் கூடும். கேளிக்கை, உல்லாசங்களில் ஈடுபாடு உண்டாகும். சினிமா, நாடகம், நாட்டியம், சங்கீதம் போன்ற கலைத்துறைகளில் ஈடுபாடு உள்ளவர்கள் வெற்றி நடை போடுவார்கள். மாதர்களது எண்ணம் ஈடேறும். சமுதாயநலப் பணியாளர்கள் வரவேற்பு கூடப் பெறுவார்கள். நிலபுலங்களால் ஆதாயம் கிடைத்து வரும். உற்றார், உறவினர்களால் அனுகூலம் உண்டாகும். புதிய ஆடை, அணிமணிகள், அலங்காரப் பொருட்கள் ஆகியவற்றின் சேர்க்கையைப் பெறுவீர்கள். பொறியியல் துறைகளைச் சேர்ந்தவர்கள், சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளில் ஈடுபாடு உள்ளவர்கள், இயந்திரப் பணியாளர்கள் ஆகியோரெல்லாம் பொறுப்புடன் காரியமாற்றினால் ஓரளவு வளர்ச்சி காணமுடியும்.

வியாபாரிகள் அகலக்கால் வைக்க வேண்டாம். மக்கள்நலம் சீராக இருந்துவரும். கணவன், மனைவி உறவுநிலை திருப்தி தரும். கூட்டுத் தொழிலில் அபிவிருத்திக்கு இடமுண்டு. தெய்வப் பணிகளிலும், தருமப்பணிகளிலும் ஈடுபாடு உள்ளவர்கள் மனத்தெளிவு பெறுவார்கள். 2 இல் ராகுவும், 8 இல் கேதுவும் உலவுவதால் ஓரிரு பிரச்னைகள் அவ்வப்போது உண்டாகும். ஜன்ம குரு என்பதால் அலைச்சல் அதிகரிக்கும். உடல்நலம் ஒருநாள்போல் மறுநாள் இராது. பொருளாதார நிலையில் அபிவிருத்தி காண அரும்பாடுபட வேண்டிவரும். பிற மொழி, மதக்காரர்களிடம் அதிகம் நெருக்கம் வேண்டாம். பயணத்தின்போது விழிப்புடன் இருப்பது நல்லது. பிப்ரவரி 13,14,15, 21,23,24,27,28 மார்ச் 2,4,6,9,10,14 தேதிகள் சிறப்பானவை. தென்கிழக்குத்திசை அனுகூலமானது. மகர, கும்ப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 8 ஆம் எண் அதிர்ஷ்டமானது.

---

## விருச்சிகம் :(விசாகம் 4 ஆம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய)

---

ராசிநாதன் செவ்வாய் 3 இல் உலவுவதால் சங்கடங்களைச் சமாளிக்கும் ஆற்றலைப் பெறுவீர்கள். துணிவும் தன்னம்பிக்கையும் கூடும். எதிரிகள் விலகிப் போவார்கள். இயந்திரப்பணிகள் ஆக்கம் தரும். சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் வெற்றிநடை போடுவார்கள். நண்பர்கள், உற்றார், உறவினர்களால் ஓரிரு நன்மைகள் உண்டாகும். புதிய பொருட்களின் சேர்க்கையையும் பெறுவீர்கள். ரியல் எஸ்டேட்

இனங்கள் லாபம் தரும். வியாபாரிகள் தங்கள் திறமைக்குரிய வளர்ச்சியைப் பெறுவார்கள். மாணவர்களது நிலை உயரும். கணிதம், விஞ்ஞானம், எழுத்து போன்ற துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு மாமூலான வளர்ச்சி பாதிக்கப்படாது. செய்துவரும் தொழிலில் சீரான வளர்ச்சி உண்டாகும்.

தொழிலாளர்களும், விவசாயிகளும் எவ்வளவுக் கெவ்வளவு பாடுபடுவார்களோ அவ்வளவுக்கவ் வளவு பயன் பெறுவார்கள். சோர்வுக்கு இடம் தரலாகாது. நூதன நட்பு வேண்டாம். பொருளாதார நிலையில் சிக்கன நடவடிக்கையை மேற்கொள்வது நல்லது. ஸ்பெகுலேஷன், கொடுக்கல் - வாங்கல் இனங்களால் அதிகம் அனுகூலத்திற்கு இடமிராது. கூட்டுத் தொழிலில் கவனம் தேவைப்படும். ஆசிரியர்கள், பேராசிரியர்கள், பேச்சாளர்கள், உத்தியோகஸ்தர்கள் ஆகியோருக்கெல்லாம் ஓரிரு பிரச்னைகள் உருவாகும். பக்குவத்துடன் சமாளிப்பது அவசியம். வீண் அலைச்சலைத் தவிர்ப்பது நல்லது. எக்காரியத்திலும் பதற்றம் கூடாது. பயணத்தின்போது பாதுகாப்புத் தேவை. நல்லவர்களின் தொடர்பை வலுப்படுத்திக் கொண்டு, அவர்களின் ஆலோசனைகளை மதித்து ஏற்றுக் கொள்வதன் மூலம் நலம் கூட வழி பிறக்கும். பிப்ரவரி 13,14,15,20,23,24,27,28 மார்ச் 2,4,6,9,10,14 தேதிகள் சிறப்பானவை. வடக்கும், தெற்கும் அனுகூலமான திசைகளாகும். மகர, கும்ப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 5,6,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

---

**தனுசு** : (மூலம், பூராடம், உத்திராடம் 1 ஆம் பாதம் முடிய)

---

ராசிநாதன் லாபத்தில் அமர்ந்து 3 ஆமிடத்தையும், 5,7 ஆம் இடங்களையும் நோக்குவதால் உங்கள் அபிலாஷைகள் எளிதில் நிறைவேறும். எடுத்த காரியங்களில் திறம்பட ஈடுபட்டு வெற்றி வாய்ப்பைப் பெறுவீர்கள். முக்கியஸ்தர்களது தொடர்பால் நலம் உண்டாகும். போட்டிப் பந்தயங்களில் வெற்றிபெறச் சந்தர்ப்பம் சாதகமாக அமையும். எழுத்தாளர்களும், பத்திரிகையாளர்களும் முன்னணிக்கு உயருவார்கள். தொழிலாளர்களது குறிக்கோள் நிறைவேறும். உத்தியோகஸ்தர்கள் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். அரசு விவகாரங்களில் ஈடுபட்டுப் பயன்பெற முடியும். சமுதாயநலப் பணியாளர்களும், அரசியல்வாதிகளும் தங்கள் மதிப்பு உயரப் பெறுவார்கள். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு உற்சாகமான சூழ்நிலை நிலவிவரும்.

மக்களாலும், வாழ்க்கைத்துணைவராலும் அனுகூலம் பெறுவீர்கள். பொருளாதாரநிலை திருப்திகரமாக இருந்துவரும். எதிர்பாராத திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளும் உண்டாகும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல் வாங்கல் இனங்கள் ஆதாயம் தரும். நண்பர்கள், உற்றார், உறவினர்களால் நலம் பெறுவீர்கள். நிலம், மனை, வீடு, வாகனம் போன்ற ஸ்திரச் சொத்துகளால் அனுகூலம் உண்டாகும். பயணத்தால் ஒரு காரியம் நிறைவேறும். மற்றவர்களால் பாராட்டப்படும் வகையில் ஓரிரு சாதனைகளை ஆற்றச் சந்தர்ப்பம் கனிந்துவரும். குடும்பத்தில் குதூகலம் கூடும். 27 ஆம் தேதி முதல் வெற்றி வாய்ப்புகள் அதிகரிக்கும். கேளிக்கை, உல்லாசங்களில் ஈடுபாடு கூடப்பெறவும், அதனால் மன மகிழ்ச்சி பெறவும் வாய்ப்புண்டாகும். மாதர்களது நலம் கூடும். புதிய ஆடை, அணிமணிகள், அலங்காரப் பொருட்கள் ஆகியவற்றின் சேர்க்கையைப் பெறுவீர்கள். பிப்ரவரி 13,14,15,20,21,27,28 மார்ச் 2,4,6,9,10,14 தேதிக்ள் சிறப்பானவை. வடகிழக்குத் திசை நலம் தரும். மகர, கும்ப, துலா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,3,6,7,8,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

---

**மகரம்** : (உத்திராடம் 2 ஆம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2 ஆம் பாதம் முடிய)

---

சுக்கிரனது சஞ்சாரம் திருப்திகரமாக இருப்பதால் பொருள் வரவு கூடும். மாதர்களால் ஆடவர்களுக்கு அனுகூலம் உண்டாகும். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னேற்றமான சூழ்நிலையைக் காண்பார்கள். மக்கள் நலம் கவனிப்பின் பேரில் சீராக இருந்துவரும். உற்றார், உறவினர்களால் ஓரிரு நன்மைகளைப் பெறுவீர்கள். வியாபாரம் வளர்ச்சி பெறும். எழுத்தாளர்களும், பத்திரிகையாளர்களும் அளவோடு முன்னேறுவார்கள். பிற மொழி, மதங்களைச் சார்ந்தவர்கள் உதவ முன்வருவார்கள். ஏற்றுமதி, இறக்குமதி இனங்கள் லாபம் தரும். தோற்றப் பொலிவு கூடும். தோல் பொருட்கள், போக்குவரத்துச் சாதனங்கள் ஆகியவற்றால் அனுகூலம் உண்டாகும். மனத்தில் ஓரிரு கவலைகள் சூழும்.

குடும்பநலம் ஒருநாள்போல் மறுநாளிராது. கோபத்தைக் குறைத்துக் கொண்டு மற்றையோரிடம் சுமுகமாகப் பழகினீர்களேயானால் பிறரது அதிருப்திக்கு ஆளாகாமல் தப்பலாம். உணவு விஷயங்களில் கட்டுப்பாடு தேவை. பயணத்தின்போதும், இயந்திரங்களின் பக்கம் நெருங்கும்போதும் பாதுகாப்புடன் இருப்பது நல்லது. உத்தியோகஸ்தர்கள் பொறுப்புடன் பணியாற்றினால் பிரச்னைகளுக்கு ஆளாகாமல் தப்பலாம். ஸ்பெகுலேஷன், கொடுக்கல் - வாங்கல் இனங்களில் ஈடுபடவேண்டாம். நூதனமான முயற்சிகளை ஒத்திப்போடுவது நல்லது. மார்ச் மாதம் 3 ஆம் தேதி முதல் ஓரிரு எண்ணங்கள் ஈடேற வழி பிறக்கும். நல்ல தகவல் வந்துசேரும். சிறு பயணம் ஒன்றை மேற்கொள்ளவும், அதன் மூலம் பயன்பெறவும் வாய்ப்புண்டாகும் என்றாலும் சிறு இடையூறும் ஏற்படும். உடன்பிறந்தவர்கள் ஓரளவு உதவுவார்கள். பிப்ரவரி 13,14,15,20,21,23, 24,28 மார்ச் 2,4,6,9,10,14 தேதிகள் சிறப்பானவை. தென்கிழக்குத்திசை நலம் தரும். கும்ப, விருச்சிக ராசிக்காராகள் உதவுவார்கள். 4,5,6 எண்கள் நலம் தரும்.

---

**கும்பம்** : (அவிட்டம் 3ஆம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3 ஆம் பாதம் முடிய)

---

குருபலம் கூடியிருப்பதால் உங்கள் மதிப்பும், அந்தஸ்தும் உயரும். எண்ணங்கள் ஈடேற வழி பிறக்கும். மக்களால் மனமகிழ்ச்சிகூடப் பெறுவீர்கள்.

# மொத்தத்தில்...

மௌனமே – ஒரு
மணிக்கவிதை.
அது, எவர்
கவனமும் ஈர்க்கும்
என்பதால்.

அமைதியே – ஓர்
அருட்கவிதை.
அது, மனச்
சுமையைத் தீர்க்கும்
என்பதால்.

ஒதுக்கமே – ஓர்
உயர் கவிதை.
அது, உள் உயிர்
புதுக்க வேசெயும்
என்பதால்.

மொத்தமும் நான் ஓர்
முழுக் கவிதை.
ஆம்; அது, நான்
நித்தமும் நிலைப்பேன்
என்பதால்.

சந்தக் கவிமாமணி **தமிழழகன்**

தெய்வப்பணிகள் ஈடேறும். புனிதப்பயணம் மேற்கொள்ளவும், சாதுக்கள், மகான்கள் ஆகியோரது தரிசனம் கிடைக்கப் பெறவும் சந்தர்ப்பம் கனிந்து வரும். குடும்பத்தில் குதூகலம் நிறைந்திருக்கும். பொருளாதாரநிலையில் வளர்ச்சி காண்பீர்கள். ஸ்பெகுலேஷன், கொடுக்கல் – வாங்கல் இனங்கள் ஆதாயம் கொண்டுவரும். நல்லவர்களும், வல்லவர்களும் உங்களுக்குப் பக்கபலமாக விளங்குவார்கள். தெய்வானுகூலம் உண்டாகும். மற்றையோருக்குப் பயன்படத்தக்க வகையில் ஓரிரு நற்காரியங்களை ஆற்றவும், அதன்மூலம் புகழும், பெயரும் பெறவும் சந்தர்ப்பம் உருவாகும்.

அயராது பாடுபடவேண்டிவரும் என்றாலும் அதற்கான பயன் கிடைக்காமல் போகாது. சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். மாதர்களது அபிலாஷைகளில் ஒன்றிரண்டு இப்போது ஈடேறும். வியாபாரிகள் முன்னேற்றத்திற்கான திட்டங்களைத் தீட்டி வைத்துக் கொள்ளலாம். அலுவலகங்களில் பணிபுரிபவர்களுக்கு உற்சாகமான சூழ்நிலை உருவாகும். வங்கிப் பணியாளர்கள் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். வெளிநாட்டுத் தொடர்பு ஆக்கம் தரும். பயணத்தால் பயன் உண்டு என்றாலும் பாதுகாப்பும் தேவை. ஆசிரியர்கள், பேராசிரியர்கள், அரசியல்வாதிகள், ஆன்மிகவாதிகள் ஆகியோர் தங்கள் செல்வாக்கு உயரப் பெறுவார்கள். நிலபுலங்கள் லாபம் தரும். பிப்ரவரி 13,14,15,20,21,23,24 மார்ச் 2,4,6,9,10,14 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, தென்கிழக்குத் திசைகள் அனுகூலமானவை. மீன, துலா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,6 எண்கள் அதிர்ஷ்டமானவை.

**மீனம்** : (பூரட்டாதி 4 ஆம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

பிப்ரவரி மாதம் 26 ஆம் தேதி வரையிலும் செவ்வாய் பலம் இருப்பதால் பிரச்னைகளைச் சமாளிக்கக்கூடிய மனோபலத்தைப் பெறுவீர்கள். இயந்திரப் பணியாளர்களுக்கும், இஞ்சினீயர்களுக்கும் செழிப்பான சூழ்நிலை நிலவிவரும். குடும்பநலம் திருப்தி தரும். உடன்பிறந்தவர்களால் நலம் உண்டாகும். செந்நிறப்பொருட்கள் ஆதாயம் கொண்டுவரும். எதிரிகள் அகலுவார்கள். பொருளாதார நிலையில் சீரான வளர்ச்சி இருந்துவரும். 27 ஆம் தேதி முதல் செவ்வாய் பலமும் குறைவதால் நீங்கள் எதிலும் எச்சரிக்கையுடன் ஈடுபடுவது நல்லது. பணவருவாய் குறைந்து, செலவுகள் கூடும். கைப்பொருள் காணாமல் போகவும் கூடும் என்பதால் பத்திரமாகப் பாதுகாத்துக் கொள்வது நல்லது. ராசிநாதன் 8லும், விரயத்தில் ஐந்து கிரகங்களும் உலவும் நேரமிது என்பதால் உடல்நலனில் கவனிப்பு தேவை.

புதிய முயற்சிகளில் பிரவேசிக்கலாகாது. சண்டை, சச்சரவுகளில் ஈடுபடவேண்டாம். வழக்கு, வியாஜ்ஜியங்களில் அனுகூலமான போக்கைக் காண இயலாது. யாரிடத்திலும் வெளிப்படையாகப் பழக வேண்டாம். பொறாமைக்காரர்களால் ஓரிரு தொல்லைகளுக்கு ஆட்படநேரலாம். பயணம் தவிர்ப்பது நல்லது. எக்காரியத்திலும் பதட்டத்திற்கு இடம் தராமல் நிதானத்துடனும் பக்குவத்துடனும், பெரியோர்களின் ஆலோசனைகளின்படியும் ஈடுபட்டால் சங்கடத்திற்கு ஆளாகாமல் தப்பலாம். தெய்வ வழிபாட்டிலும், கிரக வழிபாட்டிலும் முழுமையான கவனத்தைச் செலுத்துவது நல்லது. கலைஞர்கள் ஓரளவு முன்னேறுவார்கள். உங்கள் ஜனனகால ஜாதகப்படி தற்சமயம் யோக பலம் உள்ள தசை, புக்தி, அந்தரங்கள் நடைபெறுமானால் மோசமான நிலை என்று ஏதும் உண்டாகாமல் நீங்கள் காக்கப்படுவீர்கள். பிப்ரவரி 13,14,15,20, 21,23,24,27,28 மார்ச் 4,6,9,10,14 தேதிகள் ஓரளவு சிறப்பானவை. தென்கிழக்கு, வடமேற்குத்திசைகள் அனுகூலமானவை. ரிஷப, மகர ராசிக்காரர்கள் உதவுவார்கள். 6,7 எண்கள் அதிர்ஷ்டமானவை. ஃ

# பி.வி.ஆர்.

நாராயணன் மற்றும் சித்தப்பா சகஸ்ரத்துடன் ஆசிரமத்துக்குத் திரும்பும்போது இரவு மணி எட்டு.

"போலாமா பாரதி?"

"போலாம்".

"ராஜி கார் எடுத்துண்டு போனதால குஞ்சப்பா ஆட்டோவிலேயும் பஸ்லேயும் வரண்டதாப் போச்சு. குஞ்சப்பா நீ ஒட்டறியா இல்லே நானே ஓட்டட்டுமா?" என்று நாராயணன் கேட்டான்.

"நீ பார்த்தன். நான் சாரதி. கோழிக்கோட்லேர்ந்து ஒத்தைக்கு ஒட்டிண்டு வந்திருக்காய். இங்க தோள்ள சொமந்து ஒரு மைல் நடந்திருக்காய். பேக் ஸீட்ல பாரதியோட ஒக்காரு, கோந்தே" என்றான் சகஸ்ரம்.

"நான் இந்த ஆசிரமத்தோட சம்பந்தப்பட்டிருக்கேன்னு ஒனக்கு எப்படித் தெரிஞ்சுது, குஞ்சப்பா?" என்று காரினுள் ஏறும்போது நாராயணன் கேட்டான்.

"நீ ரொம்ப மொள்ளமா ஓட்டறாய் குஞ்சப்பா. ரோடு ஃப்ரியாத்தானே இருக்கு. ஸ்பீடாப் போயேன்".

"அம்பதில போறேன். அது போரும். இப்ப என்ன அவசரம்?"

வண்டி ஓடிக் கொண்டிருந்தது. எல்லாரும் மௌனமாக இருந்தார்கள்.

திடீரென்று சகஸ்ரம் பேசினான்.

"ஒன் மாமனார் நேத்தைக்குக் கார்த்தால வந்து ராத்திரி போனார்".

"அப்படியா? என்ன பாரதி, நீ சொல்லவே இல்லை?"

"பெரிய நியூஸாப் படலே?"

"எந்துக்கு வந்தார், குஞ்சப்பா?"

"ஆருக்குத் தெரியும்? அண்ணாவுக்குத் தெரிஞ்சிருக்கும். பாரதிக்கும் தெரிஞ்சிருக்கலாம்".

"ஒனக்குத் தெரியுமா பாரதி?" என்று கேட்ட நாராயணன் தொடர்ந்து, "எந்துக்கு?" என்றான்.

"என்னைக் கூட்டிண்டு போக".

"எங்கே?"

"பொறந்தாத்துக்கு".

## ரூ.10,000 பரிசு பெற்ற நாவல் 25

"இந்த சோத்தியத்தை நீ எத்தற பிராவசியம் கேப்பாய், கோந்தே?"

"சொல்லேன்".

வண்டி புறப்பட்டது.

"நேக்கு நாலு கொல்லமாத் தெரியும்".

"ஆர் சொன்னா? அப்பாவா?"

"அண்ணா மூச்சு விட்டுட்டில்லை".

"பாரதிகிட்ட அப்பா சொல்லியிருக்கார். இவ பேச்சிலேர்ந்து தெரிஞ்சுது".

"மாதவ ராஜா கிளப்ல கேசவ நம்பூத்ரி என்னைக் கூப்பிட்டுச் சொன்னான். நீ இதில ஈடுபடறது அவனுக்குப் பிடிக்கலை. ஒங்கிட்ட நேர்ல சொல்றதுக்கும் பயம்".

"நல்ல காரியம்னு நேக்குத் தோணித்து செயறேன்".

"பாரதி என்ன சொல்றா?"

"நான் செயறது தெரிஞ்சும் வந்திருக்கான்னா என்ன அர்த்தம்?"

"பிடிச்சிருக்குன்னு".

"எந்துக்கு?"

"பி.எச்.டி., படிக்க வைக்க".

"அதுக்கு அவர் தயவு எந்துக்கு? நான் இருக்கேனே?"

"இங்கதான் ஆருக்கும் இஷ்டமில்லையாமே?"

"உன் அப்பா சொன்னாரா?"

"ஆமாம்".

"எப்பக் கூட்டிண்டு போக வர்றார்?"

"இனிமே வரமாட்டார்".

"ஏன்?"

# வானமெல்லாம் ஆசைக் காற்றாடி

"நேத்தே தன்கூடப் புறப்படணும்னார். மாட்டேன்னேன்".

"ஏன்?"

"உங்களைக் கேட்காம நான் எப்படி முடிவு எடுக்கறது? அதுவும் ரெண்டு வருஷம் பிரிஞ்சு இருக்கணும்னு வர்றப்ப?"

"இப்ப நான்தான் வந்தாச்சே!"

"நானும் இனிமே முடிவு எடுக்கலாம்" என்றாள் பாரதி.

வீட்டை அடைந்தபோது இரவு ஒன்பதேகால்.

"என்னடீ பொண்ணே எங்களைக் கதி கலங்க வைச்சுட்டியே?" என்றாள் பாட்டி.

"டில்லியில் நீ ராத்திரி நேரம் கழிச்சு ஆத்துக்கு மடங்கி வரப் பழகி இருப்பாய், பொண்ணே. இந்தப் பாலக்காடு ஒனக்குப் புதுசு அல்லவா? தங்கம்மா அஞ்சாறு பிராவஸ்யம் அந்தப் பொண்ணாத்துக்கு போன் பண்ணினா. மணி அடிச்சுண்டே இருந்ததாம்."

"இனிமே அப்படி நடக்காது பாட்டப்பா".

"பொறந்த வீட்ல ரொம்ப எடம் கொடுத்தா எப்படி இருப்பா? இப்படித்தான்!" என்றாள் தங்கம்மா.

"பாரதி சாயங்காலமே தேவகி கார்ல வந்தாச்சும்மா. நான்தான் அவளைக் கூட்டிண்டு போனேன்" என்றான் நாராயணன்.

"அப்ப ஆத்துக்கு எங்கேயிருந்தாவது போன்ல சொல்லியிருக்கணும்".

"விட்டுப் போச்சு அம்மா".

"உனக்கு விட்டுப் போச்சு. அவ சொல்லியிருக்கலாமே? கார்த்தால ஒம்பதரை மணிக்குப் போனவள்".

"போருமே அம்மா".

"ஒன்னோட அப்பா, ரூம்ல தன்னந்தனியா ஒக்கார்ந்துண்டிருக்கார் தெரியுமா?"

"அப்பா எர்ணாகுளத்திலேர்ந்து அதுக்குள்ளே வந்தாச்சா?" என்றாள் பாரதி.

அவள் சொல்லி முடிக்கவும் ஈசுவரன் அறையில் இருந்து வெளிவரவும் சரியாக இருந்தது.

"நானும் கோந்தையும் ஒரு நாள் ஆத்ல இல்லேன்னா நீ ஒன் மனசு போகிற போக்கில போயிடறதா, பொண்ணே?" என்றார் ஈசுவரன்.

"இதுக்கு நான் அப்புறமா பதில் சொல்லலாமா அத்திம்பேர்?" என்று பாரதி கேட்டாள்.

கைகால்களைக் கழுவி விட்டு பாரதி, புடைவை மாற்ற மாடிக்குச் சென்றாள்.

"இந்தா பாரதி" என்று ஒரு நீண்ட உறையை நாராயணன் நீட்டினான்.

"என்ன இது?"

"நீயே படிச்சுப் பாரேன்".

உறையின் வெளியே ஏதும் எழுதப்பட்டிருக்கவில்லை. உடைத்து, உள்ளேயிருக்கும் தாள்களை எடுத்தாள்.

மூன்று சர்வ கலாசாலைகளிலிருந்து பி.எச்.டிக்கான விண்ணப்பத்தாள்கள்.

சென்னை சர்வ கலாசாலை.

டில்லி சர்வ கலாசாலை.

கல்கத்தா சர்வ கலாசாலை.

நாராயணனை ஏறிட்டுப் பார்த்தாள்.

"கோழிக்கோட்டுக்குப் போயிருந்தப்ப நேக்குத் தெரிஞ்ச புரொபசர் ஒருத்தரை மீட் பண்ணினேன். அவர் இங்கிலீஷ்ல ப்ரொபசர். எல்லா யூனிவர்சிட்டியிலேர்ந்தும் வர்ஷா வர்ஷம் சிநேகிதாள் மூலமா இதெல்லாம் வருமாம். ரூபாய் கொடுத்து வாங்கினேன். அவர் சொன்னார்: கல்கத்தா டில்லியை விட பெட்டராம். மெட்ராஸ்ல ஸீட் கெடைக்கறது கஷ்டமாம்".

"ரொம்ப தாங்க்ஸ்".

"எல்லாத்துக்கும் அப்ளை பண்ணு... எதிலாவது ஒண்லே கெடைக்கட்டுமே!"

"அன்னிக்கு அப்படிப் பேசினேளே?"

"அந்த அபிப்பிராயத்தை நான் மாத்திக்கலையே?"

"அப்ப?"

"நீ உன் ஆசையைச் சொன்னாய். நான் என் மனசு என்னாங்கறதைச் சொன்னேன். அம்படத்தான்".

"நீங்க உங்க அம்மா, அப்பா பேச்சைத் தட்ட மாட்டேள் இல்லியா?"

"ஏன் கேக்கறாய்?"

"பதில் சொல்லுங்களேன்".

"அவா சொல்றது நியாயமாப் பட்டாக் கேட்பேன்".

"நான் படிக்கப் போனா திரும்பி வர்றதுக்கு குறைஞ்சது ரெண்டு வர்ஷமாவது ஆகும்."

"தெரியும்".

"அதுவரையில் உங்களுக்கு மனைவி இல்லை".

"ஒனக்கு ஆம்படையானும் இல்லை".

"என்னை விடுங்கோ. இப்ப நான் உங்களைப் பத்தித்தான் பேசறேன். நான்

பி.எச்.டி., படிக்கப் போனா நான் வர்ற வரை நீங்க காத்துண்டிருக்கலாம். ஆனா உங்க அம்மாவும், அப்பாவும் காத்துண்டிருப்பான்னு நிச்சயம் இல்லே. நான் வராமயே இருந்தாலும் இருந்துடுவேன்னு அவா நினைக்கலாம்".

"சரி அவா அப்படி நினைக்கட்டும், அதுக்கென்ன?"

"என்னை டிவோர்ஸ் பண்ண வைச்சுட்டு உங்களுக்கு ரெண்டாம் கல்யாணத்துக்கு ஏற்பாடு பண்ணுவா".

"சேயலாம்".

"அப்ப நீங்க என்ன செய்வீங்க?"

"அதை இப்ப எப்படிச் சொல்றது பாரதி? காத்துண்டிருப்பேன்னு எழுதித் தரக் கழியுமா?"

"நான் உங்களுக்கு வேணுமா, வேண்டாமா?"

"இந்தக் கேள்வியை நானும் திருப்பிக் கேட்கலாம், இல்லியா?"

"கேட்டுப் பாருங்களேன்".

"வேணுமா, வேண்டாமா?"

"வேணும்".

"நேக்கும் அப்படித்தான்! வேணும்".

"அப்ப இந்த அப்ளிகேஷன்களை அனுப்பறது நியாயமா இருக்காதே?"

"அதை நீதான் சொல்லணும்".

"நீங்க போய்ச் சாப்பிடுங்கோ. நான் அத்திம்பேர்ட்ட ஓர் அஞ்சு நிமிஷம் பேசிட்டு வரேன்".

"என்ன பேசப் போறாய்?"

"அது எங்களுக்குள்ள மட்டும்தான்." மூன்று விண்ணப்பத் தாள்களுடன் அவள் மாடிப் படிகளில் நிதானமாக இறங்கி ஈசுவரனுடைய அறைக்குள் பிரவேசித்தாள்.

"வா, பொண்ணே" என்ற அவர், "ஒன்னைக் கழுதே, நாயேன்னு கூப்பிட நேக்கு மனசு வரலே!" என்றார்.

"மொதல்ல நீங்க கேட்ட கேள்விக்குப்பதில் சொல்லிடறேன். நீங்களும், அவரும் ஊர்ல இல்லாதப்ப நான் என் மனசு போல அலையறதா சொன்னீங்க. நான் அலையலே, அத்திம்பேர்! நீங்க அப்படி அலைய விட்டீங்க".

"நான் சொன்னதைப் பெரிசா எடுத்துண்டுட்டியா?"

"உங்க கருத்துப்படி இது சாதாரண சின்ன விஷயமாவே இருக்கட்டும். ஆனா பெரிசா ஒரு காரியம் செய்துட்டீங்களே?"

"என்ன சேதேன், பொண்ணே?"

"என் அப்பாவுக்கு லெட்டர் போட்டு அவரை இங்கே வரவழைச்சீங்களே".

ஈசுவரன் சிரித்தார்.

"சிரிப்பா இருக்கா?"

"நீ இந்தாத்துக்கு வேணும் பொண்ணே. என் புள்ளைக்கு ஒன்னைவிட நல்ல பொண், புத்தி சாலிப் பெண் இந்த ஜன்மத்திலே கிடைக்க மாட்டா. இது சத்தியமான வார்த்தை".

"அப்ப எதுக்கு நங்கவரத்துக்கு லெட்டர் போட்டீங்க?"

"ஒன் மனசை எப்படி மாத்தறதுன்னே தெரியலே பொண்ணே! நீ ரொம்பப் பிடிவாதம் பிடிச்சாய். நீ இந்தக் குடும்பத்தை விட்டுப் போயிடுவியோன்னு நான் பயந்தேன்".

"அத்திம்பேர், ஏழெட்டு நாளா நான் இந்த வீட்லே எப்படி நடந்துக்கறேன்? பாட்டப்பா, பாட்டீம்மா குறை சொல்லும்படியா நடந்து கொண்டிருக்கேனா?"

"இல்லை".

"இதிலேந்து உங்களுக்கு என்ன புரிஞ்சுது?"

"இப்படிப்பட்ட ஒரு பொண்ணு ஒரே ஒரு விஷயத்திலே மட்டும் பிடிவாதமா இருக்காளேன்னு விசாரமா இருந்தது".

"என் ஆசையை நான் நிறைவேத்திக் கறதுக்காக நான் புறப்படத்தான் போறேன்னு வந்தா, அப்ப நான் விளைவுகளையும் விபரீதங்களையும் பத்தி துளிக்கூடக் கவலைப் பட்டிருக்க மாட்டேன். டிவோர்ஸ், ரெண்டாங் கல்யாணம்னெல்லாம் சொல்லி என்னை பய முறுத்த முடியாது அத்திம்பேர்! நான் பிடி வாதக்காரிதான்! மெல்ல மெல்ல என் பிடி வாதத்தில் நியாயமில்லைன்னு பட்டுது. அதைப் பத்தி அதிகம் நினைக்கப்படாதுன்னு எனக்குள்ளேயே ஒரு தீர்மானம் செய்ஞ்சேன். ஆனா அதுக்குள்ளே நீங்க அவசரப்பட்டுட்டீங்க. உங்க மிரட்டலைக் கண்டு பயந்தோ, என் அப்பாவின் நீலிக் கண்ணீரைப் பார்த்துக் கசிந்தோ என் முடிவை நான் மாத்திக்கலே .

"கைலாசம், தேவகி, என் ஹஸ்பெண்ட் இவர்களையெல்லாம் பார்த்தேன் - பழகினேன். நீங்க காருண்யாஸ்ரமம் பத்திப் பேசினப்ப நிலத்தை தானமாக் கொடுத்தவாளும், மத்த வாளும் கண் முன்னால வந்தா. சங்குண்ணி எந்த டாக்டர் பட்டமும் வாங்காமத்தான் மனுஷ உயிர்களைக் காப்பாத்தறான் என்கிற உண்மை என் நெத்திப் பொட்டிலே அறைஞ் சுது. இவர்கள் மத்தியில் நான் யார்ங்கற கேள்வி பொறந்தது. நான் ஓர் அற்பம். ஆயிரக் கணக்கான எம்ஃபில்கள்லே ஒரு எம்ஃபில்! பி.எச்.டி., ஒரு சாதனை இல்லைங்கற ஞானோதயம் கொஞ்சம் கொஞ்சமா ஒவ் வொருத்தரைப் பார்த்துப் பார்த்துப் பிறவி எடுத்தது" என்று கேவலுடன் கூறிய பாரதி -

முத்தாய்ப்பாக, "நான் இந்தாத்துப் பொண். என் இடம் இங்கதான். நான் வரேன்" என்றாள்.

கண்கள் கனக்க ஈசுவ்ரன் உட்கார்ந்தார். கை அமர்த்தி மீண்டும் அவளை அமரச் செய்தார். மெல்ல மெல்ல அவரிடமிருந்து கேவல் ஒலி கேட்கலாயிற்று.

ஒரு சிங்கம் அழுகிறதா?

பாரதியால் தாங்கிக் கொள்ள முடிய வில்லை.

"இன்னொரு சமாசாரம்! ரொம்ப முக்கியம்!" குரலைச் சற்றே உயர்த்திப் பேசினாள்.

அவர் கேவல் நின்றது.

தீனமான குரலில், "என்ன பொண்ணே?" என்றார்.

"நீங்களும் லிட்ரேச்சர்ல எம்.ஏ."

"ஆமாம் பொண்ணே!"

"லயோலா... பர்ஸ்ட் க்ளாஸ்".

"ஆமாம்".

"பி.எச்.டி., பண்ண உங்களுக்கு ஆசையோ உத்தேசமோ இருந்தா அப்ளிகேஷன் ஃபாரத்துக்காக அலைய வேண்டியதில்லை. மூணு யூனிவர்சிட்டி ஃபார்ம்ஸ் இதோ இருக்கு!"

திடீரென்று ஈசுவரன் சிரிததார்.

"என்னப்பா சிரிப்பு?" என்று கேட்டுக் கொண்டே நாராயணன் வந்தான்.

"அது எங்க ரெண்டு பேருக்குள்ளே!" என்றார் ஈசுவரன்.

"சாப்பிட வா பாரதி, மணி பத்தரை".

"நீங்க சாப்பிடலையா?"

"இல்லை, ஒனக்காகக் காத்துக் கொண் டிருக்கேன்".

"அத்திம்பேர்ட்ட நீங்க கொடுத்த பாரங் களைக் கொடுத்தேன். அவரும் பி.எச்.டிக்குப் போகலையாம்".

"இந்த வயசிலே எவன் அவருக்கு ஸீட் கொடுப்பான்?" என்றான் நாராயணன்.

# நற்றமிழே உயிராக வேண்டும்

இதயபாலா

வேண்டும் மனமே வேண்டும் - ஆல்
வேர் போல் உறுதி வேண்டும்
புன்னகை பூ மனம் வேண்டும் - அதில்
பொன் முத்தே உதிர்த்திட வேண்டும்
எண்ணங்கள் நல்லவையாக வேண்டும் - அதில்
எல்லாமே வெற்றியாக வேண்டும்.

வளங்கள் செழித்திட வேண்டும் - நல்
வாழ்வில் அறமது பெருகிட வேண்டும்
நலங்கள் காத்திட வேண்டும் - அது
நன்மை பயத்திட வேண்டும்
பலமது பெருகிட வேண்டும் - என்
பண்ணிசை நீயாக வேண்டும்

உலகம் இன்புற வேண்டும் - அதில்
உண்மையே வாழ்ந்திட வேண்டும்
கலகம் தவிர்த்திட வேண்டும் - என்
கண்மணி நீயாக வேண்டும்
உளத்தில் அமைதியே வேண்டும்
உய்யும் வாழ்வதுமாக வேண்டும்
அஞ்சா நெஞ்சம் வேண்டும்
ஆற்றல் பெருகிட வேண்டும்
நஞ்சே இனிப்பாக வேண்டும் - அதில்
நற்றமிழே உயிராக வேண்டும்
நெஞ்சம் தெளிவு பெறவேண்டும் - என்றும்
நேர்மை போற்றிட வேண்டும்.

"அப்படி என்னடா எனக்குப்பெரிசா வய சாயிடுத்து? இந்நைக்கெல்லாம் இருந்தா..."

"என்ன, இன்னம் ஆத்ல விளக்கு எரிஞ் சுண்டிருக்கு! அண்ணா நீ எப்ப எர்ணாகுளத்தி லேர்ந்து வந்தாய்?" என்று கேட்டுக்கொண்டே சகஸ்ரம் வந்தான்.

"சாயங்காலம்".

"எர்ணாகுளத்திலே மழை இருக்கா?"

"நான் கவனிக்கலேடா, சகஸ்ரம்.

"அது இருக்கட்டும், இங்கே என்ன களிப்பும், சிரிப்பும்!"

"இந்நைக்குத்தானேடா நம்ப ஆத்துக்கு ஒரு மாட்டுப் பொண் வந்திருக்கா! அதான் சிரிப்பும் களிப்பும்!"

"குஞ்சப்பா!" என்றாள் பாரதி திடீரென்று.

ஆச்சரியமாய்ப் பார்த்த சகஸ்ரம், "சரியாச் சொல்லு பாரதி! சித்தப்பாவா, குஞ்சப்பாவா?" என்றான்.

"உங்க அண்ணாவோட புள்ளைக்கு நீங்க ஆரு?"

"குஞ்சப்பா!"

"அப்ப எனக்கும் அதுதான்... ஹாங், எதுக்குக் கூப்பிட்டேன்னா..."

"சொல்லு".

"இந்தப் பாலக்காட்டு ஹிஸ்டரியை வைச்சுக் கிட்டு நீங்க ஏன் ஒரு தீஸிஸ் எழுதப்படாது? டாக்டர் சகஸ்ரநாமம்னா நன்னா இருக்கும்".

"நந்நா இருக்கும். இல்லேன்னு சொல்லலே. வைத்தியம் பண்ற டாக்டர்னு நினைச்சுப் பாதிப்பேர் ஒதுங்கிப் போயிடுவா".

"குஞ்சப்பா நீயும் வா, சாப்பிடலாம்" என்றான் நாராயணன்.

"பசிக்கத்தான் பசிக்கறது. மாட்டேன்னா ஒனக்கு மனசு சங்கடப்படும். அது எதுக்கு அனாவசியமா? சாப்பிட்டு வைக்கிறேன்".

"சரி ஒக்காரு. ஒரு நாள் டேபிள்லே ஒக் காந்துதான் சாப்பிடறேன். நீயும் ஒக்காரு பாரதி".

"வேண்டாம். அத்தை கோவிச்சுப்பா".

"இனிமே இந்த வீட்ல என் கோபம் செல் லாது பாரதி! நீ உன் இஷ்டத்துக்கு உட்கார்ந்து சாப்பிடு" என்ற குரல் வெகு சமீபத்திலிருந்து வந்தது.

"அம்மா, நீ இங்கதான் இருக்கியா, நான் பார்க்கலையே?" என்றான் நாராயணன்.

"இனிமே உன் கண்ல நான் எப்படிப் படு வேன்? கண்ணை பொத்தத்தான் ஒருத்தி வந்தாச்சே!"

"மன்னி நந்நாவே ஜோக் அடிக்கறா!"

"நங்கவரமா கொக்கா!" என்றாள் பாரதி.

சாப்பாடு அமர்க்களமாக ஆரம்பித்தது.

அன்று இரவு மணவாழ்க்கையும் மௌன மாய்த் தொடங்கியது.

[முற்றும்]

# கங்காபுரிக் காவலன்

## 8. சித்தரின் சித்தம்

இராசேந்திர சோழ தேவரின் பட்டத்தரசி, பஞ்சவன் மாதேவியின் கரத்தில், பட்டுத் துணியில் சுற்றப்பட்ட ஓலைகள் இருந்தன. அந்த ஓலைகளில் எழுதப்பட்டிருந்த செய்தியை மிகக் கவனத்துடன் அரசி படித்தாள். சற்றுத் தொலைவில் நின்றிருந்த ஒற்றர் படைத் தலைவர் அரசியார் என்ன சொல்லப் போகிறாரோ என்று எதிர்பார்த்துக் கவனத்துடன் பயபக்தியாக நின்று கொண்டிருந்தார். பயமும் மரியாதையும் கலந்த முகத்தில், சற்றுப் பெருமிதமும் கலந்திருந்தது.

வீரமாதேவியின் நடவடிக்கையைக் கண்காணிக்கும் பொறுப்பு அவரிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. கானகத்தில் அவள் செய்யும் பணிகள், அவள் யாருடன் பேசுகிறாள், என்ன பேசுகிறாள், கோயில் பணிகளின் முன்னேற்றம் – இவை எல்லாவற்றையும் கவனமாகக் குறித்து, அரசியிடம் தெரிவிப்பது அவர் பொறுப்பு.

அரசியாருக்கு அவர் தெரிவிப்பது மற்ற எவருக்கும் தெரியாது பார்த்துக் கொள்ளும் மிகப் பெரிய கடமையும் அவருக்கிருந்தது. ஒவ்வொரு நாளும் பழையாறையிலும், நாட்டிலும் நடைபெறும் முக்கியச் செய்திகள் வடக்கே சென்றிருக்கும் அரசருக்குத் தெரிவிக்கப்படும். அதற்கென படை வீரர்கள் இருவர் இரு நாள்களுக்கு ஒருமுறை அரசரிருக்குமிடம் சென்று கொண்டிருந்தனர். அவர்கள் மூலம் வீரமாதேவியும் செய்தி அனுப்பி வந்தாள்.

அவள் அனுப்பும் செய்தியைத் தெரிந்து அரசியிடம் சொல்லும் பொறுப்பை ஒற்றர் படைத் தலைவர் ஏற்றிருந்தார். ஓலையைப் படித்துவிட்டு பஞ்சவன் மாதேவி கொடுத்து விடுவாள். வீரமாதேவியின் ஒவ்வொரு எழுத்தையும் படிக்கும்போது, பஞ்சவன் மாதேவிக்குச் சீற்றமும், எரிச்சலும், ஆத்திரமும் பொங்கும்.

அன்று ஒற்றர் படைத் தலைவர் கொண்டு வந்த தகவலைப்படித்தறிந்தவுடன் பஞ்சவன் மாதேவி வெகுண்டெழுந்தாள்.

"பழையாறையிலுள்ள ஆதூர சாலைக்கு வீரமாதேவி வந்து சென்ற செய்தி எனக்குத் தெரியவில்லை. கருவூர்ச் சித்தரும் வந்திருக்கிறார். எனக்கு ஏன் தெரிவிக்கவில்லை?" கோபத்துடன் ஒற்றர் படைத் தலைவரைக் கேட்டாள்.

பழையாறைக்கு யார் வருகிறார்கள்; யாரைச் சந்திக்கிறார்கள் என்பனவற்றை அறிந்து அரசியாரிடம் சொல்லும் பொறுப்பை அவர் ஏற்கவில்லை. என்ன சொல்வது என்று புரியாமல் கையைப் பிசைந்தார்.

"என்ன?" – பஞ்சவன் மாதேவியின் விழிகள் உருண்டன. நடக்காதது ஏதோ நடந்து விட்டதைப் போல் அவள் சீறினாள்.

ஒற்றர் படைத் தலைவர் மிகவும் மெல்லிய குரலில், பயத்துடன், "மாளிகை மருத்துவரின் வீட்டைக் கண்காணிக்குமாறு எனக்கு உத்தரவு இல்லை என்பதால், நான் ஒற்றர்களை அங்கே இருக்கச் செய்யவில்லை..." என்றான்.

"பழையாறைக்கு வீரமாதேவி வந்தது எப்படி தெரியாமல் போயிற்று? கானகப் பகுதியை விட்டு அவள் புறப்பட்டதைத் தெரிந்து கொண்டிருக்க வேண்டாமா?" அது உங்கள் கடமையல்லவா? அரசியின் ஆத்திரம் அதிகரித்தது.

அரசி கேட்பது நியாயம்தான். வீரமாதேவி சிற்பத் திருப்பணி நடைபெறும் இடத்தை விட்டுப் புறப்பட்டது நமக்குத் தெரியாமல் போனது எப்படி? தலைவர் கவலையடைந்தார்.

அவருடைய மௌனம் அரசியாரின் கோபத்துக்குத் தூபமிடுகிறது.

"அந்த மாய மோகினி பழையாறைக்கு வந்திருக்கிறாள் ஹும்" என்று அரசி சீறினாள்.

---

விக்கிரமன்

மாய மோகினி என்று அவள் குறிப்பிடுவது வீரமாதேவியை.

"மாளிகை மருத்துவரின் ஆதார சாலையில் சிற்பி மாணிக்க சேகரன் கடும் காய்ச்சலுடன் கிடக்கிறான். அவனுக்குக் காய்ச்சல் வந்ததால் சிற்பப் பணிகள் தடைப்பட்டன. சிற்பிக்கு வந்திருக்கும் நோயைக் குணப்படுத்தவேண்டும் என்பதில் எமக்கும் அக்கறை உண்டு. ஆனால், சிற்பிக்கு உடல்நிலை சரியில்லாததால்தானே கோயில் திருப்பணி தடைப்பட்டது? வெளிப்படையாக நான் சொல்ல வேண்டுமா? சிற்பி பழையாறையில் எவ்வளவு நாள்கள் தங்கியிருக்கிறாரோ அவ்வளவுக்கு நல்லது. அவருடைய காதலியைப் பழையாறைக்கு வர விடாமல் நீங்கள் தடுத்ததில் எனக்கு மகிழ்ச்சியே. ஆனால்..." என்று கூறி நிறுத்திய பஞ்சவன் மாதேவி, தன் கோபத்தைச் சற்றுத் தணித்து, அவரைச் சமாதானப் படுத்துபவள் போல், ஒற்றர்ப் படைத் தலைவரைப் பெயர் சொல்லி விளித்து," வீரம் மாளிடமிருந்து சக்கரவர்த்திகளுக்குச் செல்ல இருக்கும் இந்த முக்கிய ஓலையைக் கொண்டு வந்ததற்காக உங்களைப் பாராட்டுகிறோம். இந்த ஓலையை நான் பார்த்திராவிடில், பல முக்கியச் செய்திகளை நான் அறிந்து கொள்ள இயலாமல் போயிருக்கும். பல இரகசியச் செய்திகளை அறிந்திருக்கும் நீங்கள் இந்த ஓலையைக் கொண்டு வந்ததன் மூலம் பல முக்கிய முடிவுகளை நான் எடுக்குமாறு செய்து விட்டீர்கள். அதற்காகப் பாராட்ட வேண்டும்" என்றாள்.



ஒற்றர்ப் படைத் தலைவர் அரசி பாராட்டியதற்காகவும் மகிழ்ந்து விடவில்லை. ஒரு முறை தன் வணக்கத்தைத் தெரிவிக்கும் முகமாக தலையைத் தாழ்த்தி நின்றார்.

**ப**ழையாறைக்கு விரைந்து வந்த வீரமாதேவி சிற்பியின் உடல்நிலையில் எவ்வித முன்னேற்றமும் இல்லை என்பதை அறிந்து செய்வதறியாது திகைத்தாள். பழையாறையை விட்டுச் சென்று பல மாதங்களானபடியால், இப்போது நகரத்தைப் பார்க்கும் போது புதிதாக இருந்தது. நாட்டு ஆட்சி முறை தொடர்பான அலுவலர்கள் பழையாறைக்கு வந்து விட்டதனால் நகரில் கலகலப்பு மிகுந்து இருந்தது. பணியாள்களுக்கான குடியிருப்புகள் புதிதாகக் கட்டப்பட்டன. நகரம் வளர்ந்தது. கடல் கடந்த நாடுகளிலிருந்து வரும் வணிகர்கள் பலரை நகர வீதிகளில் காண முடிந்

தது. மாளிகையில் அதிகாரிகளைக் காண யவன, சீன வணிகர்கள் வருவது மிகுந்திருந்தது.

சக்கரவர்த்தி தலை நகரிலில்லாததால் விலையுயர்ந்த அணிமணிகள், பட்டுப் பீதாம்பரங்களை விற்பவர்கள் அரசியைக் காண நேரம் கேட்டுக் காத்திருந்தனர்.

பழையாறைக்குத் தான் வருவது ஒருவருக்கும் தெரியக் கூடாது என்பதால் எந்த வித முன் அறிவிப்புமின்றி ஒரு நாள் இரவு வேளையில் வீரமாதேவி பழையாறைக்கு வந்தாள்.

ஆதூர சாலையில் சிற்பி மாணிக்க சேகரனைக் கண்ட பிறகு அவளுக்கு இரவு உறக்கம் வரவில்லை. மருத்துவர்களின் உதவியாளர்களிடம் பேசியதிலிருந்து சிற்பியின் உடல் நிலையில் எந்தவித முன்னேற்றமும் ஏற்படவில்லை என்பதை அறிந்தாள். அவளுக்கு ஏற்பட்ட அதிர்ச்சிக்கு அளவில்லை. சோழ நாட்டின் தலைசிறந்த கலைஞரின் உடல் சீரடைய ஒருவரும் முயற்சி மேற்கொள்ளவில்லையே என்பது குறித்து அவளுக்கு வருத்தமே. மறுநாள் அரச மருத்துவரைச் சந்தித்தாள்.

மாணிக்க சேகரனைப் பீடித்திருப்பது காட்டுப் பகுதியில் ஏற்படும் கொடிய நச்சுக் காய்ச்சல் என்று விவரித்த மருத்துவர் தன்னால் முடிந்த அளவிற்குச் சிகிச்சை செய்வதாகவும் பிறகு இறைவன் விட்ட வழிதான் இறுதியானது, என்றும் தெரிவித்தார்"



"சக்கரவர்த்தி கேட்டிருந்தாலும் இந்த மறுமொழியைதான் சொல்லியிருப்பீர்களா மருத்துவரே?' என வீரமாதேவி பளிச் சென்று கேட்டு விட்டாள்.

மருத்துவர் ஒரு கணம் திகைத்தார். "என்ன அப்படிக் கேட்டு விட்டீர்கள்? சக்கரவர்த்திக்கு வேறு; தங்களுக்கு வேறு என்று நான் வேற்றுமைப் பாராட்டி ஏதும் சொல்ல மாட்டேன். நோயாளிகளுள் வேற்றுமை ஏது?" என்றார்.

"நோயாளிகளுக்குள் வேற்றுமை பாராட்டக் கூடாது என்பது நியாயமே. ஆனால், இங்கு உங்களிடம் ஒப்படைக்கப்பட்டிருப்பவர் சோழ நாட்டின் கண்மணி போன்றவர் என்பது உங்ளுக்குத் தெரியுமா? அவர் மற்றொரு பிரம்மா என்பதை அறிவீர்களா? சக்கரவர்த்திகள் மிகவும் மதிப்பு வைத்து அவரிடம் மிகப் பெரிய பொறுப்பை ஒப்படைத்திருப்பதையும், இந்த நாட்டின் பெருமையை உயர்த்தும் மாபெரும் கோயிலை நிர்மாணிக்கும் பொறுப்பு மாணிக்க சேகரனிடம் சக்கரவர்த்திகள் ஒப்படைத்திருப்பதையும் நீங்கள் அறிவீர்களா?" வீரமாதேவி சற்று உணர்ச்சி வயப்பட்டுப் பேசியதைக் கண்ட மருத்துவர், அவளைச் சமாதானப்படுத்த விரும்பி, அவளுக்கு நம்பிக்கை ஏற்படும் வகையில் பேசினார். வீரமாதேவியை எப்படி விளிப்பது என்று முதலில் அவருக்குத் தெரியவில்லை - என்றாலும் பொதுவாக, "தேவி!" என்று அழைத்துப் பேச்சைத் தொடங்கினார்.

"கடும் காய்ச்சலால் பீடிக்கப்பட்டு என் ஆதுார சாலையில் இருப்பவர் மிக முக்கிய மானவர் என்பதை அறிவேன். அரச குடும்பத்திற்கு என்று தனியே ஏற்படுத்தப்பட்டிருக்கும் மருத்துவ மனையில் ஒருவருக்குச் சிகிச்சை அளிக்கப்படுகிறது என்றால் அவர் மிக முக்கியமானவராகத் தானிருக்க வேண்டும் என்று தெரிந்து கொண்டேன். தேவி! அவருக்கு ஏற்பட்டிருக்கும் நச்சுக் காய்ச்சலுக்கு எல்லாவித மருந்துகளையும் கொடுத்துவிட்டோம். உடனிருந்து பணி விடை செய்ய அவருக்கு உற்றார் உறவினர் யாருமில்லை என்பதறிந்து, எங்கள் பணியாட்களை அவர் அருகேயே அல்லும் பகலும் இருக்குமாறு பணித்தேன். காய்ச்சலின் உச்ச நிலையில் அவர் பிதற்றுவதிலிருந்து அவரைப் பற்றி அறிந்தேன். அவர் பெரும் கலைஞர் என்பதைப் புரிந்து கொண்டேன். ஒரு நாள் அவர் அருகேயே நீண்ட நேரமிருந்தேன். காய்ச்சல் வேகத்தில் அவர் யாருடனோ பேசுகிறார். சிரித்துப் பேசுகிறார். குழந்தைபோல் குழைந்து பேசுகிறார். நாட்டியமாடுவதைப் போல் அவர் அபிநயிக்கிறார். அவர் யாரையோ எதிர்பார்த்து வராததால் ஏக்கமுற்றிருப்பது நன்றாகப் புலப்பட்டது. ஒரு பெண்ணின் பெயரை அடிக்கடி உச்சரிக்கிறார்" என்று மருத்துவர் சொல்லி வரும் போது வீரமாதேவி குறுக்கிட்டு, "யாருடைய பெயரை அவர் சொன்னார் என்பது நினைவிருக்கிறதா!" என்று ஆவலுடன் கேட்டாள்.

சற்று யோசித்த பிறகு மருத்துவர், "நினைவில் வரவில்லை தேவி. மிகவும் நேசிக்கும் பெண்ணாக அவளிருக்க வேண்டும் எனத் தோன்றியது. அந்தப் பெண் அவர் அருகிலிருந்தால் உடல் நிலையில் முன்னேற்றம் ஏற்படும் என்பது தெரிந்தது அவள் யார் தேவி?" என்று மருத்துவர் கேட்டார்.

யார் என்று குறிப்பிட்டு வீரமாதேவி கூறுவாள்?

"பாவம் சிற்பி! மாபெரும் கலைஞர், என்றாலும் அவருக்கும் மனம் என்று ஒன்று உண்டு. உணர்வுகள் உண்டு. உலக இன்பங்களில் ஈடுபாடு உண்டு. அழகை ரசிக்கும் கலைஞன் அழகை மிக நேசிப்பவன். அந்த முறையில் மாணிக்க சேகரன் தன்னை மிகவும் கவர்ந்த குமுதவல்லியை நினைக்காமல் இருக்க முடியுமா? என்னிடம் எதிரெதிரே அமர்ந்து சிற்பக் கலையைப் பற்றியும், கோயில் உருவாவதைப் பற்றியும் பேசிக் கொண்டிருக்கும் போது என்னில் அவர் தன் காதலியைக் கண்டிருக்கலாமல்லவா? அவர் பேச்சையும், நடவடிக்கையையும் கண்டு சக்கரவர்த்தியார் சந்தேகப்படும்படி இருந்திருப்பதில் நியாயம் இருக்கிறது. ஆனால் என் உள்ளம் சிற்பம் வடிக்கப் பிறந்த பாறை. அதை அசைக்க முடியாது. எந்த விதச் சலனமும் எனக்கு ஏற்படவில்லை. ஆனால் சிற்பியின் மென்மையான உள்ளத்தில் ஏற்படும் சலனத்தை யாரால் தடுத்திருக்க முடியும்?

"பாவம், சிற்பி! காய்ச்சல் வேகத்தில் யாரை அழைத்திருப்பார்? அவர் மனத்துக் கினியவளை அழைத்திருப்பார். எங்கிருந் தாலும் தேடி அழைத்து வருமாறு, அரச கட்டளை இடப்பட்டிருந்தும் அவளைக் கொண்டு சேர்க்க இயலவில்லை. உம். சிற்பியின் காய்ச்சல் முழுமையாகக் குண மாக வேண்டும். அதற்கான மருந்தை ஏழு கடலுக்கு அப்பாலிலிருந்தாவது கொண்டு வந்தாக வேண்டும். யாரிடம் சொல்வது? இளவரசர் ஆதித்தனைச் சில நாள்களாகக் காணவில்லை. அவரைச் சந்திப்போம். இதற்கிடையே சக்கரவர்த்திக்குச் செய்தி அனுப்புவோம் என்று முடிவு செய்த வீரமாதேவி, மருத்துவரை நோக்கி, "ஐயா, சிற்பியின் காய்ச்சலைக் குணப்படுத்த சோழ நாட்டில் மூலிகையே இல்லையா?" என்று கேட்டாள்.

"இல்லாமலிருக்குமா? கொல்லி மலை யில் மூலிகை ஒன்று இருக்கிறது" என்று பேச்சைத் தொடங்கியவரை நோக்கிப் பர பரப்புடன், "கொல்லி மலை என்ன, இமய மலையில் இருந்தாலும் கொண்டு வர வேண்டும். நூறு திக்குகளுக்கும் தக்கவர் களை அனுப்புங்கள். கங்கை நீரைக் கொண்டுவரச் சென்றிருக்கும் சக்கரவர்த் திக்கும் நான் சொல்லி அனுப்புகிறேன்" என்றாள்.

மருத்துவர் மௌனமாக இருப்பதைப் பார்த்தவுடன், "உடனே இயங்குங்கள். நான் கட்டளையிடத் தகுதி வாய்ந்தவள் என்பதை சக்கரவர்த்தியின் உத்தரவு மூலம் உறுதிப் படுத்துகிறேன். இன்றே, சக்கரவர்த்திக் குச் செய்தி அனுப்புகிறேன். செய்தி போய்ச் சேர்ந்து அரசரிடமிருந்து மறு மொழி வருவதற்குப் பல நாள்களாகும். அதுவரை, சிற்பியின் உயிரைப் பிடித் திருக்க முடியுமா? இயங்குங்கள். உடனே இயங்குங்கள். ஒரு நாட்டிற்கு மருத்துவர் எவ்வளவு முக்கியமோ, அரச குரு எவ் வளவு முக்கியமோ, படைத் தளபதி எவ் வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் சிற்பியும். சோழ நாட்டிற்குப் பெரும் புக ழைத் தரப் போகிற கோயிலைக்கட்ட வந் துள்ள சிற்பி, மிக முக்கியமானவர் என்று தங்களுக்குத் தோன்றவில்லையா! உடனே

நான்கு திக்கும் ஆளை அனுப்புங்கள். கொல்லி மலைக்கு அனுப்புங்கள்; பொதிகைக்கு அனுப்புங்கள்" என்று ஆவேசம் வந்தவள் போல் பேசினாள்.

மருத்துவர் திகைத்து ஏதும் சொல்வது அறியாமல் நின்றார்.

"கொல்லி மலைக்குச் செல்ல வேண்டாம்; பொதிகைக்கும் செல்ல வேண்டாம் இமயத்திற்கும் போக வேண்டாம்!" என்ற குரல் கேட்டது.

அந்தக் குரல் மிக இனிமையாக இருந்தது. தேவகானம் ஒலிப்பது போலிருந்தது. யாழின் இன்னிசை போலிருந்தது. கீதமினிய குயில்கள் ஒரு சேர அமர்ந்து இன்னிசை எழுப்புவது போலிருந்தது.

வீரமாதேவி திரும்பிப் பார்த்தாள். மருத்துவர் திரும்பிப் பார்த்தார்.

கருவூர்ச் சித்தர் ஆதுர சாலையில் நுழைந்தவர், அவர்கள் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்துச் சிறிது நேரம் நின்ற பிறகு குரல் கொடுத்தார்.

வீரமாதேவி உடல் மெல்ல நடுங்கியது.

கருவூர்த் தேவர் அங்கு வந்து கொண்டிருந்தார்.

பேச வார்த்தைகள் வராமல் திகைத்த வீரமாதேவி, "சித்த மகாபுருஷரே. நான் காண்பது கனவா? மெய்தானா? ஒரு கணம் தங்களை மனத்தில் நினைத்தேன், வந்து விட்டீர்கள். சோழ நாட்டைக் காப்பாற்றுங்கள். சோழ சக்கரவர்த்திகளின் இலட்சியத்தை நிறைவேற்றுங்கள். தாங்கள் ஆசீர்வதித்துத் தொடங்கிய கோயில் திருப்பணிக்குத் தடை ஏற்பட்டிருக்கிறது. தடையை நீக்குங்கள். சிற்பியைக் காப்பாற்றுங்கள்" என்று கூறி. அவர் பாதத்தில் வீழ்ந்து வணங்கினாள்.

ஒரு கணம் ஒன்றும் புலப்படாமல் திகைத்த மருத்துவர் ஓடோடிச் சென்று இருக்கை ஒன்றைக் கொணர்ந்து அமருமாறு உபசரித்தார்.

★★

சிற்பி மாணிக்க சேகரன் உடல் குணமடைய சித்தர் மூலிகைச் சாறு கொடுத்தார். இரண்டாவது முறையாக அந்த ஜீவ மூலிகையைப் பயன்படுத்தினார்.

"இன்னும் இரு நாள்களில் சிற்பி குதித்து எழுந்து விடுவார். பெண்ணே! வடக்கே போய் என்ன செய்கிறான் இராசேந்திரன்? இன்னும் இரண்டு பௌர்ணமிகள் வரை தான் நான் சோழ நாட்டில் இருப்பேன். அதற்குள் கோயில் திருப்பணியை முடிக்க வேண்டும்" என்று கூறிச் சுற்று முற்றும் பார்த்தார்.

மருத்துவர், மூலிகைச் சாற்றை, சிற்பியின் வாயில் புகட்டிக் கொண்டிருந்தார்.

வீரமாதேவி விம்மினாள் கோயில் திருப்பணிக்கு ஏற்பட்டுள்ள இடர்ப்பாடுகளை ஒன்றுவிடாமல் விவரித்தாள்.

சித்தர் கரம் தூக்கி ஆசி வழங்கி, "மகளே! கவலைப்படாதே சூரியனைக் கண்ட பனிபோல் தடைகள் நீங்கிவிடும். உடனே வருமாறு இராசேந்திரனுக்குச் செய்தி அனுப்பு..." என்றார்.

வீரமாதேவி திகைத்தாள். "நான் அரசருக்குக் கட்டளையிடுவதா? என்ன சுவாமி என்னைச் சோதிக்கிறீர்கள்?" என்றாள். கண்கள் கலங்கியிருந்தன.

"சோதனை இல்லை - உன்னால் முடியும். நடக்கக் கூடியதைச் சொல்கிறேன். அடுத்த வாரம் நான் திருப்பணி நடக்குமிடத்திற்கு வருவேன். அதற்குள் முழு மூச்சுடன் வேலைகள் நடக்க வேண்டும். நாற்பத்தி ஐந்து நாள்களில் பணி முடிவடையவில்லை என்றால், இராசேந்திரன் இலட்சியப்படி, கங்கை நீரால் குடமுழுக்கு நடைபெறும்போது நான் கலந்து கொள்ள முடியாது. என்னைச் சோழ நாட்டில் எங்கும் காண முடியாது. உம். தாமதமின்றி பணிகளைக் கவனி" என்றார். பிறகு சிற்பியின் நெற்றியில் தன் கரத்தைப் பதித்தார். மீண்டும் விழுந்து வணங்கிய, வீரமாதேவியைத் தூக்கி அவள் தலையில் தன் கரத்தை வைத்து ஆசிர்வதித்தார்.

ஆயிரம் மின்னல்கள் உடலில் பாய்ந்தது போன்ற உணர்வு வீரமாதேவிக்கு ஏற்பட்டது.

★★

அன்று பழையாறையில் நடந்த நிகழ்ச்சியை விடாமல் எழுதி வடக்கே உள்ள சக்கரவர்த்திக்கு அனுப்பினாள் வீரமாதேவி. ஓலையை அனுப்பிவிட்டு, கானகப் பகுதிக்கு விரைந்து சென்று விட்டாள்.

# மனம் விட்டுப் பேசுவோம்

புத்தாண்டில் அமுதசுரபி புதுப்பொலிவுடன் வெளிவருவது மகிழ்ந்து வரவேற்கத்தக்கது. வெறும் பொழுது போக்கு அம்சமாக மட்டும் விளங்காமல், அனைத்துப் பிரிவினர்களும் மகிழ்ந்து உண்ணும் படியான சிந்தனை அமுதை வழங்கும் பாத்திரமாக "அமுதசுரபி" விளங்குவது தமிழ்ச் சமுதாயத்தின் பேறுதான். ஆன்மிகம், வணிகம், மங்கையர் பகுதி, சிறுவர் பகுதி, கவிதை, கலை உள்ளத்திற்கு உரமாகும் கட்டுரைகள் என விரிவாகி, ஒரு குடும்ப ஏடாக பரிணமித்திருக்கும் அமுதசுரபிக்கு வாழ்த்துகள்.

**துரை. இராஜசேகரன், கோவை – 641 042.**

ஆன்மிகம், சிறுவர் பக்கம், இளைஞர் பக்கம், பாவையர் பக்கம், வர்த்தகம், சேமிப்பு, கலை, இலக்கியம், சிறுகதைகள், தொடர்கதைகள், கவிதைகள், கட்டுரைகள், ஜோதிடம் என பல்சுவை பகுதிகளுடன் வெளிவரும் அமுதசுரபிக்கு ஆறு ரூபாய் என்ன அறுபது ரூபாய் கொடுத்தாலும் தகும்.

**அ. செபாஸ்டின், களியல் – 629 101.**

தேனில் நனைத்த பலாச்சுளை போல், திகட்டாது இனிக்கிறது 'கங்காபுரிக் காவலன்' எனும் மனதை கட்டிப் போடும் புதினம்.

**தாமரைச் செல்வி சுந்தர், திருபுவனம்.**

கர்மயோகியின் "இருளற்ற ஒளி" அலைபாயும் உள்ளங்களுக்கு நிம்மதியை வழங்கும் அருட் பிரசாதம்.

**ஆர்.கே. லிங்கேசன், மேலகிருஷ்ணன் புதூர்.**

புத்தாண்டின் முதல் இதழ் கண்டேன். சுவாமி ஓங்காரநந்தா அவர்களின் புத்தாண்டு வாழ்த்து வாசிக்கும்போது உடம்பிலுள்ள ரத்த ஓட்டம் படு சுத்தமானது போல ஓர் ஆனந்தம் ஏற்பட்டது.

**திருமதி. சுகந்தி நாராயண், மதுரை – 625 011.**

அமுதசுரபி நடத்திய (இ)லக்கி (ய) விழாவில் கலந்து கொள்ள முடியாமல் போனாலும், நடந்த நிகழ்ச்சிகளின் கட்டுரை வர்ணனையும், பாிசளிப்பு விழா புகைப்படங்களும் நேரில் கலந்து கொண்டு ரசித்தது போலிருந்தன.

வித்யா சுப்ரமண்யம் எழுதிய 'வனத்தில் ஒரு மான்' – சிறுகதை இராமயணக் காவியத்துக்கு இன்னமும் சிறப்பைத் தேடித் தந்துள்ளது. இரண்டே பக்கத்தில் '93ஆம் ஆண்டு சினிமா உலகத்தை அலசி ஆராய்ந்தது புதுமையாக இருந்தது.

**திருமதி. சுகந்தி, மதுரை – 625 011.**

தமிழில் தவறுகளை அறிகிறோமோ இல்லையோ இப்படியெல்லாம்கூட தமிழ்ச் சொற்களைச் சரியாகப் பயன்படுத்த முடியும் என்று மிகத் தெளிவாகக் காட்டுகிறது டாக்டர் தி. முத்துக் கண்ணப்பரின் கட்டுரை.

**அய்யாறு எஸ். வாசுதேவன், சென்னை – 14.**

சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்ற சிறுகதை 'விசுவரூப தரிசனம்' அருமையான, நெஞ்சத்தை நெக்குருக வைத்த கதை. பெண் சபல புத்தியுள்ள ஆண்களுக்குச் சரியான சாட்டை அடி. எத்தனை பெண்களின் கதைகள் இந்த மாதிரி. இம்மாதிரி துன்பப்படும் பெண்மணிகளுக்கு இந்தக் கதை ஒரு நல்ல டானிக். மனவலிமை பெற்ற தாயம்மாவைப் போல் ஆகி விட்டால் எந்த வீராசாமியும் பெட்டிப் பாம்பாக இருப்பதைத் தவிர வேறு வழியில்லை. சரியான பாடம் அயோக்கிய ஆண்களுக்கு.

**திருமதி ராஜம் வெங்கட்ராமன், பம்பாய் – 400 059.**

அமுதசுரபி ஜனவரி இதழைக் கண்டேன். பாராட்டாமல் விட்டு விட்டால் அது – அறிந்தே நெஞ்சுக்கிழைக்கும் அநீதியாகும்.

ஆம்! வே. சபாநாயகம் அவர்கள் படைத்துள்ள 'விருது' சிறுகதையைத்தான் சொல்கிறேன். நாட்டு நடப்பை நயமாகச் சித்திரித்துள்ள அவரின் கதையைப் பல பிரதிகள் படிகள் எடுத்து கல்வி அதிகாரிகளுக்கு அனுப்ப வேண்டும்.

**அனு வெண்ணிலா, அம்பத்தூர்.**

---

பஞ்சவன் மாதேவி, வீரமாதேவி, சக்கரவர்த்திக்கு எழுதிய அந்த முக்கிய ஓலையைப் படித்தாள். அதிலுள்ள செய்தியை வரி விடாமல் படித்தாள். ஒரு முறைக்கு இரு முறை படித்தாள். கருவூர்ச் சித்தரின் ஆசி முழுமையாக வீரமாதேவிக்கு ஏற்பட்டிருக்கும்போது நாம் ஏற்படுத்தும் தடைகள் வெற்றியடையுமா என்று கவலைப்பட்டாள்.

"இந்த ஓலையைச் சக்கரவர்த்திக்கு அனுப்புமாறு சொல்கிறீர்களா?" என்று ஒற்றர்ப் படைத் தலைவர் கேட்டார்.

அரசி சிறிது நேரம் ஏதும் பேசவில்லை.

"சிந்திப்பதற்குச் சிறிது நேரம் கொடு. பகல் உணவிற்குப் பிறகு வா. ஓலையை எடுத்துச் செல்பவரை மாலை வரைக் காத்திருக்கச் சொல்" என்றாள்.

ஆனால் நண்பகல் நேரத்தில், இராசேந்திர சோழ தேவர், பஞ்சவன் மாதேவிக்கு அனுப்பிய செய்தியை எடுத்துக் கொண்டு, வீரனொருவன் மாளிகையை அடைந்தான்.

உடனே கிருஷ்ணை நதிக்கரைக்குப் புறப்பட்டு வருமாறு சக்கரவர்த்தி எழுதியிருந்தார்.

(தொடரும்)



# ஒரு நீக்ரோவின் பாடல்!

கவியரசு. நா. காமராசன்

இரவு நேரத்தில்--
எங்கள் பாடல்களை
ரசிப்பவர்கள்--
பகலில் எங்கள் அழுகுரல்களை
ஏன் ரட்சிப்பதில்லை?

நாங்கள்--
இருண்டகால நதிகளில்
படகோட்டிகள்--
விழிகளே கலங்கரை
விளக்குகள்!

எங்கள் இனத்தின் உழைப்பு--
நதிகளைப்போல் ஆழமானது;
மலைச் சிகரங்களைப் போல்
உயரமானது;

ஆனால்--அது
பள்ளத்தாக்குகளை நோக்கி
வீசி எறியப்படுகிறது!

ஏகாதிபத்தியவாதிகளின்
கிரீடங்களைப் பளபளப்பாக்கி விட்டு
அவர்களின்--
அரண்மனைப் படிக்கட்டுகளில்
தூசுகளாக விழுந்தோம்.

நாங்கள்
பிரமிடுகளை உருவாக்கிவிட்டு
நடைப்பிணங்கள்
ஆனோம்!

எங்கள்
இருண்டகால ஜீவநதி
தான் உறங்காமல்--
யாருக்காகவோ
தாலாட்டுப் பாடிக் கொண்டிருக்கிறது!

# பாவை பக்கங்கள்

(அமுதசுரபி வழங்கும் பெண்கள் பகுதி)

தொகுப்பு – கிரிஜா ராகவன்

வண்ணப்படம் : ஸ்ரீராம் ராகவன்

## எண்ணிப் பார்க்கலாம் பெண்ணே!

அன்புச் சகோதரிகளே!

பெண் என்றாலே மென்மை என்ற நினைவுதான் வரும். மனதாலும் உடலாலும் மிக மெல்லியவள் பெண். அதனால்தான் அவளை 'மெல்லியலாள்' என்கிறார்கள்.

ஆனால் பெண் பல கடமைகளைச் சுமந்து கொண்டு ஓடி ஆடித் திரிய நேரும் இந்தக் காலத்தில் அந்த மெல்லிய குணங்களெல்லாம் காற்றில் பறந்து கொண்டிருக்கின்றன.

"ஒரே டென்ஷனாயிருக்குப்பா", "டயமேயில்லப்பா", "ஒரு நிமிஷம் ரெஸ்ட் எடுக்க முடியல தெரியுமா!" – இந்த மாதிரி பெண்கள் புலம்புவதைக் கேட்பது சகஜமாகிவிட்டது.

நமக்குண்டான கடமைகளையும், வாழ்க்கை முறைகளையும் மாற்றிக் கொள்ள வழியில்லாதபோது இருக்கும் சூழலில் அமைதியைத் தேட, நம்மைத்தான் நெறிப் படுத்திக் கொள்ள வேண்டும்.

ஒவ்வொரு நாளும் இரவு படுக்கப் போகுமுன் இன்று என்னவெல்லாம் செய்தோம், அவற்றில் எத்தனை தேவையானவை, எத்தனை வீணானவை என்று பட்டியலிட்டுப் பார்த்தாலே எது அவசியம் எது அனாவசியம் என்று தெரிந்துவிடும்.

பல நேரங்களில் சரியாக முன்கூட்டியே திட்டமிடாததால் தான் நமக்கு டென்ஷனும் அலைச்சலுமே ஏற்படுகிறது. அப்போது என்ன மணியாகிறது என்பதைத் தெரிந்து கொள்ள மட்டுமல்ல கடிகாரம், இந்த நேரத்துக்கு நாம் என்ன செய்து கொண்டிருக்க வேண்டும் என்பதை முன் கூட்டியே திட்டமிடுவதற்கும்தான்.

இது ஓரளவுக்கு நடைமுறை டென்ஷனைக் குறைக்கும்.

பெரும்பாலும் சில பெண்கள் பிறருக்காகவே வாழ்கின்றனர். தான், தன் விருப்பு வெறுப்புகள் என்பதற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்க மறக்கின்றனர் அல்லது மறுக்கின்றனர்.

சிலருக்குக் கச்சேரி கேட்கப் பிடிக்கலாம். சிலருக்குக் கவிதை எழுதப் பிடிக்கலாம். சிலருக்கு சும்மா மொட்டை மாடிச் சுவரில் உட்கார்ந்து வேடிக்கை பார்க்கப் பிடிக்கலாம். ஆனால் இந்தத் 'தனக்குப் பிடித்த சமாசாரத்தை', குடும்பத்திற்காக, குடும்பக் கடமைக்காக – பல பெண்கள் விட்டு விடுகின்றனர்.

கேட்டால், "அதெல்லாம் அந்தக் காலம், அம்மா வீட்டில் இருந்தபோது" – என்றோ, "அதுக்கெல்லாம் ஏதுப்பா நேரம். அப்புறம் உள்ள வேலையை யார் செய்யறது?" என்றோ,

"அவருக்கு அதெல்லாம் பிடிக்காதுப்பா" – என்றோ நம்மை சமாதானப் படுத்திக் கொள்கிறோம்.

மனசுக்குள் இருக்கும் இந்த முகத்துக்குக் கொஞ்சம் விடுதலை கொடுத்து சுவாசிக்கவிட்டால், பல சமயங்களில் மனசு லேசாகும் டென்ஷன் குறையும். முயன்று பாருங்களேன்.

சென்ற இதழின் பாவை பக்கங்கள் பற்றிய விமர்சனங்கள் வந்து கொண்டிருக்கின்றன. பெண்கள் பத்திரிகை என்றால் இவை தான் இருக்க வேண்டும் என்ற ஃபார்முலாவுக்கு உட்படாமல், இதை வித்தியாசமாகச் செய்ய விரும்புகிறோம். அதற்கு உங்கள் விருப்பு வெறுப்புகளைத் தெரிந்து கொள்ள விழைகிறோம்.

உங்கள் விமர்சனக் கடிதங்களுக்காகக் காத்திருக்கிறோம்.

நட்புடன்
கிரிஜா ராகவன்



## புதுமையான கோலப் போட்டி

வாசகர்கள் இந்தப் பக்கத்தில் இடம் பிடிக்கக் கோலம் போட்டு அனுப்பலாம். இதுவரை வெளி வராததாக இருக்கவேண்டும். புதுமையாக, சிறந்ததாக உள்ளவை தேர்ந்தெடுத்து வெளியிடப்படும். பரிசு ரூ. 50/-. கோலங்கள் கறுப்பு மையினால் வரையப் பட்டிருக்க வேண்டும்.

# தோளுக்கு மிஞ்சினால் தோழி!



கிரிஜா ராகவன்

"ஷீ ஈஸ் மை டாட்டர்".

"உங்க பொண்ணா, தங்கை மாதிரி இருக்கா. நீங்க சொன்னா தான் தெரியும் உங்க பொண்ணுன்னு".

தன் இளமைத் தோற்றத்திற்கு இப்படி ஒரு பாராட்டா என்பது போல் சிரித்துக் கொள்கிறாள் அம்மா. பல வீடுகளில் இது உண்மைதான்.

ஆனால் தோற்றத்தில் வயது வித்தியாசம் தெரியாமல் இருக்கும் அம்மாவும், பெண்ணும், பழக்கத்தில் தோழியரைப்போல் ஒளிவு மறைவு இல்லாமல் பழகுகிறார்களா? இதுவரை இல்லையென்றால் - இனி அப்படி இருக்க முயலுங்கள்.

பருவ வயது ஒரு பெண்ணுக்கு உடல் ரீதியாகவும், மனத்திலும் பல மாறுதல்கள் வரும் வயது. பல சந்தேகங்களும் பயங்களும் வரும் வயது. பெரும்பாலும் இவைகளைத் தன்னுடன் கூடப் படிக்கும் ஃபிரெண்ட்ஸிடம் தான் பேசித் தீர்ப்பார்கள். அவளும் இவளைப் போல் ஒரு பெண்தானே. அவளுக்கு மட்டும் என்ன தெரியும்.

ஏதோ புத்தகத்தில் படிப்பது, டிவியில் பார்ப்பது போன்றவற்றை வைத்துக் கொண்டு தானே ஏதோ முடிவுக்கு வந்து கொள்கிறார்கள்.

இந்தப் பேச்சுகளைத் தன் அம்மாவுடன் நடத்துவதற்கு ஒரு பெண்ணுக்குத் துணிவு வேண்டும். அந்த அளவு அம்மா அந்தப் பெண்ணிடம் நெருங்கி இருக்க வேண்டும்.

பெரியவளாவதற்குச் சில மாதங்கள் முன்னேயோ, அல்லது ஆனவுடனேயோ அதைப்பற்றிய முழு விவரங்களையும் தனியாக உட்கார்ந்து சொல்லிக் கொடுக்க வேண்டும்.

ஸானிடரி நாப்கின்னைப் பற்றிய விவரங்களிலிருந்து, அதை உபயோகிக்கும் முறையிலிருந்து, வெளியே செல்லும்போது எப்படி முன்னேற்பாடுடன் இருக்க வேண்டும் என்பதிலிருந்து, அதை எப்படி 'டிஸ்போஸ்' செய்வது என்பது வரை எல்லாம் விவரமாகச் சொல்லிக் கொடுக்கப்பட வேண்டும்.

இதற்கு அடுத்த கட்டமாக, பருவ வயதில் ஏற்படும் உடல் வளர்ச்சிகள் பற்றிய விவரங்கள், ஒரு ஆணிடம் ஏற்படக்கூடிய ஈர்ப்பு, ஒரு பெண்ணைத் தன் வசப்படுத்த ஒரு ஆண் உபயோகிக்கக்கூடிய எத்தனங்கள், முறைகள் - இவைகளைப் பற்றியும் ஓர் அம்மா பெண்ணுக்கு எச்சரிக்கை செய்ய வேண்டியது அவசியம்.

கடைசியாக செக்ஸ் அறிவு. இப்போதிருக்கும் கால கட்டத்தில் இளம் பெண்ணுக்கு செக்ஸ் அறிவு ரொம்பவும் அவசியம். அதை ஓர் அம்மா தன் பெண்ணுக்குச் சொல்லிக் கொடுப்பதில் தவறே இல்லை. புத்தகத்தைப் படித்தும், சினிமா பார்த்தும் ரெண்டுங் கெட்டானாகப் புரிந்து கொண்டு, யாரோ ஒரு மூன்றாவது மனிதனின் சாகசத்தால் ஒரு பெண் தன்வசமிழந்து இதைப் பற்றித் தெரிந்து கொள்வதைவிடப் பெற்ற தாய் தன் பெண் வாழ்க்கையின் பாதுகாப்பு கருதி இதை அவளுக்குச் சொல்லித் தருவதில் என்ன வெட்கம்!

ஒரு பெண் படிக்கிறாள், வளர்கிறாள், வேலைக்குப் போகிறாள், பிஸினஸ் பண்ணுகிறாள். இதெல்லாம் இரண்டாம் பட்சம். இந்த வளர்ச்சி அவளுக்கு வரலாம், வராமல் போகலாம்.

ஆனால் எப்படி இருந்தாலும் அவளுக்கு வரவே கூடாத ஒன்று உண்டு. அதுதான் மானமிழப்பது. விவரங்களைச் சரியாகப் புரிந்து கொள்ளாததால் பிஞ்சு வயதில் ஏமாற்றப்படும் பெண்கள் பலர்.

இவர்களைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும் என்று சொல்வோம். கடவுளைப் பார்க்க கோயிலுக்குத்தான் போக வேண்டும் என்றால் "தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை".

தாயே கடவுளாக இருந்து பெண்ணைக் காப்பாற்றி வழி நடத்தலாம்!

---

❒ புதினாக் கீரையைக் கொஞ்சம் பச்சைக் கொத்து மல்லி இஞ்சி உப்புடன் சேர்த்து அரைத்து துவையல் செய்து சாப்பிட்டால் பெண்களுக்கு மாதவிலக்குக் காலத்தில் ஏற்படும் வலி குறையும்.

❒ சுண்டக் காய்ச்சிய பாலில் குங்குமப்பூ கலந்து சாப்பிட்டால் குடல் புண் சுத்தமாக ஆறிவிடும். அதிக மதுப் பழக்கத்திற்கு அடிமையாகிக் குடல் வெந்து புண்ணாகியவர்களுக்கும் இது நல்ல மருந்து.

❒ சில குழந்தைகளுக்கு அடிக்கடி சிரங்கு வரும். 50 கிராம் கொத்துமல்லிக்கீரை, 10 கிராம் வெந்தயம், 5 கிராம் மிளகு இவற்றை எலுமிச்சம் பழச் சாற்றில் அரைத்துச் சிரங்குள்ள இடங்களில் தடவி வந்தால் சிரங்கு குணமாகும்.

❒ வாழைப்பூவை உரித்துக் கொண்டு வந்தால் கடைசியில் சின்ன மொட்டு மிஞ்சும். அதை நசுக்கிச் சாறு எடுத்து அத்துடன் பனங்கற்கண்டு சேர்த்து சாப்பிட்டால், பெண்களுக்கு மாதவிலக்கு சமயத்தில் ஏற்படும் அதிக ரத்தப்போக்கு நிற்கும்.

# இல்லத்தரசிக்கும் இனிய கம்ப்யூட்டர்

கம்ப்யூட்டர்களின் அறிமுகத்தின்போது, இயந்திரம், இதயமுள்ள மனிதனை இல்லாமல் செய்துவிடுமோ என்ற பயம் பரவலாக இருந்து வந்தது. ஆனால் நாளடைவில் பெருகிவந்த கம்ப்யூட்டர் கல்வி நிறுவனங்களாலும், கம்ப்யூட்டரை உபயோகப்படுத்தத் துவங்கிய அலுவலகங்களாலும், இந்த இயந்திரத்தினால் கல்வி வாய்ப்புகளும், வேலை வாய்ப்புகளும் பெருகி, மனித சக்தியின் தேவை அதிகப்படுவதை உணர ஆரம்பித்தனர். இன்று வேலை வாய்ப்புகளை உருவாக்கும் ஒரு தொழிற்சாலையாகவே இருந்து வருகிறது கம்ப்யூட்டர் துறை.

'கம்ப்யூட்டர்' என்றாலே அதனுடன் சம்பந்தப்படுபவர்கள் அதிகம் படித்தவர்களாகவோ, அறிவுஜீவிகளாகவோ இருக்க வேண்டுமோ என்கிற ஐயம்கூடத் தீரும் வகையில் இத் துறையில் கல்வியும், வேலை வாய்ப்பும் அவரவர்களது அடிப்படைக் கல்வித் தகுதிக்கேற்பவும், பொருளாதார சூழ்நிலைக்கேற்பவும் பெறக் கூடியதாக அமைந்து வருகிறது.

**பத்தாம் வகுப்பு பயின்றவர்களும், சுமாரான ஆங்கில அறிவு உடையவர்களும், தட்டெழுத்து மட்டுமே பயின்றவர்களும்கூட ஈடுபடத்தக்க வகையில் இத் துறையில் வேலை வாய்ப்புகள் பெருகி வருகின்றன.**

குறிப்பாகப் பெண்கள், தங்கள் வீடுகளிலேயே இருந்துகொண்டு, குடும்பப் பொறுப்புகளையும் கவனித்துக்கொண்டு குறைந்த முதலீட்டில் சுயமாகச் சம்பாதிக்கும் வகையில் கம்ப்யூட்டரில் வேலை வாய்ப்புகள் உள்ளன.

இக் கட்டுரையின் மூலம் கல்வித் தகுதி குறைந்த பெண்களும், குடும்பப் பொறுப்பு மிகுந்த பெண்களும் சிறிது பயிற்சியும், சிறிய முதலீட்டையும் மூலதனமாகக் கொண்டு பெரிய அளவில் பயன் பெறத் தக்க வகையில் உள்ள கம்ப்யூட்டர் பயிற்சி விவரங்களை அறியலாம்.

கம்ப்யூட்டர் ஆபரேட்டர், டேட்டா எண்ட்டரி ஆபரேட்டர்ஸ் போன்ற வேலை வாய்ப்புகளுக்கு இன்று பெரும்பாலான நிறுவனங்கள் பெண்களை நியமிப்பதில் ஆர்வம் காட்டுகின்றன. பத்தாம் வகுப்பிலிருந்து பட்டம் பயின்றவர்கள் வரை இக் கல்வியைச் சான்றிதழ் அளவிலோ (Certificate Course) டிப்ளமோ அளவிலோ பயின்று உடனடி வேலை வாய்ப்பைப் பெறலாம்.

குடும்பப் பெண்களும்கூட, சுய தொழில் செய்து சம்பாதிக்க உதவுகின்ற மிகப் பரபரப்பாகப் பேசப்படுகின்ற ஒரு துறை DTP எனப்படும் Desk Top Publishing. கம்ப்யூட்டரின் உதவியோடு ஒரு புத்தகத்தை உருவாக்குகின்ற இத்துறை





இன்று மிக அதிக வரவேற்பைப் பெற்று வருகிறது. பத்திரிகைகளும், புத்தகங்களும் பெருகி வரும் இன்றைய நிலையில் இதன் தேவையும் மிக அதிகமாக உள்ளது.

பெண்கள் ஈடுபடத்தக்க மிகச் சிறந்த இந்தத் துறை பற்றிய விளக்கங்களை, சென்னையில் 'கம்ப்யூட்டர் கேம்பஸ்' (Computer Campus) என்ற பெயரில் DTP பயிற்சி வகுப்புகளை நடத்தி, DTP Centre களையும் அமைக்க உதவும் திருமதி சசிகலா கண்ணன் அவர்களைச் சந்தித்து பெற்றோம்.

திருமதி சசிகலா கண்ணன் கூறுகிறார்.

"பிரகாசமான எதிர்காலமுடைய DTP துறைக்கான இந்தப் பயிற்சியை மிகச்சுலபமான முறையில் பெண்கள் பெற்றுவிட முடிவது இதன் சிறப்பு. இதுவரை 600க்கும் மேற்பட்ட மாணவ மாணவிகள் இப் பயிற்சியை இங்கு பயின்று வேலை வாய்ப்புகளைப்பெற்றதோடு பலர் சொந்தமாகவே DTP சென்டர்கள் தொடங்கி நல்ல முறையில் பயன் பெற்று வருகிறார்கள்.

'ENTREPRENEUR' கோர்ஸ் எனப்படும் இந்தப் பயிற்சி மூன்று மாதங்களுக்குக் கொடுக்கப்பட்டு, அதன்பிறகு தொழில் தொடங்க விரும்புவோருக்கு, ஒரு DTP சென்டருக்குத் தேவையான அனைத்தும் பெற்றுக் கொடுத்து, அவர்கள் தங்களை நிலைநிறுத்திக் கொள்ளும் வரை ஆர்டர்களும் பெற உதவி செய்து, மேலும் தேவைப்படும் தொழில் நுட்ப உதவிகளும் வழங்குகிறோம். இதற்குத் தேவைப்படும் பண உதவிக்கும் இயன்ற அளவு உதவி வருகிறோம். ஒரு லட்ச ரூபாய் முதலீட்டில் மாதம் குறைந்தபட்சமாக 5000 ரூபாய் சம்பாதிக்கும் அளவுக்கு நிச்சயமாகப்பயன்படும் இத் துறைக்கும், இதில் ஈடுபட்டுள்ளவர்களுக்கும் மிகச் சிறந்த எதிர்காலமிருக்கிறது."

மூன்றே மாதங்கள் DTP பயிற்சி பெற்று, உடனடியாகவே சொந்தமாகவும் DTP சென்டர்களை அமைத்துச் சிறப்பாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கும் காலக்ஸி கம்ப்யூட்டர் சிஸ்டத்தின் உரிமையாளர் திருமதி விஜயாவும், உரிமையாளர் செல்வி. கீதாவும் இத் துறை பற்றிக் கூறுவது!

**திருமதி விஜயா :** எம்.ஏ. வரலாறு படித்து விட்டு, இந்த DTP கோர்ஸ் பற்றிய விளம்பரம் கண்டு, கம்ப்யூட்டர் துறைக்கு இப்போதுள்ள வரவேற்பை மனத்தில் கொண்டு பயிலத் தொடங்கினேன். தொடங்கியபோது இது பற்றி 'அ'ன்னா 'ஆ'வன்னா கூடத் தெரியாது. மூன்று மாதங்கள்தான் பயிற்சி. அடுத்து இரு மாதங்களுக்குப் பிறகு ஒரு லட்ச ரூபாய் முதலீட்டில் திரு கண்ணன் திருமதி சசிகலா கண்ணன் ஆகியோரது உதவியுடன் 'காலக்ஸி கம்ப்யூட்டர் சிஸ்டத்தை' ஆரம்பித்தேன். வீட்டையும் பார்த்துக் கொண்டு வீட்டிற்குள்ளேயே மதிப்புடன் சம்பாதிக்க முடிவது



சிறப்பாக இருக்கிறது. ஆரம்பத்தில் ஆர்டர்கள்பெறக்கொஞ்சம் சிரமமாக இருந்த போதிலும் கம்ப்யூட்டர் கேம்பஸ் உதவியுடன் வெகு விரைவிலேயே Stabilize ஆக முடிந்தது. மாதம் ரூ. 3000-4000 வரை பெற முடிகின்ற இத் தொழிலை மேலும் விரிவுபடுத்துவதும், நான் பெற்ற இந்த வாய்ப்பை என்னைத் தேடி வருபவருக்குக் கற்றுக் கொடுப்பதுமே எதிர்கால நோக்கமாகும்."

**செல்வி கீதா :** பூனாவில் அட்வர்டைசிங் & பப்ளிக்ரிலேஷன்ஸில் பட்ட மேல் நிலை டிப்ளமோ முடித்துவிட்டு DTP பயிற்சி பெற ஆரம்பித்தேன். அட்வர்டைசிங்கில் இருக்கும்போதே இத் துறை பற்றிய ஆர்வம் இருந்ததாலும், இதற்குக் காணப்படும் வரவேற்பினாலும், இதையே ஏன் சுய தொழிலாகச் செய்யக் கூடாது என்று நினைத்துப்பயிற்சி பெற்று சிறிய அளவில் ரூ. 50,000 மட்டுமே மூலதனமாகக் கொண்டு வீட்டளவிலேயே ஒரு DTP சென்டருக்குத் தேவையான அடிப்படை இயந்திரங்களை மட்டும் வைத்துக்



கொண்டு செயல்பட்டு வருகிறேன். கம்ப்யூட்டர் காம்பஸில் திரு. கண்ணன் இந்த சென்டரின் உருவாக்கத்திற்கும், என் செயல்பாடுகளுக்கும் மிகவும் உதவியாக இருப்பதை நான் குறிப்பிட்டாக வேண்டும். நிச்சயமாகப் பெண்கள் யார் தயவையும் எதிர்பார்க்காமல் வீட்டளவிலேயே சிறப்பாகவும், கௌரவமாகவும் பயன்பெறக் கூடிய ஒரு துறை இந்த DTF துறை."

டி.டி.பி. கோர்ஸ் நடத்தி வரும் திருமதி சசிகலா கண்ணன் கூடத் திருமணத்திற்கு முன்பு வரை DTP என்றால் வீசை என்ன விலை? என்று கேட்டுக் கொண்டிருந்தவர்தான். கம்ப்யூட்டர் காம்பஸ் கண்ணனுக்கு வாழ்க்கைத் துணையானபிறகு மூன்றே நாள்களில் இரவு பகல் பாராமல் பயின்று இன்று பெண்கள் வகுப்புகளை நடத்தும் அளவிற்கு உயர்ந்திருப்பதோடு, ஒரு நிறுவனத்தை நடத்திச் செல்லும் அளவிற்கும் உயர்ந்திருக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

**ஷ்யாமா**

# கன்னிப் பெண்களுக்கு மார்பகப் புற்றுநோய் வருமா?



☆ தங்காபால் வசந்தகுமார்

நாகரிகம் என்ற பெயரில் நல்ல விஷயங்களைக் கோட்டை விட்டு - கோமாளித்தனத்தின் கொம்புக்குப் போய்விட்ட நாடுகளிலும், இந்தியா போன்ற வளர்ந்துவரும் (?) நாடுகளிலும் 'மார்பகப் புற்றுநோய்' அதிகரித்துள்ளது. இக் கொடிய நோய் பற்றிய விழிப்புணர்ச்சி ஏற்படுவது இக் காலகட்டத்திற்கு மிக அவசியமானது. மார்பகப் புற்றுநோய் இருபாலருக்கும் வரக்கூடியது என்றாலும், பெண்களையே அது அதிக அளவில் தாக்கிக் கொண்டுள்ளது. இந்த நோயைப் பற்றிய பல சந்தேகங்களை, சென்னை தியாகராய நகரில் இருக்கும் பெண் மருத்துவர் திருமதி. ஜே. தங்காபால் வசந்தகுமார் இங்கே விளக்குகிறார்.

**மார்பகப் புற்று நோய் வந்துள்ளதை எப்படித் தெரிந்து கொள்வது?**

மார்பகத்தில் கட்டி போலத் தோன்றும். மார்பகங்களைக் கைகளால் நெருடிப் பார்த்து இதைத் தெரிந்து கொள்ளலாம். மார்பகத்தில் இவ்வாறு ஏற்படும் கட்டிகளினால் சிறிதுகூட வலி இருக்காது. அது மட்டுமின்றி காம்புகளின் வழியே இரத்தம்கூட வெளிப்படலாம். காம்புகள் உள் இழுக்கப்பட்டும் இருக்கலாம். இவையெல்லாம் நோயின் அறிகுறிகள். எல்லாப் பெண்களுமே ... வயதிற்குப் பின் தாங்களாகவே ...ச் சோதனையைச் செய்து பார்த்துக் கொள்ள வேண்டும்.

**எந்த வயதில் இந்நோய் ஏற்படும்?**

பெரும்பாலும் 35 இல் இருந்து 50க்குள்ளும், 65க்குப் பிறகும் வரலாம்.

**கன்னிப் பெண்களுக்கு இந்த நோய் வருமா?**

கல்யாணமாகாமல் நூறு வயது வரை இருந்தால்கூடக் கன்னிப் பெண்தான். இருந்தாலும் 21 வயதிற்கு உட்பட்டக் கன்னிப் பெண்களுக்கு நோய்வர வாய்ப்பில்லை. ஆனால் முதிர்ந்த கன்னிப் பெண்களுக்கும் கல்யாணமே ஆகாத பெண்களுக்கும் வர வாய்ப்புள்ளது.

**பரம்பரை நோயாக வர வாய்ப்பு உள்ளதா?**

ஆம்! நிச்சயமாக உள்ளது. தாய்க்கு வந்திருக்குமேயானால் மகளுக்கும் வரலாம்.

**சாதாரணமாக எத்தகைய சூழ்நிலையில் இருப்போருக்கு இந்நோய் வரும் என்று சொல்ல முடியுமா?**

கதிரியக்கத் தொடர்புள்ள இடங்களில் இருப்போருக்கு வரலாம். பாலூட்டாத தாய்மார்களுக்கு இந்நோய் வர 99 சதவிகித வாய்ப்பு உள்ளது. நீண்ட காலமாகக் கருத்தடை மாத்திரைகளைச் சாப்பிட்டுக் கொண்டிருப்போருக்கும் வரலாம். சமூகத்தில் நலிந்த பிரிவைச் சார்ந்த பெண்களுக்கு இந்நோய் வரும் வாய்ப்பு - மேல் தட்டுப் பெண்களைவிட மிகக் குறைவு என்றுகூடச் சொல்லலாம்.

**அதற்குக் காரணம் என்ன?**

நலிந்த பிரிவைச் சேர்ந்த பெண்கள் தங்கள் பிள்ளைகளுக்குத் தாய் பாலூட்டுவோராக இருக்கின்றனர். மேல் தட்டுப் பெண்களோ தம் பிள்ளைகளுக்குப் புட்டிப்பால்தான் கொடுக்கின்றனர். பாலூட்டினால் தங்கள் மேனி எழிலும், கவர்ச்சியும் குறைந்துவிடும் என்ற தவறான பிற்போக்கான எண்ணமே அதற்குக் காரணம்.

**அப்படியானால் பாலூட்டும் பெண்களுக்கு மார்பகப் புற்றுநோய் வராது இல்லையா?**

அதற்கான சந்தர்ப்பங்கள் மிகக் குறைவுதான்.

**மார்பகப் புற்று நோய்க்கு எவ்வாறான சிகிச்சை செய்து கொள்ள வேண்டும்?**

சில சமயங்களில் முன்னர் கூறிய அறிகுறிகளின் மூலம், மட்டுமே நோயைக் கண்டறிய முடியாத நிலையில், 'மேமோகிராம்' என்னும் நவீன ஆய்வுக் கருவியின் மூலம் நோயைக் கண்டறியலாம். அவ்வாறு கண்டறியப்பட்டு நிச்சயப்படுத்தப்பட்டால், அறுவை சிகிச்சை முறையிலும், அணுக்கதிர் சிகிச்சை முறையிலும், மருந்து, மாத்திரைகள் மூலமும், ஹார்மோன்களைச் சக்தி இழக்கச் செய்வதன் மூலம் நோயைக் கட்டுப்படுத்தலாம். எனினும் மார்பகத்தை அகற்றுவதைத் தவிர வேறு வழி இல்லை. அப்படி மார்பகத்தை அகற்றிக் கொள்வோர் 'ப்ளாஸ்டிக் சர்ஜரி' மூலம் அக்குறையை நிறைவு செய்து கொண்டுவிடலாம்.

**பாலூட்டினால் இந்த வம்பு தும்பெல்லாம் இல்லை! அப்படித்தானே டாக்டர்?**

ஆம்! பாலூட்டுவது தாய் - குழந்தை இருவரது ஆரோக்கியத்தையும் பாதுகாக்கும்.

சந்திப்பு :

**எம். ஏ. வி. ராஜேந்திரன்**



# 'மகாநதி'

## ஒரு விமர்சன அலசல்

**கா**விரிக் கரைப் பகுதியில் வசிக்கும் கதாநாயகன் கமல்ஹாசன், சீவல் கம்பெனி முதலாளி. மனைவியை இழந்தவர். பனிரெண்டு வயது பெண்ணிற்கும், நாலு வயது பையனுக்கும் தகப்பன். மாமியாரும் உடனிருக்கிறார்.

குதூகலமாய் இருக்கும் அந்தக் குடும்பத்திற்கு அயல்நாட்டு மோகம் ஏற்படுகிறது. பெண்ணையும் பையனையும் பெரிய படிப்புப் படிக்க வைக்க ஆசைப்படுகிறார் கமல்ஹாசன். பட்டணத்திற்கு வருகிறார்கள். பணத்தாசை ஏற்பட்டு சீட்டு கம்பெனி தொடங்குகிறார்.

பண ஆசைக்குத் தூபம் போட்ட வி.எம்.சி. ஹனீபா மொத்த பணத்தையும் சுருட்டிக் கொண்டு ஓடி விடுகிறார். அதனால் கமல்ஹாசன் சிறைக்குப் போகிறார்.

மாமியார் இறந்து போகிறார். மகளும் மகனும் பிரிந்து போகிறார்கள். சிறையில் சந்திக்கும் பெரியவர் பூர்ணம் விஸ்வநாதன் தன் மகள் சுகன்யாவை இரண்டாம் தாரமாக்க முடிவு செய்கிறார்.

சிறையில் பல சங்கடங்களைச் சந்திக்கிறார். தண்டனை முடிந்து வெளியில் வரும் கமல்ஹாசன், மகனைக் கழைக்கூத்தாடியிடமிருந்தும், மகளை கல்கத்தா விபசார விடுதியில் இருந்தும் மீட்கிறார். சிறைச் செல்லக் காரணமாக இருந்த வி.எம்.சி. ஹனீபாவையும் மகள் கெட்டுப் போகக் காரணமாக இருந்த மோகன் நடராஜனையும் பழி வாங்குகிறார் (பயங்கரமாக).

மீண்டும் ஜெயிலுக்குச் சென்று ஆயுள் தண்டனை முடிந்து திரும்பி வரும் கமல்ஹாசனை சுகன்யா மணம் முடிக்கிறார்.

இதுதான் கதை.

பணத்தாசையில் வரும் துன்பங்களும், சிறையில் படும் சித்ரவதைகளும் பிரதானமாக்கப்பட்டிருக்கின்றன, 'மகாநதி' படத்தில்.

வன்முறை படம் முழுக்க ஆழமாய் வேரூன்றி இருக்கிறது. (நாட்டில் வன்முறை அதிகமாகியிருப்பதாலா?)

சின்னஞ் சிறுசுகளை விபசாரிகளாக்கும் கொடுமை பட்டவர்த்தனமாக்கப்பட்டுள்ளது. (தெரியாதவர்கள் தெரிந்து கொள்ள வழி.

கமல்ஹாசனின் காதல் முத்திரைகள் இல்லாமல் – கதையில் மொத்த கவனத்தையும் செலுத்தியிருக்கிறார்கள். கதைக்குக் கனம் ஏற்ற நினைத்து கஷ்டத்தை அதிகமாக்கி அடுக்கிக் கொண்டே போயிருக்கிறார்கள்.

சிறையில் கமல்ஹாசன் இருக்கும் நேரத்தில் மகள் பெரியவளாகி விடுகிறாள். விஷயத்தை அறியும் கமல் கம்பிகளுக்கு பின்னால் கலங்குகிற கலக்கம் உன்னதமான உருக்கம்.

பஞ்சாபகேச அய்யராக வந்து படம் முழுக்கப் பிரதிபலிக்கிறார் பூர்ணம் விஸ்வநாதன்.

கொஞ்சமே வந்தாலும் சுகன்யாவும் எஸ்.என்.பார்வதியும் திருப்தியாக நடித்து இருக்கிறார்கள்.

செல்வி ஷோபனாவும், மாஸ்டர் தினேஷும் நல்ல தேர்வு. இளையராஜாவின் இசை நிறைவு.

நல்ல தரமான ஒளிப்பதிவாளராக அறிமுகமாகியுள்ளவர் எம்.எஸ். பிரபு.

கமல்ஹாசனின் அறிவுத் திறன் ஒவ்வொரு காட்சியிலும் தெரிகிறது. ஆனால் அதை வெளிப்படுத்தும் முறை கனமாக இருப்பதால் ரசிகர்கள் புரிந்து கொள்வார்களா என்பது சந்தேகமே.

இயக்கத்தை சந்தானபாரதியும், தயாரிப்பை எஸ்.ஏ. ராஜ்கண்ணுவும் கையாண்டிருந்தாலும் – 'மகாநதி', கமல் படம் என்று மக்களால் பேசப்படுகிற நிலையில் படத்தின் வெற்றியும் தோல்வியும் கமல்ஹாசனின் தலையில் ஏற்றப்பட்டுவிட –

'அமுதசுரபி' இதழின் சார்பாக படம் பார்த்த சிலரிடம் அவர்கள் கருத்துகளைக் கேட்டோம். அவர்கள் சொன்ன கருத்துகள் இதோ :

### சசி அட்வர்டைசிங் மீடியா மானேஜர் திரு. மதுரகவி

கமல்ஹாசன் சிறைச்சாலையை இன்னும் ஒரு கேரக்டர்போல் தந்திருக்கிறார். சிறைச்சாலையின் அவலங்களை இவ்வளவு விரிவாக தமிழ் சினிமாவில் யாரும் சொன்னதில்லை.

மலர்ந்தும் மலராத வயதில் உள்ள மழலைப் பெண்ணை விற்று வியாபாரம் செய்கிறார்கள் என்று சொல்வதை ஜீரணிக்க முடியவில்லை. மொத்தத்தில் ஓர் வித்தியாசமான படம். தமிழ் சினிமாவின் இப்போதைய இயல்பாகி விட்ட 'அளவுக்கு அதிகமான வன்முறை' இதிலும் அதிகம்.



வேடிக்கை மனிதர்களைப்போல வாழ விரும்பாத நேர்மையாளர்களை அல்லது நேர்மையுடன் வாழ விரும்புவோரை ஒரேடியாகப் பயமுறுத்தியிருப்பது பெரிய குறை.

### ஜெயதுர்கா பர்மெனண்ட் பண்ட் லிட் இயக்குநர் திரு. உருத்திரகுமார்

நல்லவர்கள் துன்பப்படுகிறார்கள். ஆனால் கயவர்கள் பசுத்தோல் போர்த்திய புலியாய் சமுதாயத்தில் பெரிய மனிதன் போர்வையில் செல்வாக்குடன் வாழ்கிறார்கள். இது ஏன் இப்படி? என்று புலம்புகிறார் கமல். கங்கையைப் போன்ற இச்சமுதாயம் தீயவர்களால் கூவம் ஆகிப் போகும்



அவலத்தை மாற்ற நல்லவர்கள் நமக்கு ஏன் வம்பு என்று ஒதுங்கிப் போகாமல் அநீதியை எதிர்த்துப் போராட வேண்டும் என்று கருதுறோர். அநீதியை எதிர்க்கும் விதம், முடிவும் சினிமா பாணியாக இருந்தாலும், இது கமலின் முற்றிலும் மாறுபட்ட வித்தியாசமான படமாக அமைந்துள்ளது.

### சுற்றுலா வளர்ச்சித் துறையில் பணிபுரியும் திருமதி விமலா சீனிவாசன்

நேர்மைக்குப் பரிசு - சாதனை. துன்பம்தான் என்ற கருத்தாக கதை அமைந்துள்ளது.

இவ்வாறு இருந்தால் மக்கள் எப்படி நேர்மையாளராக நடக்க விரும்புவார்கள்?

கொலைகாரனாக இருந்தாலும் அவன் ஒரு நேர்மையாளன், நியாயத்திற்காக கொலைகாரனாக மாறுகிறான். அவனை மக்கள் மத்தியில் நிரபராதி என்று தீர்ப்பளித்து இருக்கலாம். மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பல்லவா?

கமல் அவர்களை இரண்டாம் முறையாக சிறைச்சாலைக்குக்



கொண்டு சென்று அவரைத் துன்புறுத்துவது போலீஸ் அதிகாரியின் அராஜகச் செயலை எடுத்துக் காட்டுவதாக அமைந்துள்ளது.

இப் படத்தில் நல்ல பண்பினையும் படிப்பினையும் புகுத்தியிருந்தாலும் நடைமுறையில் ஒத்துக் கொள்ள முடியாத படமாக அமைந்துள்ளது. மொத்தத்தில், படத்தில் சென்டிமெண்ட், எமோஷன், போல்ட்நெஸ் எல்லாமே சிறந்த முறையில் அமைந்துள்ளன.

### நாவலாசிரியர் திரு. புஷ்பா தங்கதுரை

பல சம்பவங்கள் ஆசைகளைக் கலக்குகின்றன. பல மனத்தைக் கலக்குகின்றன. பல சிந்தனையைக் கலக்குகின்றன. ஒரு கனத்த துக்கத்தில் நானும் கமல்ஹாசனுடன் மூழ்கி எழுகிறேன். படத்தில் அவர் நடித்த வாழ்க்கையில்,



நானும் சில பகுதிகள் வாழ்ந்து விட்டேனோ என்ற பயம் எழுகிறது. ஒரு நீள துக்கத்தை இந்தப் படத்தில் சுவாரஸ்யமாக ரசிக்கிறோம்.

### புகைப்பட கலைஞர் யோகா

ஒரு தந்தையின் உணர்வுகளைப் பிரமாதமாகப் பிரதிபலித்து காட்டியிருக்கிறார் இப் படத்தில் கமல். படம் முழுவதும் கதாநாயகன் அனுபவிக்கும் துன்பத்தின் பரிமாணத்தை நாமும் உணர்ந்து அனுபவிக்கும்படியாக தன் இசைக்கோவை திறமையால் நம்மைப் படத்தின் காட்சிகளோடு ஒன்றிவிடச் செய்கிறார் இளையராஜா.

வித்தியாசமான திறமையான படப்பிடிப்பு என்றாலும் இண்டோர் படப்பிடிப்பு என்றாலே லோ லைட்டில்தான் எடுக்க வேண்டும் என்ற பிடிவாதத்தை சற்று தவிர்த்திருக்கலாம்.

ஆனால் திரைக்கதை அமைத்த கமல் படத்தின் மூலம் என்ன சொல்ல வருகிறார் என்பது புரியவில்லை. தனக்கு துரோகம் செய்தவனை தானேதான் தண்டிக்க வேண்டும் என்ற ஜேம்ஸ் பாண்ட் பாணி படங்களின் தியரியை இவரும் வலியுறுத்துவதாகத் தான் தெரிகிறது.



பொழுதுபோக்குக் காட்சிகளும், சிரிப்பு வெடிகளும் படத்தில் இல்லாததால் ஒரு சீரியஸான ஆர்ட் பிலிம் பார்க்கும் உணர்வே நமக்கு இருக்கிறது.

### ஓவியர் சிவகுமார்

இந்தப் படத்தில் ஒளிப்பதிவு, இசையமைப்பு, படத் தொகுப்புப் போன்ற தொழில் நுட்பங்கள் மிகவும் தரமாக அமைந்திருப்பினும் அதிகமாகக் காணப்படும் வன்முறைகள் படம் பார்ப்பவர்களின் மனத்தைப் பாதிக்கின்றது.

தொகுப்பு : நாகராஜகுமார்




# நாணயம்

நேர்மை, நாணயம், உழைப்பு செழிக்கவும்
உங்கள் பொருளாதாரம் கொழிக்கவும்
வழிகாட்டும் புதிய பகுதி.



## தண்ணீரால் ஒரு தாலாட்டு!

பவானி

காற்று, தண்ணீர் போன்ற இயற்கைச் சக்திகளை ஆதாரமாகக் கொண்டு உயிர் காக்கும், உடல் காக்கும் நவீனப் பொருட்களை உற்பத்தி செய்து வருகிறது சென்னையைச் சேர்ந்த 'நெப்ட்டியூன் இன்ஃபிளேடபிள்ஸ்' [Neptiune Inflatables Limited] நிறுவனம்.

1983-இல் பிரதீப் ரங்கனாதன், எஸ்.என். நடராஜன் ஆகிய இரு இளம் தொழிலதிபர்களால் ஆரம்பிக்கப்பட்ட இந்நிறுவனம் ராணுவம், விமானம் மற்றும் கப்பல் துறைகளுக்கு மிக அத்தியாவசியமான உயிர் காக்கும் உபகரணங்களை உற்பத்தி செய்து வந்தது. மேலும் தொழிற்சாலைகளுக்குத் தேவையான திரவங்கள், வாயுப் பொருட்கள், பவுடர் வகைகளை நிரப்புவதற்கான கொள்கலன்களை, சுலபமாக மடக்கி எடுத்துக் கொண்டு போகும் படியான, பி.வி.சி. பிளாஸ்டிக்கினால் தயாரித்து வருகிறது.

தற்போது இந்நிறுவனம் பொது மக்களுக்கும், பயன்படக்கூடிய வகையில் சில பொருட்களைத் [Consumer Products] தயாரிப்பதில் கவனம் செலுத்தி வருகிறது. அவை உடல் ஆரோக்கியத்திற்கான நீர்ப்படுக்கைகளும் [Water Beds] பெண்களும் உபயோகிக்கக் கூடிய கார்களைத் தூக்க உதவும் ஏர் ஜாக்குகளும் [Air Jacks] ஆகும்.

### நீர்ப்படுக்கை :

பல அளவுகளில் உற்பத்தியாகும் இந்த நீர்ப்படுக்கைகள் அழுத்தமான பி.வி.சி. பிளாஸ்டிக்கினால் நீர்க்கசிவு ஏற்பட்டு விடாதவாறும், குழந்தைகள் ஏறி விளையாடினாலும், சேதமாகி விடாதவாறும் தயாரிக்கப்படுகின்றன. முதுகெலும்புக் கோளாறுகளால் அவதிப்படுபவர்களுக்கும், நீண்ட நாட்கள் படுக்கையில் இருக்க வேண்டியவர்களுக்கும் பிரத்யேகமான நீர்ப்படுக்கைகள் தயாரிக்கப்படுகின்றன. Bed Sore எனப்படும் புண் உண்டாவதை அறவே தடுக்கும் இந்தப் படுக்கையை மருத்துவர்களின் ஆலோசனைப்படி பல மருத்துவமனைகள் உபயோகிக்கின்றன. பொதுவாகவே, இதை உபயோகப்படுத்துவதால், உடலின் அழுத்தம் சீராகப் பரவி, உடல் வலி ஏற்படாமல் தடுக்கிறது.



பிரதீப் ரங்கனாதன



நீர்ப்படுக்கை உற்பத்தித்துறை அயல்நாடுகளில் 4 மில்லியன் டாலர் மார்க்கெட்டாகக் கருதப்படுகிறது. கடந்த ஆண்டு மட்டும் 20 மில்லியன் நீர்ப்படுக்கைகள் அயல்நாடுகளில் வாங்கப்பட்டுள்ளன. நெப்டியூன் நிறுவனம் பல வெளிநாடுகளுக்கு இதற்கான ஏற்றுமதி ஆர்டர்களைப் பெற்றுள்ளது.

சிறந்த வரவேற்புள்ள இந்த நீர்ப்படுக்கையை நாம் மடக்கி காற்றுத் தலையணைபோல் பெட்டியில் வைத்து எடுத்துக் கொண்டு போய்விடலாம்.

**ஏர் ஜாக்:**

நெப்டியூன் நிறுவனத்தின் மற்றுமொரு சிறந்த தயாரிப்பு. பெண்களும் கார் ஓட்டிச் செல்லும் இக்காலக் கட்டத்தில் டயர்களை மாற்ற மிகச் சுலபமாகவும், எளிதில் எடுத்துச் செல்லக் கூடியதாகவும் 2 நிமிடங்களுக்குள் காரைத் தூக்க உதவுகிறது இந்தக் கருவி. 1.2 கிலோ எடையில் 'பாலிமரால்' செய்யப்பட்டது இந்த 'ஜாக்.'

20,000 ஜாக்குகளை மலேஷியாவுக்கு ஏற்றுமதி செய்வதற்கான ஆர்டரைப் பெற்றுள்ளது இந் நிறுவனம்.

**இதர பொருட்கள்:**

கற்றலாத் துறையினருக்குத் தேவைப்படும் போட் வகைகள், ராணுவத்திற்குத் தேவைப்படும் உயிர் காக்கும் பொருட்கள் மற்றும் குழந்தைகளுக்கான தாற்காலிக ஸ்விம்மிங் பூல்கள், விளம்பரப் பொருட்கள் போன்ற பல வகையான பொருட்களின் தயாரிப்பில் ஈடுபட்டுள்ளது இந்நிறுவனம்.

TDICI யுடன் [Technology Development and Information Company of India] ஏற்படுத்திக் கொண்டுள்ள தொழில் நுட்பக் கூட்டுறவினால், பல விரிவாக்கத் திட்டங்களை மேற்கொண்டுள்ளது. இத்திட்டங்களுக்காக இந் நிறுவனம் வெகு விரைவிலேயே பொதுப்பங்கு வெளியீட்டில் ஈடுபடவிருக்கிறது.

# நிறுவன நியூஸ்

## மியூச்சுவல் ஃபண்டுகளுக்கு 'செபி' யின் அனுமதி

மியூச்சுவல் ஃபண்டுகள் தாங்கள் அறிமுகப்படுத்தும் யூனிட்டுகளைத் தாங்களே திரும்பி வாங்கிக் கொள்ள 'செபி' அனுமதி வழங்கியுள்ளது. ஆனால், இதைத் தங்களது வெளியீட்டுப் புத்தகத்தில் [Prospectus] விளம்பரப்படுத்தக் கூடாது எனவும் கூறியுள்ளது. ஆனால் சில மியூச்சுவல் ஃபண்டுகளின் கோரிக்கையான, 'குறைந்த பட்சம் 500 யூனிட் வழங்கப்பட வேண்டும்' என்பதை நிராகரித்துள்ளது. மியூச்சுவல் ஃபண்டுகள் சிறு முதலீட்டாளர்களை ஊக்குவிப்பதற்கே என்பதனால், குறைந்த பட்சமாக 100 யூனிட்டுகள் வழங்கப்படுவதுதான் சரி என்றும் கூறியுள்ளது.

## மாடர்ன் சின்டெக்ஸ்

ரூ. 300 கோடி மதிப்பு வாய்ந்த மாடர்ன் குருப்பைச் சேர்ந்த மாடர்ன் சின்டெக்ஸ் 'மாடர்ன் பெட்ரோ ஃபில்ஸ்' எனும் பெயரில் பாலியெஸ்டர் நூலிழைகளைத் தயார் செய்யும் தொழிற்சாலை ஒன்றை நிறுவவுள்ளது.

ஆண்டொன்றுக்கு 52,500 டன்கள் உற்பத்தித் திறன் கொண்ட இதன் செயலாக்கத்திற்குப் பிறகு, இரண்டாண்டுகளில் இந்நிறுவனத்தின் விற்று முதல் ரூ. 1,000 கோடியாக உயரும்.

இத்திட்டத்திற்குத் தேவைப்படும் ரூ. 513 கோடியில் பகுதி மூலதனத்தைப் பெற இந்நிறுவனம் உரிமை மற்றும் பொதுக் கடன் பத்திரங்களை வெளியிடவுள்ளது. ரூ. 280 கோடிக்கு முழுவதும் பங்குகளாக மாறக் கூடிய கடன் பத்திரங்களையும், ரூ. 48 கோடிக்குப்பங்குகளாக மாற்ற இயலாத கடன் பத்திரங்களையும் கொண்டது இவ்வெளியீடு.

1995- அக்டோபர் மாதம் வியாபார உற்பத்தியைத் தொடங்கவிருக்கும் இத்தொழிற்சாலை, குஜராத்திலுள்ள பரோடாவிற்கு அருகே தேசிய நெடுஞ்சாலையில் அமைக்கப்படவுள்ளது.

## பாண்ட்ஸ் இந்தியாவின் புதிய அறிமுகம்.

கோல்டு க்ரீம் மற்றும் வேனிஷிங் க்ரீம்களின் பிரதான உற்பத்தியாளர்களான பாண்ட்ஸ் இந்தியா வெகு விரைவிலேயே சென்ட் வகைகளை அறிமுகப்படுத்தவுள்ளது. யூனிலீவர் குருப்பின் ஒரு பகுதியான பாண்ட்ஸ், யூனிலீவர் குருப்பைச் சேர்ந்த எலிசபெத் ஆர்டன், ஃபாபர்ஜ் கால்வின்' போன்ற உலகப் புகழ் பெற்ற பர்ஃப்யூம் தயாரிப்பாளர்களுடன் கூட்டு சேர்ந்து இம்முயற்சியில் ஈடுபடும் என்று தெரிய வந்துள்ளது. மார்ச் மாதத்திற்குள் இப்புதிய அறிமுகம், சந்தைக்கு வரக்கூடும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

## ஐ.ஓ.சி.யின் ஈரோ வெளியீடு.

இந்தியன் ஆயில் கார்ப்பரேஷன் 150 மில்லியன் டாலர் மதிப்புள்ள பாண்டுகளை அமெரிக்கா அல்லது ஐரோப்பாவில் வெளியிடவிருக்கிறது.

## ரிலையன்ஸ் பெட்ரோலியம்

பொதுமக்களை ஒரு கலக்குக் கலக்கிய ரிலையன்ஸ் பெட்ரோலியம் பங்கு வெளியீடு. 3.2 தடவை கூடுதலாகக் கோரப்பட்டுள்ளது. 37 லட்சம் விண்ணப்பதாரர்களில் 27 லட்சம் பேர்களே வெற்றி பெற்றிருக்கிறார்கள். இதன் மூலம், மிக அதிகமான பங்குதாரர்கள் கொண்ட ஒரு நிறுவனமாக ரிலையன்ஸ் பெட்ரோலியம் பெருமை கொள்கிறது.

# கம்பெனி ஷேர்களில் முதலீடு செய்யலாமா?

எஸ்.இராஜரத்தினம்

பங்கு (ஷேர்) மார்க்கெட்டில் மிக அதிகமாகப் பணம் திரட்டியவர்களைப் பற்றி நாம் கேள்விப்படுவதுண்டு. அதனைப் பார்த்து புதிதாக வெளியிடப்படும் பங்குகளில் முதலீடுசெய்யப்பலருக்கும் புதியதோர் ஆர்வம் ஏற்பட்டிருக்கிறது. அதில் பணம் இழந்து சோர்ந்து போனவர்களைப் பார்த்து அதில் போடும் பணம் சூதாட்டம் என்று பயந்து ஒதுங்குபவர்களும் உண்டு.

ஹர்ஷத் மேத்தா பங்குச் சந்தையில் முனைப்புடன் ஈடுபட்ட காலத்தில் ஷேர் விலைகள் கிடுகிடுவென ஏறின. அவரது லீலைகள் அம்பலமானவுடன் பங்கு மார்க்கெட்டில் ஒரு பெரிய சரிவு ஏற்பட்டது. ஆயினும் அந்தச் சரிவு ஓரளவு தாற்காலிகமாகவே இருந்தது நமது பொருளாதார வலிமைக்கு ஒரு எடுத்துக்காட்டு. பங்குகளின் விலை மறுபடியும் கூடிவருகிறது. ஆயினும் இப்போதுள்ள விலையேற்றம் முன்போல் தராதரமின்றி அல்லாமல் நல்ல நிர்வாகத் திறமையுடன் வாய்ப்புள்ள தொழில்களில் ஈடுபடும் கம்பெனிகளின் பங்குகள் மட்டுமே விலை அதிவேகமாக உயர்கின்றன.

பங்கு மார்க்கெட்டில் பங்குகளை ஒரு முதலீடாக அல்லாமல் அன்றாட வித்தியாசத்தை நம்பி இலாப நோக்கோடு செயல்படும் ஒரு சாராரைக் கட்டுப்படுத்த 'செபி' என்று அழைக்கப்படும் (Securities and Exchange Board of India) வாரியத்தை ஏற்படுத்தி அன்றாட நடவடிக்கைகளைக் கண்காணிப்பதற்கு வகை செய்யப்பட்டுள்ளது. அதன் ஒரு அம்சமாக சமீபத்தில் புதிய வெளியீடுகளில் குறைந்தபட்சம் ரூ.5,000 முதலீடு செய்ய வேண்டுமென்ற கட்டுப்பாடு வந்திருக்கிறது. இது சிறிய (முதலீடுகளுக்கு) முதலீட்டாளர்களுக்கு இடையூறாக இருக்கும் என்று சுட்டிக் காட்டப்படுவதனால் தளர்த்தப்படலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இந்தக் கட்டுப்பாட்டிற்கு அரசு கூறும் காரணம் சிறு முதலீடு செய்வோர் பரஸ்பர நிதிகளில் (Mutual Fund) முதலீடுகள் செய்யலாம் என்பதே. அந்த நிதிகள் மூலம் முதலீடு செய்யப்படும்போது அந்த நிதிதாரர்களின் பங்கு மார்க்கெட் அனுபவமும் ஒரு நிதி, பல கம்பெனிகளில் முதலீடு செய்வதால் விலை ஏற்றத் தாழ்வுகளை சமாளிக்கும் திறனும் அவர்களுக்கு நல்ல உத்தரவாதம் என்பது ஒரு வாதம். ஆயினும் வசதியுள்ளவர்கள் ஒரு சில பங்குகளில் முதலீடு செய்து மிக அதிகப்படியான இலாபத்தை அடையவே விரும்புவர். சமீப காலங்களில் ரிலையன்ஸ் போன்ற நிறுவனங்களில் முதலீடு செய்பவர்கள் அபரிதமான இலாபத்தை அடைந்ததால் அம்மாதியே தாமும் முதலீடு செய்து பெரும் பணம் சம்பாதிப்பதைக் குறிக்கோளாகக் கொள்பவர்கள் பலர் இருக்கின்றனர்.

நமது சேமிப்பின் ஒரு பகுதியைப்பாதுகாப்பான முதலீடுகளில் ஈடுபடுத்த வேண்டும் என்பதில் ஐயமில்லை. ஆனால் ஓரளவு வசதி படைத்தவர்கள் தங்களது வருங்கால பாதுகாப்புக்குப் போதுமான அளவிற்கு சேமிப்பு இருக்கும்போது மீதமுள்ள சேமிப்பைத் துணிவுடன் சில முதலீடுகளில் போட்டு அதனால் நட்டம் ஏற்பட்டாலும்கூட அதனைப் பொருட்படுத்தாது செயல்படும்போது அதிக இலாபத்திற்கு வழி ஏற்படுகிறது. அம்மாதிரி ஆர்வம் உள்ளவர்கள் ஓரளவு கடன் வாங்கியும் முதலீடுகள் செய்யும்போது அதிகமாக முதலீட்டைச் செய்யமுடியும். பேராசையினால் மிக அதிகமாகக் கடன் வாங்கினால் பங்கு மார்க்கெட்டில் சரிவு ஏற்படும்போது அவர்கள் தங்களது பொருள் அனைத்தும் இழக்க நேரிடலாம். தங்களது சக்திக்கு உட்பட்டே பங்கு மார்க்கெட்டில் முதலீடு செய்வது நலம்.

முதலீடுகளில் எது சிறந்தது என்பதை ஆராய்ந்து செயல்பட வேண்டியது மிக அவசியம். இதற்குப் பல பத்திரிகைகள், முதலீடு பற்றிய யோசனைகளை வெளியிடுவதை ஒரு பகுதியாகக் கொண்டிருக்கின்றன.

## பொறுமையுடன் காத்திருக்க வேண்டும்

சில பங்குகளில் முதலீடு செய்த உடனே மிக அதிகப்படியான இலாபம் அடைந்து லட்சாதிபதியாகவோ, கோடீஸ்வரராகவோ ஆக முடியும் என்பது ஒரு மூடநம்பிக்கை. பொருட்களை உற்பத்தி செய்யும் கம்பெனிகளில் முதலீடு செய்வதால் நட்டம் அடைய வாய்ப்புண்டு. ஆயினும் அவைகளை ஆரம்பிக்கும்போது இருக்கும் விலையை விட,தொழில் வெற்றி பெற்றால் அவை பன்மடங்கு விலை உயர்வதுண்டு. ஆனால் அதற்காகச் சில வருடங்கள் காத்திருக்க வேண்டி வரலாம். அதிக இலாபம் அடைய விரும்புவோர் நம்பிக்கை, நாணயமுள்ளவர்களால் வாய்ப்புள்ள தொழில்களை நடத்தும் கம்பெனிகளின் பங்குகளைத் தொடக்கத்தில் வாங்குபவர்கள் சில காலம் பொறுத்திருந்தால் நல்ல பலனை அடைய முடியும்.

## தினசரி ஏற்ற இறக்கம்

பங்கு மார்க்கெட்டில் பங்குகளை வாங்கி விற்பதையே ஒரு சூதாட்டமாகக் கொள்பவர்களுக்கு தினசரி ஏற்ற இறக்கம் ஒரு முக்கிய அம்சம். பங்குகளை வியாபார நோக்கின்றி முதலீடாகச் செய்பவர்கள் இதைப் பற்றி அதிகமாகக் கவலை கொள்ள வேண்டியதில்லை. ஆயினும் விலை மாற்றங்கள், ஓரளவிற்கு நீண்ட கால கட்டத்தில் கவனிக்கப்பட வேண்டிய ஒன்று. வாங்குவதனால் விலை ஏறும்போதும், விற்பதனால் விலை இறங்கும் போதும் அதன் ஆரம்ப கால கட்டத்திலேயே செய்வது ஒரு நல்ல யுக்தி.

## எது நல்ல பங்கு?



ஒரு நல்ல பங்கு எது என்பதைக் கவனிப்பதற்கு மூன்று விதமான கணக்கீடுகள் உள்ளன. இவைகளைப் பற்றித் தெரிந்து கொள்வது அவசியம்.

### 1. விலை வருமான விகிதம்:

50% லாபப் பங்கீடு (டிவிடென்ட்) கொடுக்கும் ஒரு கம்பெனியின் ரூ.100 முகமதிப்புள்ள ஒரு பங்கு விலை 500 ஆக இருந்தால் அது விலை வருமான விகிதம் (P/E) பத்தில் ஒன்று இலாபம் தருகிறது. ஆனால் ரூ.200 விலையில் 25% இலாபம் கொடுக்கும் கம்பெனியின் பங்கு எட்டில் ஒரு பங்காக இலாபத்தைக் கொடுக்கிறது. இதனால் 25% கொடுக்கும் பங்கே சிறந்த முதலீடாக ஆகிறது.

### 2. கால வளர்ச்சி விகிதம்:

ஒரு கம்பெனி கடந்த சில வருடங்களில் அதன் முதலை எந்த அளவிற்குப்பெருக்கியிருக்கிறது என்பது அதன் வளர்ச்சிக்கு ஒரு எடுத்துக்காட்டு. சம்பாதிக்கும் இலாபத்தை இலாபப் பங்கீடாகவே (Dividend) கொடுத்து விட்டால் அதன் முதல் கூடுவது இல்லை. எவ்வளவுக்கு எவ்வளவு கம்பெனியின் ரிசர்வ் கூடுகிறதோ அந்த அளவிற்கு கம்பெனிப் பங்குகளுக்கு மதிப்பு ஏற்படுகிறது. கடந்த கால வளர்ச்சி விகிதம் ஒரு முக்கிய வழிகாட்டி.

### 3 தன் மதிப்பு:

ஒரு கம்பெனியின் பங்குக்கு உள்ள 'தன் மதிப்பு' எவ்வளவு என்பது ஒரு கம்பெனிக்கு உள்ள நிகரச் சொத்தின் மதிப்பை (கடன்களைக் கழித்து மீதமுள்ள சொத்துக்கள்) ஒரு பங்குக்கு இவ்வளவு என்ற விகிதத்தில் அளவு எடுத்துப் பார்த்தால், அதன் உண்மையான மதிப்பு ஓரளவு தெரியும். ரூ.1 கோடி முதலுள்ள ஒரு கம்பெனியில் முகமதிப்பு (Face Value) ரூ.100 உள்ள ஒரு பங்கு ரூ.150க்கு விற்று, அந்தக் கம்பெனியின் நிகரச் சொத்து ஒரு கோடி இருபது இலட்சமாக இருந்தால் அது ஒரு பங்கின் மதிப்பு ரூ.120 தான் ஆகிறது. அப்போது அதன் விலை ரூ.150 என்றால் அந்த விலை அதன் சுய மதிப்பைவிட அதிகமாக இருப்பதால், அதனைத் தக்க விலையாகக் கொள்ள முடியாது. மார்க்கெட் விலை அதன் மதிப்பை விட எவ்வளவுக்கெவ்வளவு குறைவாக இருக்கிறதோ இந்த அளவிற்கு அது வாங்க வேண்டிய ஒரு பங்காக ஆகும்.

### வேறு சில குறியீடுகள் :

மேற்கூறியவைகளைத் தவிர சொந்த முதல் – கடன் விகிதம், அசையா மற்றும் அசையும் சொத்து விகிதம். சொந்த முதல் – அசையாச் சொத்து விகிதம், சரக்கு இருப்பு – விற்பனை விகிதம், இந்திய மார்க்கெட்டில் கம்பெனியின் உற்பத்திக்கு உள்ள விகிதம், தற்போதுள்ள ஏற்றுமதி, அதற்கு வருங்கால வாய்ப்பு, அரசாங்கத்தின் தொழில் கொள்கையில் அதற்குள்ள இடம். நடத்துவோரின் நாணயம், அறிவுத் திறன் ஆகிய பல காரங்ணகளைக் கொண்டு எந்தப் பங்குகளை வாங்கலாம் என்பதை முடிவு செய்தல் ஒரு அறிவியல் நோக்கு.

### கவனிக்க வேண்டிய நடைமுறைகள் :

அத்துடன் பங்குகளை யார் மூலம் வாங்குகிறோம், அதனை எவ்வாறு நம் பெயருக்கு மாற்ற வேண்டும், அதை விற்பனை செய்யும்போது நாம் எடுத்துக் கொள்ள வேண்டிய பாதுகாப்புகள், நேரடியாக, புதிய வெளியீடுகளை வாங்கலாமா? அல்லது தரகர்கள் மூலம் பழைய வெளியீடுகளை வாங்கலாமா? என்பவைகளை யோசித்துச் செய்வது நலம். அதிகமாக பிரிமியத்துடன் வெளிவரும் வெளியீடுகளை வாங்கும்போது அந்தப் பிரிமியம் உகந்தததுதானா? . என்பதைக் கவனித்து வாங்க வேண்டும்.

பங்கு மார்க்கெட்டில் போலிப் பங்குகள் சில உலவுகின்றன. விற்பவருக்கு உரிமை இல்லாது இருக்கலாம். அல்லது டெலிவரி கிடைப்பதில் தாமதமாகலாம். இதனாலேயே புரோக்கர்களைத் தேர்ந்தெடுப்பதில் கவனம் தேவை. மார்க்கெட்டில் பங்குகள் வாங்கும்போது, வாங்கியவுடன் தாமதமின்றிப் பெயர் மாற்றம் செய்து கொள்ள வேண்டும்.

பங்குதாரர்கள் வருடாந்தரக் கூட்டங்களில் பங்கேற்பது ஒரு நல்லபடிப்பினை.கம்பெனியைப் பற்றியும், அதன் நடத்துனர்களைப் பற்றியும் தெரிந்து கொள்ள அது ஒரு நல்ல வாய்ப்பு. இதனாலேயே உள்ளூர் பங்குகளை வாங்குவது உசிதம். வாங்கிய பங்குகளை அப்படியே வைத்து இருப்பதை விட நல்ல விலையாக இருந்தால் விற்பதும் ஒரு யுக்தியே. விலை குறைய ஆரம்பிக்கும்போது நட்டமானாலும் அதனை விற்பது, எடுக்க வேண்டிய ஒரு நடவடிக்கை. வாங்குவதில் எவ்வளவு கவனம் செலுத்துகிறோமோ அதே மாதிரி விற்பதிலும் செலுத்த வேண்டும்.

கம்பெனிப் பங்குகளில் முதலீடு செய்வதன் மூலம், நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் நாம் பங்கெடுக்கிறோம். எனவே, கம்பெனிப் பங்குகளில் வருமானத்தின் ஒரு பகுதியை முதலீடு செய்வது ஒரு முதலீட்டுத் திட்டம் என்பது மட்டுமல்லாது பொருளாதார வளர்ச்சிக்கும் உறுதுணையாகும். பங்கு மார்க்கெட் சமீப காலத்தில் புத்துயிர் பெற்றதற்கு சிறு முதலீட்டார்களுக்கு ஒரு பெரும் பங்கு உண்டு என்பது நாடறிந்த உண்மை.

எனவே கம்பெனி ஷேர்களில் தாராளமாக தற்போது முதலீடு செய்யலாம். ●

# வேண்டுமா விடுமுறை இல்லம்?

பணத்தை முதலீடு செய்வதற்கு இப்போது பல வகையான திட்டங்கள், பல துறைகளிலும் அறிமுகம் செய்யப்பட்டுள்ளன சமீபகாலமாக மிகவும் பரபரப்பாகப் பேசப்படும் முதலீடு 'டைம் ஷேர்' முதலீடு:

## 'டைம்ஷேர்' முதலீடு என்றால் என்ன?

இத்திட்டத்தைப் பல நிறுவனங்கள் அறிமுகப்படுத்தியுள்ளன.

இந்நிறுவனங்கள், ஊட்டி, கொடைக்கானல், ஏற்காடு போன்ற இடங்களில் நவீன வீடுகளைக் கட்டி, அவற்றை ஆண்டு முழுவதும் வாரத்திற்கு ஒருவருக்கு என்ற விதத்தில் சொந்தமாக்குவார்கள். நமக்குச் சாதகமான ஏழு நாட்களை நாம் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். இதையே 'டைம் ஷேர்' என்கிறார்கள்.

கடந்த மூன்று ஆண்டுகளாக இந்த 'டைம்ஷேர்' வியாபாரத்தில் ஈடுபட்டிருக்கும் ஒரு நிறுவனம் சென்னையைச் சேர்ந்த 'கிளப் இந்தியா ரிசார்ட்ஸ்.'

தற்போது கோடைக்கானலிலும், ஊட்டியிலும், விடுமுறை இல்லங்களை ஏற்படுத்தியுள்ளது. ஒவ்வொரு இல்லமும் சுமார் 800 சதுர அடிப் பரப்பளவில் டி.வி., ஃபிரிட்ஜ் மற்றும் அதி நவீன வசதிகளுடன் சமையலறை உள்படஇரு படுக்கையறை, வரவேற்பறைகளுடன் கூடியதாக அமைக்கப்பட்டிருக்கிறது.

இவை தவிர, குழந்தைகள் காப்பகம், ஹெல்த் கிளப், ஸ்போர்ட்ஸ் கிளப், பிரார்த்தனைக் கூடம், நீச்சல்குளம், டிபார்ட்மெண்டல் ஸ்டோர் என்று அனைத்து வசதிகளும் உண்டு.

கோடைக்கானலில் மட்டுமே, கிளப் இந்தியா நிறுவனம் 100 விடுமுறை இல்லங்களை அமைக்கத் திட்டம் வகுத்துள்ளது. 16 இல்லங்கள் முடிந்து, மேலும் 16 இல்லங்கள் முடிவடையும் தருவாயிலும் உள்ளன.

மேலும் பல புதிய இல்லங்களை, மேலும் சில நகரங்களில் அமைக்கவிருக்கிறது.

ரூ.14,000த்திலிருந்து ரூ.45,000 வரை உள்ள திட்டங்களில், அவரவர்களது பொருளாதாரச் சூழ்நிலைக்கேற்ப முதலீடு செய்து, ஒரு ஆண்டிற்கு 3 முதல் 6 நாட்களுக்குச் சொந்தக்காரர் ஆகலாம். முழுத் தொகையையும் முதலிலேயே செலுத்துபவர்களுக்குச் சில சலுகைகளும் வழங்கப்படுகின்றன. தவணைமுறையிலும் செலுத்த, வட்டி இல்லாத திட்டங்களும் வைத்திருக்கிறார்கள்.

குறிப்பிட்ட நாள்களில் நமக்குப் போக இயலாவிட்டால் நமது நண்பர்களுக்கோ அல்லது வேறு யாருக்கோ வாடகைக்குக் கொடுத்து விடவும் முடியும். இதற்கு நிறுவனமும் உதவி செய்யும்.

ஒரு இல்லத்தில், ஆறு பெரியவர்களும், 2 சிறியவர்களும் இருக்க முடியும்.

மேற்கூறிய விவரங்களை நமக்குத் தெரிவித்த 'கிளப் இந்தியா ரிசார்ட்ஸ்' நிறுவன நிர்வாக அதிகாரி திரு.கிருஷ்ணகுமார், இந்நிறுவனத்தின் தனித்தன்மையாகக் குறிப்பிட்டது, கூடுதல் நவீன வசதிகளையும், விடுமுறை இல்லங்கள் அமைக்கப்பட்டுள்ள அமைதியான இடங்களையும் தான்!

இந்நிறுவனம், இத்திட்டத்தில் முதலீடு செய்பவர்களை அறிமுகப்படுத்துபவருக்கும் சிறப்புப் பரிசுகளைத் தருகிறது!

ஆரவாரங்களுக்கிடையேயும், முன்பின் தெரியாத மனிதர்களுக்கிடையும், இடம் கிடைக்கும் ஏதோ ஒரு ஹோட்டலில் ஏனோ தானோ என்று தங்கி சுற்றுப்பயண மகிழ்ச்சியைக் கெடுத்துக் கொள்ளாமல், சொந்த வீட்டில் தங்குவது போல், பிரச்னைகளின்றி, சகல வசதிகளுடன் நிம்மதியாக விடுமுறையைக் கழிக்க உதவுகிறது, இத்திட்டம்.

'டைம் ஷேர்' திட்டம் இந்தியாவில் பரபரப்பாகப் பேசப்பட்டு வருவதோடு வரவேற்பும் பெற்று வருகிறது.





கிருஷ்ணகுமார்

# வளரும் தமிழகம் :

# சிமெண்ட் தயாரிப்புத் துறை

உலக அரங்கில் சிமெண்ட் உற்பத்தியைப் பொறுத்தவரை, சைனா, ஜப்பான், அமெரிக்காவிற்கு அடுத்த நான்காவது இடம் நமது இந்தியாவிற்கே. ஆனால் தமிழ்நாட்டில் தயாரிக்கப்படும் சிமெண்டின் அளவு நாட்டின் மொத்த உற்பத்தியில் சுமார் 7.8 சதவிகிதம் மட்டுமே. இதற்கு முக்கிய காரணம் சிமெண்ட் தயாரிப்பிற்குத் தேவையான நிலக்கரி கிடைப்பதிலும், தொடர்ச்சியாகக் கிடைக்க வேண்டிய மின்சாரம் கிடைப்பதிலும் பிரச்னை இருப்பதே ஆகும். தங்களுக்குத் தேவையான நிலக்கரியை மிக அதிகமான விலையில் வெளிமார்க்கெட்டில் வாங்கி வருகின்றன. தமிழ்நாட்டைச் சேர்ந்த சிமெண்ட் தயாரிப்பு நிறுவனங்கள். 1994-95ல் தமிழ்நாட்டின் மொத்த சிமெண்ட் தேவை 41.49 லட்சம் டன்னாக இருக்கும் என்று கணிக்கப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டில் அரசு சார்பாகத் துவங்கப்பட்டு இயங்கும் சிமெண்ட் நிறுவனங்கள் மிகக் குறைவு. தனியார் துறையினரால் துவங்கப்பட்டு இயங்கும் நிறுவனங்களே அதிகம். இவற்றைப் பற்றிய விவரங்களைக் கீழ்வரும் பட்டியல் தெளிவாக்கும்.

| | நிறுவனத்தின் பெயர் | தயாரிப்பு கொள்ளவு (1992ல் -மெட்ரிக் டன்னில்) | மொத்த உற்பத்தி | உற்பத்திக் கொள்ளளவு சதவிகிதம் |
|---|---|---|---|---|
| 1. | ஏ.சி.சி (மதுக்கரை) (அசோசியேட் சிமெண்ட் கம்பெனி) | 3,86,000 | 4,50,000 | 116,58% |
| 2. | இந்தியா சிமெண்ட்ஸ் (சங்கர் நகர், சங்கரிதுர்க்) | 2,024,991 | 1,62,3693 | 80.18% |
| 3. | தமிழ்நாடு சிமெண்ட்ஸ் (ஆலங்குளம், அரியலூர்.) | 6,75,000 | 5,03,895 | 74.65% |
| 4. | மதராஸ் சிமெண்ட்ஸ் | 9,51,750 | 9,14,409 | .96.08% |
| 5. | செட்டிநாடு சிமெண்ட்ஸ் | 4,50,000 | 5,43,781 | 120.83% |
| 6. | டால்மியா சிமெண்ட்ஸ் | 3,93,750 | 5,45,738 | 138.60% |

மேலும் தெரிந்துகொள்ள வேண்டிய செய்திகள் :

- ★ இந்தியாவில் சிமெண்ட் உற்பத்தியில் முன்னணி வகிக்கும் நிறுவனமான ஏ.சி.சியின் ஒரு பிரிவு மட்டுமே இங்கு இயங்கி வருவதையும்,
- ★ ஏ.சி.சி., செட்டிநாடு சிமெண்ட்ஸ் மற்றும் டால்மியா சிமெண்ட் ஆகியவை 100 சதவிகிதத்திற்கும் அதிகமான கொள்ளளவில் இயங்கி வருவதையும் காணலாம்.
- ★ இவை தவிர, அரசால் துவங்கப்பட்ட சிமெண்ட் தொழிற்சாலைகள் இரண்டு இடங்களில் இயங்கி வருவதையும் தெரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் உற்பத்திக் கொள்ளளவைப் பொறுத்தமட்டில், இவை நூறு சதவிகிதத்திற்கும் குறைவாகவே சிமெண்ட் தயாரித்து வருகின்றன.
- ★ செட்டிநாடு சிமெண்ட், பிரபல தொழிலதிபர் டாக்டர் திரு.எம்.ஏ.எம். இராமசாமி அவர்களால் துவக்கப்பட்டு நிர்வகிக்கப்பட்டு வருகிறது. இந்தியா சிமெண்ட்ஸ், தொழிலதிபர் திரு.என்.சங்கர் அவர்களால் நிர்வகிக்கப்பட்டு வருகிறது. மதராஸ் சிமெண்ட்ஸ், திரு.பி.ஆர். இராமசுப்ரமணிய ராஜா அவர்களின் தலைமையில் இயங்குகிறது. இந்தியா சிமெண்ட்ஸ் 1946லும், மதராஸ் சிமெண்ட்ஸ் 1957லும், செட்டிநாடு சிமெண்ட்ஸ் 1962லும் ஸ்தாபிக்கப்பட்டவை. தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்களால் துவக்கப்பட்டு வெற்றிகரமாக இயங்குபவை இம்மூன்று நிறுவனங்களும். டால்மியா சிமெண்ட் 1951ல் ஸ்தாபிக்கப்பட்டது. அண்டை நாடுகளுக்கு சிமெண்ட் ஏற்றுமதி செய்யும் வண்ணம் பிரமிக்கத்தக்க வளர்ச்சியடைந்துள்ளது. பிரபல டால்மியா குரூப்பைச் சேர்ந்தது.

அரசால் துவங்கப்பட்டவை சுமாராக இயங்கி வருகின்றன என்றே கூறலாம்.

ஆக, சிமெண்ட் உற்பத்தியில் தமிழ்நாடு தன்னிறைவு அடையவில்லை. மேற்கூறிய பெரிய அளவு சிமெண்ட் தயாரிக்கும் தொழிற்சாலைகள் தவிர, தமிழ்நாட்டில் 75000 மெட்ரிக் டன் சிமெண்ட் தயாரிக்கும் மூன்று சிறு தொழிற்சாலைகள் இயங்கி வருகின்றன. வரும் ஆண்டுகளில் சுமார் 502000 மெட்ரிக் டன்

சிமெண்ட் தயாரிக்கும் பன்னிரண்டு புதிய சிறு சிமெண்ட் தொழிற்சாலைகள் நிறுவப்படக்கூடும் என்று திட்டமிடப்பட்டுள்ளது.

சாலைகளைக் கூட கான்க்ரீட் சாலைகளாக்கவும் பாலங்களைக் கட்டவும், தொழிற்சாலைகள், வீடுகள், அலுவலகங்கள், மருத்துவமனைகள் என்ற கட்டுமானப் பணிகள் ஏராளமாக தமிழ் நாட்டிலும் நிறைந்து காணப்பட, முப்பது வருடங்களுக்கு முன்னர் பிரபல தொழிலதிபர்களால் துவக்கப்பட்ட தொழிற்சாலைகள் தவிர, வேறு இன்னமும் துவங்கப்படவில்லை என்பது வருத்தத்திற்குரியதே.

1992-93ல் தமிழ்நாட்டைச் சேர்ந்த தனியார் துறை சிமெண்ட் தயாரிப்பு நிறுவனங்களின் செயல்பாட்டைப் பற்றிக் காண்போம்.

| | நிறுவனத்தின் பெயர் | பங்கு மூலதனம் | 31.3.93 முடிய விற்பனை | நிகர லாபம் | டிவிடண்ட் |
|---|---|---|---|---|---|
| 1. | செட்டிநாடு சிமெண்ட்ஸ் | 4.22 | 134.06 | 12.58 கோடி | 30% |
| 2. | மதராஸ் சிமெண்ட்ஸ் | 6.04 | 201.06 | 18.32 | 30% |
| 3. | இந்தியா சிமெண்ட்ஸ் | 24.81 | 477.09 | 14.80 | 25% |
| 4. | டால்மியா சிமெண்ட்ஸ் | 5.74 | 160.16 | 11.54 | 25% |

மேற்கூறிய தொழிற்சாலைகள் துவங்கப்பட்டு பல வருடங்கள் ஆகிவிட்டபடியால், கொள்ளவு விரிவாக்கப்பட்டதுடன் இல்லாமல், அவ்வப்போது நவீன மயமாக்கப்பட்டும் வந்துள்ளது. இந்தியா சிமெண்ட்ஸ் ஆந்திராவிலுள்ள கொரமாண்டல் பெர்டிலைசர்ஸின் சிமெண்ட் பிரிவை விலைக்கு வாங்கியது. மதராஸ் சிமெண்ட்ஸ் ஆந்திராவில் ஜெயந்திபுரத்தில் மற்றொரு பிரிவைத் துவக்கியது. செட்டிநாடு சிமெண்ட்ஸ், அரசின் சிமெண்ட் தொழிற்சாலைகளை ஏற்று நடத்த முன்வந்துள்ளது. நிலக்கரிக்குக் கொடுக்க வேண்டிய உயர் விலையை உத்தேசித்து, சிமெண்ட் தயாரிப்பில் உயர் முறை என்ற ஒன்றை சிக்கனம் கருதி அறிமுகப்படுத்தியுள்ளன இந்நிறுவனங்கள்.

## சாதனைப் படைக்கும் பெண்கள்

இந்தத் தொழில் தான் தொடங்க வேண்டும் என்று முன் கூட்டியே நிர்ணயித்துக் கொண்டு அதற்கேற்ப பயிற்சிகளைப் பெற்று முறையாகச் செயல்பட்டு வெற்றியடைபவர்கள் சிலர்.

படித்த படிப்பிற்கு சம்பந்தமில்லாது, முறையான பயிற்சிகளும் மேற்கொள்ளாது, பரம்பரைத் தொழிலில் ஈடுபட்டு நேரடி அனுபவம் மூலம் படிப்படியாக வெற்றியடைபவர்கள் சிலர்.

இரண்டாவதாகச் சொல்லப்பட்ட பிரிவைச் சேர்ந்தவர் தாம்பரத்திலுள்ள 'ரவி பிளாஸ்டிக்ஸின்' உரிமையாளர் செல்வி நளினி.

சிறிய, பெரிய தொழிற்சாலைகளுக்குத் தேவையான பிளாஸ்டிக் பொருட்களை உற்பத்தி செய்து தரும் பணியை மேற்கொண்டுள்ளது நளினியின் 'ரவி பிளாஸ்டிக்ஸ்.'

நளினியின் முழுமையான, திறமையான ஈடுபாட்டினால், ரவி பிளாஸ்டிக்ஸ் இன்று நான்கு Hand Injection Moulding இயந்திரங்களைக் கொண்டு, பல வகையான பிளாஸ்டிக் பொருட்களைத் தயாரித்து வருகிறது.

சிபானி ஆட்டோமொபைல் உற்பத்தி செய்யும் டால்ஃபின்



கார்களுக்கான Flanges கள், எஸ். & எஸ். நிறுவனத்திற்குத் தேவைப்படும் பிளாஸ்டிக் நைலான் மறைகள் (Plastic Nylon Nuts) விருதுநகரில் உள்ள இண்டியன் டெக்ஸ்டைல் பேப்பர் டியூப் (IIPT) நிறுவனத்திற்குத் தேவைப்படும் டிஃபன்ஸ் வாஷர்கள் (Defence Washers) போன்றவைகள் ரவி பிளாஸ்டிக்ஸின் உற்பத்திப் பொருட்கள்.

நளினி, இந்தியன் வங்கியின், 'நெடா' (New Entrepreners Development Agency) திட்டத்தின் கீழ் கடன் பெற்று, சற்று கூடுதல் வசதிகளுடன் கூடிய இயந்திரங்களை நிறுவி தனது உற்பத்தித் திறனைப் பெருக்கிக் கொண்டுள்ளார்.

நளினியின் அயராத உழைப்பினால் பூச்சிகொல்லி மருந்து பாட்டில்களுக்கான 'பில்ஃபர் ப்ரூஃப் (Pilfer Proof) மூடிகள், மீரா சிகைக்காய் டப்பாவிற்கான மூடிகள், நாயுடுஹால் தயாரிக்கும் பிரசவ பெல்ட்களுக்கான பிளாஸ்டிக் பட்டைகள், பான்ட்ஸ் நிறுவனம் தயாரிக்கும் க்ரீம் பாட்டில்களுக்கான 'இன்னர் பிளக்ஸ்' போன்று பல பிளாஸ்டிக் உபரிப் பொருட்கள் ரவி பிளாஸ்டிக்ஸில் தயாராகின்றன.

"பலத்த போட்டி நிலவும் இந்த் துறையில் நிலைத்து நிற்க, பொருள்களின் தரம், உற்பத்தித் திறன் மூலப் பொருள்களின் உற்பத்தித் தேர்வு ஆகியவைகளில் அதிக கவனம் செலுத்த வேண்டியுள்ளது" என்கிறார் நளினி.

எதிர்காலத் திட்டமாக கன்ஸ்யூமர் பொருட்களான காசட் ஸ்டாண்டு போன்றவைகளைத் தயார் செய்ய உத்தேசித்துள்ள நளினி, இத்துறை அல்லாமல், மேலும் பல துறைகளிலும் ஈடுபட ஆர்வம் கொண்டுள்ளார். ●



✣ சென்னை அம்பத்தூர் ரெட்ஹில்ஸ் சாலையில் உள்ள ஸ்ரீபரத்வாஜ ஆசிரமத்தில், பரம ஹம்ஸ ஸ்ரீமத்புவனேஸ்வரி ஸ்வாமிகள் அருள் தலைமையில் தமிழக கவர்னர் திரு. சென்னா ரெட்டி அவர்கள் தமது துணைவியாருடன் வருகை புரிந்து அங்குள்ள ஸ்படிக லிங்கத்திற்கு ஆராதனை நடத்தினார். நிழ்ச்சிக்கான ஏற்பாட்டினை ஸ்வாமிகளின் புதல்வர் ஸ்ரீபரத்வாஜ் செய்திருந்தார்.

# கோல்டன் ஈகிள் பொங்கல் திருவிழா

14.1.94 மாலை. பி. அண்ட் சி மில்லின் விளையாட்டு மைதானம். வண்ண விளக்குகளின் அணிவகுப்பு. பிரம்மாண்டமான மேடை அமைப்பு. 30 ஆயிரத்துக்கும் மேற்பட்டவர்கள் அமர இருக்கை வசதி. ஆறு இடங்களில் எம்.எம். பிலிம் அளவை திரையிடும் திரைகள். 4 யூமெடிக் காமிராக்கள். 3 கிரேன்களில் படப்பிடிவு. சாம்பிராணி புகை கமழ 4 மணியிலிருந்து வரத் தொடங்கிய கூட்டத்திரள் 6 மணிக்கு மொத்த மைதானத்தையும் ஆக்ரமித்தது. வி.ஐ.பி.க்களை வரவேற்று அமர வைத்தனர் வி.வி.ஐ.பிக்கள். பொங்கல் திருவிழாவை கோல்டன் ஈகிள் கோலாகலமாகக் கொண்டாடத் தொடங்கியது.

6.15க்கு மோகன் பிரேவெரியர்ஸ் அண்ட் டிஸ்டிலரீஸ் லிமிடெட்டின் தலைவர் பிரிக்கேட்டியர் டாக்டர் கபில் மோகன் குத்துவிளக்கேற்றி விழாவை ஆரம்பித்து வைத்தார். நிகழ்ச்சியை திருமதி மஞ்சுளா விஜயகுமார் தொகுத்து வழங்கினார்.

கங்கை அமரன் குழுவினரின் இன்னிசையில் எஸ்.பி. பாலசுப்பிரமண்யம், மலேசியா வாசுதேவன், ஜெயச்சந்திரன், மனோ, தீபன் சக்ரவர்த்தி, சித்ரா, சிந்து ஆகியோர் சூப்பர் ஹிட் பாடல்களைப் பாடினர்.

இடையிடையே ரூபிணியின் குச்சிபுடி, சினிமா பாடல் காட்சிகளில் வரும் புகை மண்டலத்துள் 'ஆசை அதிகம் வைச்சு' பாடலுக்கு ரோகிணியின் ஆட்டம். மனோரமா 'டில்லிக்கு ராஜானாலும்' பாடலை ஆடி பாட - 'உசிலம்பட்டி பெண் குட்டி' பாட்டுக்கு பிரிதிவிராஜன், ஷர்மிலியின் அசைவுகள். சின்னி ஜெயந்தின் மிமிக்ரி.

'கல்நாயக்' படத்தின் சோளிக் குள்ளே என்ன இருக்கு பாடலுக்கு விசித்ராவின் குலுக்கல். குட்டி மைக்கேல் ஜாக்ஸனாக பேபி ஷாமிலி. மூன்றாம் பிறை பாடலுக்கு பொன் மேனியாக உடலை வளைத்தவர் சில்க் ஸ்மிதா. 'வீர பாண்டிக் கோட்டையிலே' பாடலுக்கு ஆடியவர் அஞ்சு. ஜி.கே.யின் அரங்க பிரமிப்பும், சம்பத் ராஜ் குழுவினரின் நாட்டிய அசைவுகளும் நேரம் பத்தை செல்லமாக விழுங்கிக் கொண்டிருந்தது.

அறிவித்திருந்த பரிசுப் போட்டியில் எம்.ஏ. சிங்காரவேலு கோவா செல்லும் வாய்ப்பையும், சையத் ரஹ்மான் காட்மண்ட் செல்லும் வாய்ப்பையும், சிங்கப்பூர் செல்லும் வாய்ப்பை திருமதி ரமாவும் பெற்றனர்.

இரவு பத்து மணிக்கு மேல் தொடங்கிய வாண வேடிக்கை கனவிலும் வராத காட்சிகளைத் தர - நடந்ததை விவரிக்க முடியாத அளவுக்கு 'பொங்கல் திருவிழா'வை அசத்தி முடித்தது. கோல்டன் ஈகிள்.

— நாகராஜகுமார்

## வண்ணத்தில்......

படங்கள் : யோகா

குத்துவிளக்கேற்றி விழாவைத் தொடங்கி வைக்கிறார் டாக்டர் கபில் மோகன்.

'டில்லிக்கு ராஜானாலும்' - மனோரமா.

மைக்கேல் ஜாக்சனாக பேபி ஷாம்லி.

சோளிக்குள்ளே பாடலுக்கு விசித்ரா.

குச்சிப்புடி நடனத்தில் ரூபிணி.

ஆசை அதிகம் வைச்சு' - ரோகிணியின் நடனம்.

பொன்மேனியாக வளைந்தவர் - சில்க்.

கோல்டன் ஈகிள் உருவத்தில் ஒரு நடனம்.



★ பவானியில் அமைந்துள்ள சங்கமேஸ்வரர் ஆலயம்



★ திரு இளவரசன்
(மானேஜிங் பார்ட்னர் வீணா டெக்ஸ்டைல்ஸ்)

# ஒலி இழை நாதத்திற்கு வீணை! நூல் இழை துணிக்கு வீணா டெக்ஸ்டைல்ஸ்!

தமிழ் நாட்டின் வர்த்தகச் சிறப்பு மிக்க ஈரோட்டிலிருந்து, கம்பளத்திற்குப் பெயர் பெற்ற பவானியில் உள்ள பவானி ஆறும், காவிரியும் சேரும் இடத்தில் அமைந்திருக்கும் சங்கமேஸ்வரர் ஆலயம் அருகே உள்ள மேம் பாலத்தைக் கடந்து இரு கிலோ மீட்டர் சென்றால், குமார பாளையத்தில் வீணா டெக்ஸ்டைல்ஸ் அமைந்துள்ளது.

முதலில் குடும்பத் தொழிலாக SSM குரூப்பின் 'வீணா டெக்ஸ் டைல்ஸ்' 1968இல் 6 லட்ச ரூபாய் முலதனத்தில் ஆரம்பிக்கப்பட்டது. 1986இல் லிமிடெட் கம்பெனியாக மாற்றி அமைக்கப்பட்டு, கணக்கி லிருந்த நிகர லாபங்கள் ரூ. 30 லட்சம் குடும்பத்தவர்களின் பங் குத் தொகையாக மாற்றி அமைக் கப்பட்டது (conversion in book). அதுவே 1992, ஜூலையில் பொதுமக்களுக்கு அறிவிக்கப்பட்ட ரூ. 2.07 கோடிக் கணக்கான மதிப்புள்ள பங்கு களின்போது ரூ 1.4 கோடியாக உயர்ந்தது. பொதுமக்களிட மிருந்து சுமார் 7.6 தடவை கூடுத லாகப் பங்குகள் வந்து மிகச் சிறந்த வெற்றி பெற்றது.

வீணா டெக்ஸ்டைல்ஸின் சிறப்பு இந்தியாவில் மட்டுமின்றி உலகச் சிறப்பு வாய்ந்தது ஆகும். தென்னிந்தியாவிலேயே முதன்மை யான 'எம்பிராய்டரி' துணி தயாரிக் கும் நிறுவனம் வீணா டெக்ஸ் டைல்ஸ் தான். இவ்வகைத் துணி களைத் தயாரிக்க மேற்கு ஜெர்மனி யிலிருந்தும், இத்தாலியிலிருந்தும் இயந்திரங்கள் தருவிக்கப்பட் டுள்ளன. எவ்வகை 'எம்பிராய்டரி' தேவையோ அதற்கான சிறப்பு மிக்க 'coded card' கம்ப்யூட்டர் துணை யுடன் துளைசெய்யப்பட்ட அட்டை வடிவத்திலுள்ளவற்றை இயந் திரத்தில் பொருத்தி அதன்மூலம் இயந்திரம் செயல்படுவதன்

★ துவாலைத் துண்டுகள் தயாரிக்கப்படுகின்றன



★ வீணா டெக்ஸ்டைலஸ்

தயாரிக்கும் துணி வகைகள்





★ தரக்கட்டுப்பாட்டறை

காரணமாக தேவையான 'எம்பிராய்டரி' துணியில் பதிவாகிறது. இழை விட்டுப் போதல், அதிகப்படி நூல் ஆகியவற்றைத் தரக் கட்டுப்பாட்டு அறையில் சரி செய்து வெளிநாட்டிற்கும், உள்ளுருக்கும் தேவையான அளவு விற்பனைக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. இந்த எம்பிராய்டரி பகுதியில் மட்டும் சுமார் 300 தொழிலாளர்கள் வேலை செய்கிறார்கள். பெண்களுக்கும் தையலுக்கும் மிகுந்த பொருத்தமும், ஈடுபாடும் உள்ளதால் கூடுமான வரை அதன் தரக் கட்டுப்பாட்டு அறையில் பெண்களே வேலை செய்கிறார்கள். இன்றும் 'வீணா டெக்ஸ்டைல்ஸ்' 4 முழ, 8 முழ வேட்டிகளும், பாலியஸ்டர் இழையில் தயாரிக்கப்பட்ட வேட்டிகள், லுங்கிகள், பெண்களுக்கான ரவிக்கைத்துணிகள், எம்பிராய்டரி செய்யப்பட்ட ரவிக்கைத் துணிகள் (ரவிக்கைத்துணிகளில் மட்டும் கேம்பிரி, ஷிபான், 2X2, ஜரி, ஆர்ட் சில்க் மற்றும் பிளெயின் என்று) 6 வகைகளில் தயாரிக்கப்படுகின்றன. பூவாலைத் துண்டுகளும் விரும்பி வாங்கப்படும் துணி வகைகளில் ஒன்று.

உற்பத்தியில் சுமார் 35% தமிழ்நாட்டிலும் 20% ஆந்திர மாநிலத்திலும் 15% கர்நாடகத்திலும் 15% கேரளாவிலும் மீதமுள்ள 15% மற்ற மாநிலங்களிலும் (ஒரிசா, உ.பி., பீகார், டில்லி, கல்கத்தா) விற்பனையாகின்றன. ஆண்டு விற்பனையான ரூ. 24 கோடியில் ரூ. 6 கோடி நூலாகவும், ரூ. 3 கோடி எம்பிராய்டரி துணிகளாகவும் சுமார் ரூ. 7 கோடி வேட்டி, லுங்கி வகைகளும் ரூ. 8 கோடி ரவிக்கைத் துணி வகைகளுமாக விற்பனை செய்யப்பட்டுள்ளது.

1994இல் உற்பத்தியில் மேலும் தன்னிறைவு கொள்ள (Backward integration என்ற முறையில்) அவர்களுக்குத் தேவையான நூல் இழைகளைத் தாங்களே தயாரித்துக் கொள்ள 'வீணா பிராஸசிங் மில்ஸ் லிட்.,'தொடங்க இருக்கிறார்கள். இங்கு 2/100s 60s 2/20s வரை இழைகளையும், 74 Ruti-Bloom, 102 cin co loom 12 Ruti-c loom வகைகளும் இவர்களே தயாரிக்க ரூ 16.5 கோடி மூலதனத்தில் வீணா பிராஸசிங் மில்ஸ் லிட்., நிறுவப்பட உள்ளது. அவற்றில் தற்போதைய பங்குதாரர்களுக்கு முன்னுரிமை அடிப்படையிலும், பொது மக்களுக்குப் புதிய பங்குகள் ரூ. 10 மதிப்புள்ள பங்குகள SEBIயின் அனுமதியின் பேரில் சுமார் ரூ.10 வரை கூடுதலாக (Premiumஇல்) வெளியிடத் தீர்மானிக்கப்பட்டுள்ளது என மானேஜிங் டைரக்டர் திரு இளவரசன் கூறினார்.

இந்தப் பங்கு வெளியீட்டிற்குப் பிறகு இவர்களது விற்பனையும், இலாபமும் கீழ்க்கண்டவாறு அமையும் என எதிர்பார்க்கப்படுகிறது.

★ அதிகப்படியா
நூலிழைகள் அகற்றப்படுகின்றன

| | | | |
|---|---|---|---|
| விற்பனை (ரூ) | 1993-94 | 1994-95 | 19 |
| | 250 லட்சம் | 302 | |
| நிகர லாபம் (வரி செலுத்திய பிறகு) ரூ. | 189 லட்சம் | 229 | |

1992 லிருந்து பங்குதாரர்களுக்கு 15% டிவிடெண்டு அளித்து வந்துள்ளது. தற்போது வெளிச் சந்தையில் இவர்களது பங்கு நல்ல விலையில் விற்பனையாகின்றது.

வீணையின் ஒலியிழை, நாதத்தில் சிறப்பு மிக்கது. வீணா டெக்ஸ்டைல்ஸ் நூலிழை, துணிகளில் சிறப்பு மிக்கது என்று கூறினால் மிகையாகாது.

— டி. ஆர். ஜி.



★ பவானி ஆறும் காவிரியும் சங்கம
ஆகும் இடம்



★ எம்பிராய்டரி துணிகள் தயாரிக்கும் இயந்திரம்



★ வண்ண நூல்கள் சாயம் தோய்க்கப்படுகின்றன



★ திரு அஸ்வின் முத்தையா (சேர்மேன் மாக் இண்டஸ்ட்ரீஸ்)



★ பாம் ஆயில் மரக்கன்றுகள்

# உணவுத் தொழிலில் மேக் இண்டஸ்ட்ரீஸ் புரியும் மாயம்!

"மனிதச் சக்தியை ஒரு செல வினமாக நாங்கள் கருதவில்லை. அதை ஒரு முதலீட்டு இனமாக நினைக்க ஆரம்பித்தோம்!" என்றார் மாக் இண்டஸ்ட்ரீஸ் சேர்மன் திரு அஷ்வின் முத்தையா. இவர் ஸ்பிக் உர நிறுவனத்தின் தலைவர் டாக்டர் ஏ.சி. முத்தையாவின் ஒரே புதல்வர்.

மாகோல் பயிர்களைப் பற்றி முன்னாள் மேனேஜிங் டைரக்டர் திரு லட்சுமணன் கூறியதை விட இது மேலும் புதுமையாக இருந்தது.

"இந்த எண்ணத்துடன் ஏதாவது செய்திருக்கிறீர்களா?" என்று கேட்டேன் நான்.

"ஆமாம்! இந்த நினைவுடன் தான் எங்கள் "வேர்ஹவுசிங் டிவிஷனை" 1984இல் தொடங்கினோம்" என்றார் அவர்.

"ஓ, கிடங்குகளா?" என்றேன் சாதாரணமாக.

"அப்படிச் சாதாரணமாகச் சொல்விடாதீங்க! நமது நாட்டின் ஏற்றுமதி இறக்குமதிக்கு இந்தக் கிடங்குகள் அவசியம்! தனியார் துறையில் நாங்கள் அங்கங்கே ஏற்படுத்தியுள்ள கிடங்குத் தொடர்கள் தென்னிந்தியாவிலேயே மிகப் பெரியவை!"

"இந்தக் கிடங்குகளில் தானியங்களைச் சேமித்து வைத்துக் கொள்வீர்கள். அவ்வளவுதானே!" என்றேன் நான்.

"முதலில் ஸ்பிக் நிறுவனத்தின் உரங்களை இங்கே வைக்கத் தொடங்கினோம். பின்னர் இதைத் தான் ஒரு சேவை அமைப்பாக விஸ்தரித்தோம். உரங்கள் மட்டுமல்ல! வேறுபல பொருட்களுககும் இது தங்குமிடமாகப் போயிற்று. மொத்தக் கணக்கில் உற்பத்திப் பொருள்களை எடுத்துச் செல்வது. பாதுகாப்பாக வைப்பது. விவசாயப் பொருள்களைச் சேமித்து வைப்பது இவை எல்லாம் எங்கள் கூடுதல் பணியாகப் போய் விட்டன!"

"இரண்டு மூன்று கிடங்குகள் வைத்திருப்பீர்களா?"

"சரிதான் போங்கள்! மொத்தம் எழுபது கேந்திர நகர்களில் இந்தக் கிடங்குகள் வைத்திருக்கிறோம். ஆந்திரா, கர்நாடகாவிலும் எங்கள் கிடங்குகள் உண்டு!" என்றார் அஷ்வின்.



★ இறால் உற்பத்தியில் மாக் இண்டஸ்ட்ரீஸ்



★ 'பாம் ஆயில்' தயாரிக்கத் தேவையான எண்ணெய் வித்துகள்



★ மாக் கிடங்குகள்!

மேலும் தொடர்ந்து, "தற்போது 10 லட்சம் சதுர அடி இடம் இதற்காகப் பயன்படுத்தப்படுகிறது. இதில் 5 கோடி ரூபாய் முடங்கி இருக்கிறது! இன்னும் கிடங்குகள் அமைப்பதில் வெகுவாக ஈடுபட்டுள்ளோம்!''

"ஆமாம். இதனால் மனித சக்திகளுக்கு என்ன பிரயோசனம்?''

"அப்படிக் கேளுங்கள்! நமது மனித சக்தி எமது விவசாயிகள் தான். விவசாய விளைவுப் பொருள்களை இங்கே நாங்கள் சேமிக்கவிருக்கிறோம். கடல் உணவுகளுக்கான குளிர்பதன அறைகளும் எம்மிடம் உண்டு".

"வைத்து என்ன பலன்?"

"அவை மூலம் விவசாயிகள் உற்பத்திச் செய்யும் விவசாயப் பொருள்களை, குறிப்பாக மிளகு, முந்திரி, உளுந்து, மாம்பழ வகைகளையும் கடல் உணவுகளையும் வீணடிக்காமல் விலைக்கு பெற்றுக் கொள்கிறோம். எங்கள் குளிர்பதன வசதியுள்ள லாரிகள் மூலம் இவைகளை இங்கு கொண்டு வந்து தகுந்த பக்குவங்கள் செய்து ஏற்றுமதியும் செய்கிறோம். நமது நாட்டுக்கும் விநியோகம் செய்கிறோம். இவ்வாறு பதப்படுத்தி ஏற்றுமதி செய்வதில் நல்ல லாபமும் கிடைக்கிறது. அந்நியச் செலாவணியும் கிடைக்கிறது! நமது ஏற்றுமதிகள் தற்போது யாவும் நமது பூமியிலிருந்து விளைபவையாகவே இருக்கும். இவைதான் நமக்குப் பெரும் சொத்து!"

"சரி நீங்களே எதாவது விவசாய உற்பத்தியில் ஈடுபட்டிருக்கிறீர்களா?"

"ஓ! அதிலும் இறங்கி இருக்கிறோம். கர்நாடகத்தில் எஸ்டேட்டுகள் வாங்கி 2000 ஏக்கரில் காப்பி பயிரிட்டு வருகிறோம். இந்தியாவிலேயே நான்காவது பெரிய எஸ்டேட்டுகள் இவை."

"மிளகு உண்டா?"

"ஓ! அதுவும் உண்டு. தவிர, தேக்கு, ரோஸ்வுட் போன்ற பெரிய பெரிய மர இனங்களையும்



★ முதிர்ந்த காப்பிப் பழங்கள்



திட்டமிட்டு நட்டு வருகிறோம். இதன் மூலம் வன விருத்தியும் செய்து வருகிறோம்".

"எல்லாம் ஏற்றுமதிக்கா?"

"பெரும்பாலும் அப்படித்தான். காப்பி, மிளகு வகைகளை சர்வதேச மார்க்கெட்டில் விற்கிறோம்."

"எண்ணெய் வித்துகள் ஏதாவது உண்டா?"

"அதுவும் உண்டு! பாமாயிலுக்கு வேண்டி நாங்கள் செம்பனை வளர்க்கிறோம். இந்தத் தோட்டம் ஆந்திரப் பிரதேசத்தில் விஜயவாடாவுக்கு அருகில் ஏலூரில் இருக்கிறது! இவை முதிர்ந்த பழங்களைத் தரும்போது இவைகளை நசுக்கி எண்ணெய் உற்பத்தி செய்ய மிகப் பெரிய ஆலை ஒன்றை மலேசிய உதவியுடன் நிறுவி வருகிறோம். ரூ. 20 கோடி வரைச் செலவாகும்."

"இதில் உப பொருள் வேறு கிடைக்குமில்லையா?"

"ஆமாம்! இவைகளிலிருந்து பெரிய சோப்புத் தொழில்களுக்கு வேண்டிய அமிலக் கொழுப்புகளைத் தயாரிக்க இருக்கிறோம்."

"முந்திரிப் பருப்பு மீதும் எங்களுக்கு நாட்டம் இருக்கிறது" என்றார் அஷ்வின் தொடர்ந்து.

"எனக்கும் நாட்டம் உண்டு!" என்றேன் சிரிப்புடன்.

"யாருக்குத்தான் இதில் பிரியமில்லை! நம் நாட்டில் இதை மட்டும் முறையாக வளர்ப்பதில்லை! இதற்காக நாங்களே அங்கங்கே பிரசார மையம் வைத்து விவசாயிகளும் இவற்றை விஞ்ஞான முறையில் வளர்க்க வழிமுறைகள் செய்து கொடுத்து வருகிறோம்! உற்பத்தியாகும் முந்திரியை நாங்களே நல்ல விலைக்கு வாங்குகிறோம். இப்போது அவர்கள் அதிக நாட்டம் காட்டி உள்ளார்கள்!"

"முந்திரி வளர்ப்பு சுலபமா?"

"சற்றேக் கவனம் எடுத்துக் கொண்டால் போதும்! மற்ற பயிர்கள் விளையாத இடங்களில் இவைகளை வளர்க்கலாம்! சொற்பச் செலவுதான் செய்ய வேண்டும். நல்ல பலனைக் கொடுப்பவை இவை."

"முந்திரியையும் ஏற்றுமதிச் செய்வீர்களா?"

"பெரும்பாலும் அதற்குத்தான் நன்கு பதப்படுத்தி தரமான உணவுப் பொருளாக ஏற்றுமதி செய்ய தகுந்த யந்திரங்களை வாங்கி இருக்கிறோம்".

"நாட்டுப்புறத்திலேயே கவனம் செலுத்துவீர்களா?"

"ஆமாம்! இந்தப் பகுதிகள்தான் நமக்கு விளைச்சல் தரும் பிரதேசம்! பல பொருள்களின் விளைச்சல்களை அதிகமாக்கி, ஏற்றுமதி செய்தாலே, நாட்டின் வறுமை சீக்கிரம் ஒழிந்து விடும்! இந்தத் துறையில்தான் எல்லாரும் இப்போது கவனம் வைக்க வேண்டும்!"

"சரி வேறு எதாவது?"

"அந்நியச் செலாவணி அளித்திடும் இறால் (ப்ரான்) வளர்ச்சியிலும் திரும்பியிருக்கிறோம்!

"ஓ! என்னென்ன செய்திருக்கிறீங்க?"

"தமிழ்நாடு, ஆந்திரா கடற்கரைகளில் எங்கள் நிறுவனத்தின் நடவடிக்கைகள் சுறுசுறுப்பாக நடந்து வருகின்றன. தூத்துக்குடியிலும், சென்னையிலும் இறால் பக்குவப்படுத்தும் தொழிற்சாலைகளை நிறுவியுள்ளோம். இவற்றுக்கான யந்திரங்களை ஸ்வீடனிடமிருந்துத் தருவித்துள்ளோம். ரூ. 5 கோடி முதலீட்டில் ஏற்படுத்தப்பட்டுள்ள இத் தொழிற்சாலைகள் வருடம் ஒன்றுக்கு ரூ. 20 கோடி வரை ஏற்றுமதி செய்யும்."

இறால் மீனை நீங்களே வளர்க்கிறீர்கள் இல்லையா?"

"ஆமாம்! வளர்ப்பு முறையே ஒரு விஞ்ஞான மயமான முறை! சரிவரச் செய்தால் சரிவர அவை வளர்ந்து நல்ல லாபம் தரும்".

"ஆமாம். இத்தனை விஷயத்துக்கும் வேண்டிய விஞ்ஞான முறைகளை மேல்நாட்டிலிருந்துதான் பெறுகிறீர்களா?"

"ஆமாம். அதே சமயம் ஆராய்ச்சி மையம் வைத்து அதில் ஆராய்ச்சிகளும் செய்து வருகிறோம். சீக்கிரம் புது வழிமுறைகள் கண்டுபிடிப்பதிலும் வெற்றி பெறுவோம்!"

அஷ்வின் முத்தையா உறுதி அளிக்கும் நம்பிக்கைக்குப் பின்னால் இந்தக் கம்பெனியின் மேனேஜிங் டைரக்டர் லட்சுமணன் உறுதுணையாக இருக்கிறார். அஷ்வின் புதுமைகளை வரவேற்று, புது வழிகளில் தைரியமாய் இறங்கும் இள வாலிபர். இவர் கையில் மேக் இண்டஸ்ட்ரீஸ் பெரும் சாதனைகளைப் படைத்து வருகிறது.

மேலிடத்து சேர்மன், தவிர லட்சுமணனுக்கு உதவுவதற்கு நிதி பொதுமேலாளர் ஆர். சிவகுமார், ரசாயனப் பிரிவு பொது மேலாளர் ஜி. காந்திராஜன், உணவுத்துறை பொது மேலாளர் திரு கே. ரவிக்குமார், விற்பனை பொதுமேலாளர் எம்.எஸ். ராஜகோபாலன், கடலுணவுத் துறை பொதுமேலாளர் சிவசாமிநாதன் ஆகியோர் திறம்படச் செயல்படுகின்றனர்.

மேக் சீக்கிரத்தில் தமிழ்நாடு அளாவிய ஒரு தொழில் நிறுவனமாக மாறப்போகிறது. இந்த நிறுவனத்தின் கையில் தமிழ் நாட்டின் வேளாண்மை சீக்கிரம் சுபிட்சம் அடைந்து விடும். இந்திய விவசாயிகளையும் உலகச் சந்தையையும் இணைக்கும் பாலமாக இருப்பதுதான் மேக் இண்டஸ்ட்ரீஸின் முக்கியக் குறிக்கோள். இவ்வாண்டு ரூ. 50 கோடி ஏற்றுமதி செய்து இருக்கிறார்கள். இங்கு சுறுசுறுப்புடன் வேலை செய்யும் இளம் மேலாளர்களைப் பார்த்தாலே இவர்கள் விரைவில் ரூ. 100 கோடி ஏற்றுமதி இலக்கை அடைந்து சாதனைபுரியாமல் விட மாட்டார்கள் என்பது தெரிகிறது

~புஷ்பா

சென்னை 2இல் உள்ள ஆர்.ஜே. பிராசஸ் ஆஃப்செட் அச்சகத்தில் அச்சிட்டவர் :
ஆர். ஜனார்த்தனன், ஸ்ரீராம் டிரஸ்ட், சென்னை 600 001 சார்பில் வெளியிட்டவர் : ஏ.வி.எஸ். ராஜா,
ஆசிரியர் - கலைமாமணி விக்கிரமன், நிர்வாக அலுவலகம், 145, லிங்கச் செட்டி தெரு,